**விழுப்புரம் மாநாட்டில் முதல்வரை விமர்சித்து ஆபாசமாகப் பேசியதற்காக தி.மு.க. பேச்சாளர் வெற்றி கொண்டான் கைது செய்யப்பட்டிருக்கிறார். மேலும் பல பேச்சாளர்கள் ஆபாசப் பேச்சுக்காக கைது செய்யப்படுவார்கள் என்றும் சொல்லப்படுகிறது. 'இதை எவ்வாறு அனுமதித்தீர்கள்?'' என்று தி.மு.க. முன்னணித் தலைவர்களில் ஒருவரான வீரபாண்டி ஆறுமுகத்திடம் கேட்டோம்.**

# ஆபாசத்தை அரங்கேற்றலாமா?

விழுப்புரம் மாநாட்டில் இரண்டாம் நாள் பேசிய பேச்சாளர்கள் முதல்வரை வலியுறுத்துவார். விழுப்புரம் மாநாட்டில் பேசிய ஐம்பதுக்கும் மேற்பட்ட பேச்சாளர்கள் குறிப்பிட்ட தலைப்புகளில்தான் பேசினார்கள். ஒரு சிலர் கைத்தட்டலைப் பெறுவதற்காகவும், காலை முதல் தொடர்ந்து பேச்சுக்களைக் கேட்டு வந்த தொண்டர்களுக்குக் கலகலப்பு ஊட்டுவதற்காகவும், கொஞ்சம் எல்லை மீறிப் போயிருக்கக்கூடும். அப்படி நகைச்சுவைக்காக சொல்லப்பட்டதை ஆபாசம் என்று போலீஸ் சொல்கிறது. ஆனால் மூன்று நாள் நடைபெற்ற மாநாட்டின் வெற்றியை திசை திருப்புவதற்காக, இது போன்ற அவதூறுகளைக் கிளப்பி விடுகிறார்கள் என்பதுதான் உண்மை. இது தான் சாக்கு என்று தி.மு.க.வினரின் குரலை அடக்குவதற்காகப் பேச்சாளர்களைப் பிடித்து உள்ளே போடுகிறார் ஜெயலலிதா! தி.மு.க.வின் ஒவ்வொரு தொண்டனும் பேச்சாளர் என்பதை அவருக்கு உணர்த்துவோம்.

**விமர்சனம் செய்யும் வகையில் முகம் சுளிக்கும்படியான ஆபாச அர்ச்சனைகளில் இறங்கியது தவறுதானே?**

ஆபாசப் பேச்சுக்களை எங்கள் தலைவர் கலைஞர் என்றுமே ஊக்குவித்ததில்லை. இன்னமும் சொல்லப்போனால் அவ்வப்போது, பேச்சாளர்களைச் சந்திக்கும் சமயம் மேடைகளில் கடைப்பிடிக்க வேண்டிய நாகரிகத்தையும் கண்ணியத்தையும்

**நகைச்சுவை என்ற பெயரில் எதிர்க்கட்சியினரைத் தனிப்பட்ட முறையில் தாக்குவதும் தரக்குறைவாகக் கிண்டல் செய்வதும்**

**என்ன நியாயம்?**

நகைச்சுவை என்ற பெயரில் ஆபாசத்தைப் பேசக் கூடாது என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் மாநாட்டுச் செய்திகள் மறைக்கப்பட்டு அக்கப்போர்களே கிளறி விடப்படுகின்றன. மாநாட்டு மேடையில் இப்படிப்பட்டப் பேச்சுக்கள் பேசப்பட்டபோது - கழக முன்னணியாளர்கள் யார் மேடையில் இருந்தனர் என்பது எனக்குத் தெரியாது. ஆனால் பல சந்தர்ப்பங்களில், பல பேச்சாளர்கள் பற்றிப் புகார்கள் வரும் பொழுது, அவர்களைக் கூப்பிட்டு கலைஞர் புத்திமதி கூறியுள்ளதை நான் அறிவேன்.

**மேடைகளில் ஆபாசமும், அருவெறுப்பும் தாண்டவமாட, அஸ்திவாரம் போட்டது திராவிட இயக்கங்கள்தான் என்ற பொதுவான அபிப்பிராயம் இருக்கிறதே!**

இப்படி ஒட்டுமொத்தமாக ஓர் இயக்கத்தைப் பற்றி விமர்சனம் செய்வது அக்கிரமம். பெரியார், அண்ணா, ஆகியோர் தங்கள் கொள்கைகளை, மிக கண்ணியமாகவும், நயத்தக்க நாகரிகத்தோடும் எடுத்து வைத்தார்கள். திராவிட இயக்க மேடைகள் மாலை நேரக் கல்லூரிகளாகப் போற்றப்பட்டன. அந்த பாரம்பரியத்தைத் தொடர்கிறார் கலைஞர். ஆனால் தமிழக மேடைகளில் ஆபாசத்தை அரங்கேற்றிய பெருமை அ.தி.மு.க.வுக்கு மட்டுமே உண்டு. அந்தக் கட்சி துவங்கியதிலிருந்து தான் தனிப்பட்ட தாக்குதல்கள் மேடைகளில் உலா வரத் துவங்கின. இன்னமும் சொல்லப்போனால், அ.தி.மு.க.வின் பெண் பேச்சாளர்கள் கூட அநாகரிகப் பேச்சுக்களைக் கொட்டினார்கள். கலைஞரைப் பற்றியும், கலைஞரது குடும்பத்தைப் பற்றியும் அன்றாடம் அ.தி.மு.க. மேடைகளில் ஆபாசமாக அர்ச்சிக்கப்படுகிறது. இதைக் கட்டுப்படுத்துவாரா ஜெயலலிதா? செய்யமாட்டார்! ஏனென்றால் அவரே அரசு மேடைகளைப் பயன்படுத்தி குட்டிக் கதைகள் என்ற பெயரில் கலைஞரை சாடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறாரே! எனவேதான் அவரது கட்சியினர் பதினாறடி பாய்கிறார்கள். அ.தி.மு.க. பேச்சாளர்கள் இப்படிப் பேசும்போது, அவர்களுக்கு பதிலடி கொடுக்க வேண்டுமென்று எங்கள் தொண்டர்கள் விரும்புகிறார்கள்.

**அ.தி.மு.க.வினர் தரக்குறைவாகப் பேசினார்கள் என்பதற்காக உங்கள் கட்சியும் அதே தப்பை செய்ய வேண்டுமா என்ன?**

தேவையில்லைதான். ஆனால் அ.தி.மு.க.வினர் பேச்சுக்கு அதே பாணியில் பதிலடி கொடுக்க வேண்டும் என்று தொண்டர்கள் எதிர்பார்க்கிறார்கள். எல்லா கட்சி மேடைகளிலும் கண்ணியம் தாக்கப்படுமானால், இதுபோல் ஒருவர் மீது ஒருவர் குற்றம் சாட்ட வேண்டிய அவசியம் இராது.

சந்திப்பு : **ப்ரியன்**

படம் : **மீடியா ராமு**




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**செ. ஏக்நாத் ராஜ்**
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.330/-**
**ஆறு மாதம் : ரூ.165/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : **62 யு.எஸ். டாலர்**
**இலங்கை : ரூ.2000/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# சூப்பர் ஸ்டாரா?

லேப்-டாப்பில் கண்களை மேய விடுகிற ஹைடெக் ஆட்கள் முதல், தோளில் வளையைக் கட்டிக் கொண்டு காட்டுக்குத் தேனெடுக்கச் செல்கிற கிராமத்துச் சிறுவன் வரை, விக்ரம் பற்றித்தான் பேசுகிறார்கள். அடுத்த சூப்பர் ஸ்டாரென்று!

தமிழகத்தில் சினிமாக் கலைஞர்களின் எழுச்சி அடிக்கடி நடக்கிற மாதிரி தோன்றும். ஆனால் அதில் உண்மையில்லை. கூர்ந்து கவனிக்கிற கலை, சினிமா, அரசியல் விமர்சகர்களுக்குத் தெரியும்; தமிழ்த் திரைப்படங்களில் எப்போதாவதுதான் மிகப் பிரம்மாண்டமாக ஒரு நடிகரின் விஸ்வரூபம் நடக்கிறது என்பது.

நம்முடைய தமிழ் சினிமாவுக்கு எப்போதும் தமிழக மக்களின் எதிர்கால அரசியல் விருப்பங்களைச் சேர்த்தே தீர்மானிக்கிற சக்தி உண்டு. அதனால்தான் முன்னணியில் இருக்கிற நடிகர்கள், கதாநாயகர்கள் மேல் நம்முடைய அரசியல்வாதிகள் ஒரு சந்தேகப் பார்வையை வைத்துக் கொண்டே இருப்பார்கள். முன்னணி நடிகர்கள் தமக்குச் சாதகமாக இல்லாவிட்டாலும், தமது கட்சிக்கு எதிராகப் போய்விடாமல் நிச்சயம் பார்த்துக் கொள்ள முயற்சிப்பார்கள். நடிகர்கள் தமக்குப் பகிரங்க ஆதரவு தெரிவிக்க மாட்டார்களா? என்று சில அரசியல் தலைவர்களுக்கு இலேசான ஏக்கம் கூட இருப்பதைக் கவனிக்கலாம்.

இப்படி சினிமாத் துறையில் பெரும் சக்தியாக மாறிவிடுவார்கள் என்று எல்லோரையும் விமர்சகர்கள் நினைப்பதில்லை. அவர்களுக்குத் தெரியும், சில நடிகர்களுக்கு இயல்பாகவே அலை அடிக்கிறதென்று. அது சுலபத்தில் அடங்கிவிடும். ஆனால் சிலர் ரசிகர்களின் அபிமானத்தைப் பெற்று, மிகப் பெரும் மக்கள் கலைஞனாக மாறுவதை அவர்கள் எப்போதும் கவனிக்கத் தவறுவதில்லை. இந்த மாற்றம் எல்லோருக்கும் நடந்து வருகிறதா?

இல்லை. பல வருடங்களுக்குப் பிறகு மக்கள் மனத்தில் ஒரு கலைஞனுக்குக் கிடைக்கிற அங்கீகாரம் இது. ஒரு உருமாற்றம். இது வெறும் யானை மாலை போடுகிற கதையல்ல. இந்தச் சக்தியை அடைவதற்கு அந்தக் கலைஞன் கொடுக்கிற விலை கொஞ்ச நஞ்சமல்ல. தெரிந்தும் தெரியாமலும், அந்தக் கலைஞனுடைய மனப்போக்கும் இதைத் தீர்மானிக்கிறது.

தன்னை யாராக ஸ்தாபித்துக் கொள்ள விரும்புகிறான் என்கிற விருப்பமும் இதில் சேர்ந்து கொள்கிறது. அதாவது, தம்முடைய ஆற்றலைப் புரிந்து கொண்டு, ஒரு நடிகன் தேர்ந்தெடுக்கிற கதைக்களம் அதில் அந்த நடிகனுடைய கதாபாத்திரம் போன்றவை அவன் பிம்பத்தை வளர்க்கின்றன.

இதில் தெரிந்தும் தெரியாமலும் தங்களை வெற்றியாளனாக மாற்றிக் கொண்டவர்கள் எம்.ஜி.ஆரும், ரஜினிகாந்தும்.

இப்போதும் கலை, சினிமா, அரசியல் மாற்றங்களைக் கூர்ந்து கவனிக்





இறவர்கள், விக்ர மைப் பார்த்துக் கண் சிமிட்டுகிறார் கள். இந்தக் கண் சிமிட் டலுக்கு அர்த்தம், விக்ரம் சூப்பர் ஸ்டார் என்பதுதான்.

ஒரு படம் வெற்றி பெற்று மிகப் பெரிய வசூலை அள்ளிக் குவித்தால், அதன் கதா நாயகனுக்கு சூப்பர் ஸ்டார் என்ற அந்தஸ்து கிடைத்து விடுமா? 'இல்லை' என்பதுதான் பதில். ஏனென்றால், உலகம் முழுக்க டைட்டானிக் நாற்பத்தைந்தாயிரம் கோடி டாலர் வசூலித்திருக்கிறது. இது உலக சாதனை. ஆனால் இதன் ஹீரோ டிகாப்ரியோ சூப்பர் ஸ்டார் இல்லை என்பது எல்லோருக்கும் தெரியும்.

சரி, தொடர்ந்து வெற்றியையே கொடுத்தால் சூப்பர் ஸ்டாரா என்றால், இது எந்த கதாநாயகனுக்கும் நடக்கவில்லை. வெற்றி

## ரஜினியின் கருத்துதான் எனக்கும்!

**கேள்வி :** நீங்கள்தான் இப்போதைய சூப்பர் ஸ்டார் என்று எல்லோரும் பேசிக் கொள்கிறார்களே? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

**விக்ரம் :** உலகம் முழுவதும் எல்லா சூப்பர் ஸ்டார்களையும் உருவாக்குவது ரசிகர்கள் தான். என்னைப் பொறுத்தவரை ரசிகர்கள்தான் எப்பவும் சூப்பர் ஸ்டார். மற்றபடி ரஜினிசார் 'சாமி' வெற்றி விழாவுல பேசினது மாதிரி, 'சூப்பர் ஸ்டார் பதவி எப்பவும் இருக்கும். ஆட்கள் மாறிட்டே இருப்பாங்க. அவ்வளவுதான். இதே கருத்துதான் எனக்கும்.

தோல்வி இரண்டுமே கலந்தேதான் எல்லா நடிகர்களின் சினிமா வாழ்க்கையும் இருந் திருக்கிறது - எம்.ஜி.ஆர். ரஜினிகாந்த் உட்பட.

இப்படிச் சில கேள்வி பதில்களை வைத்துப் பார்த்தால், சூப்பர் ஸ்டார் ஆவ தற்கு அந்தந்த காலத்துக்குத் தகுந்த மாதிரி பொருந்துகிற நிகழ்ச்சி சிலருக்கு நடந்திருக் கிறது. அல்லது, சிலர் அதை நடத்திக் கொள் கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள முடியும். அப்படிப்பட்டவர்கள் தமிழ் சினிமா உலகில் சூப்பர் ஸ்டார் அந்தஸ்தை அடைந்திருக்கிறார்கள்.

எம்.ஜி.ஆர். புகழ் பெற்றிருந்த அதே நேரத்தில் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் இருந்தாலும், சூப்பர் ஸ்டார் அந்தஸ்து இவருக்குத்தான் கிடைத்தது. அதற்குச் சில காரணங்களைச் சொல்லலாம். அந்த நேரத் தில் முதியவர்களை மதிப்பவன், கெட்டப் பழக்கங்கள் இல்லாதவன், பெண்கள் பின்னால் அலையாதவன் போன்ற குணங் களை உடையவராக எம்.ஜி.ஆர். தமது கதா பாத்திரங்களை நிர்ணயித்தார். பின்னால் அவருக்கு அரசியல் ஆசை எழுந்தபோது முதலாளியை எதிர்ப்பவன், ஊருக்காக உழைப் பவன் என்ற அடையாளங்களையும் தனது கதாபாத்திரத்தோடு சேர்த்துக் கொண்டார்.

இதற்கு நேர்மாறான கதாபாத்திரங்களை சிவாஜி கணேசன் தேர்ந்தெடுத்தார். நடிகர் திலகம் என்ற பட்டம் சிவாஜிக்கும், நாட்டுக்குத் தேவையானவர் என்ற நினைப்பு எம்.ஜி.ஆருக்கும் வந்து விழுந்தது.

மெல்ல காலம் மாற, மேலை நாட்டுப் படங்கள், கலாசாரம் நமக்குப் பிடிக்க ஆரம் பித்ததும், பெண்கள் பின்னால் சுற்றுவது, சிகரெட் பிடிப்பது, காதலிப்பது இளமையின் அடையாளங்களாகப் பார்க்கப்பட்டது. ரஜினிகாந்தும் கமலஹாசனும் இரண்டையும் செய்தார்கள். கொள்ளையடித்தாலும் பரவா யில்லை, அந்தப் பணத்தில் ஊருக்கு உத வினால் நல்லவன் என்று மக்கள் நினைத்தார் கள். பில்லா, ரங்கா, பாயும்புலி என்று ரஜினி ஸ்டைல் காட்ட, கமலுக்கு வித்தியாசங் களின் மேல் விருப்பம் வந்தது. விளைவு, கமல் நடிகர் திலகத்தின் வாரிசாக, ரஜினி எம்.ஜி.ஆரின் வாரிசாக, பெரும் அன்புக்கும், புகழுக்கும் பாத்திரமானார்.

ஒரு காலத்தில் நல்லவன் என்ற அடை யாளத்தை வைத்திருப்பவரை மக்கள் விரும் பினார்கள். அதற்கு எம்.ஜி.ஆர். பொருந் தினார். அடுத்த ஒரு காலகட்டத்தில் கெட்ட விஷயங்கள் செய்தாலும், அதன் மூலம் மக்களுக்கு நல்லது செய்கிற ஹீரோவை விரும்பினார்கள். இதற்கு ரஜினி பொருந் தினார். இதில் இருவரும் பெரிதாக நடிக்க வில்லை.

இப்போது மக்களுக்கு மூன்றாவது தேவை வந்துவிட்டது. நல்லவன் ஒரு தேவை. நல்லவன் ப்ளஸ் கெட்டவன் ஒரு தேவை. நல்லவன் ப்ளஸ் கெட்டவன் ப்ளஸ் நடிகன் என்கிற மூன்றாவது தேவை. அந்த மூன்றா வது தேவைக்கு விக்ரம் வந்து சேர்ந் திருக்கிறார்.

இந்த மூன்று காலகட்டத்திலும் மக்கள் ஒரே ஒரு விஷயத்தைத்தான் தங்களுடைய சூப்பர் ஸ்டாரிடம் எதிர்பார்த்தார்கள். இப் போதும் எதிர்பார்க்கிறார்கள். அது தனி மனித ஒழுக்கம்.

இனி சூப்பர் ஸ்டார் என்கிற பதவியும் விக்ரமும்.

**- மிஸ்டர் லீ**



### நாலணா கேட்டால் காலணா!

"ஆஸ்கருக்கு கதை பண்ணுவது பெரிய வித்தையல்ல. நம் கிராம, நகர கதைகளே போதும். ஆனால் நடிப்பவர்களுக்குக் கதை பண் வது கோளாறு. அது குதிரைக்கு முன்னால் வண்டியைக் கட்டுவது மாதிரி. தமிழ் சினிமா ஆஸ்கர் செல்ல வேண்டுமென்றால், அது வியாபார நோக்கங்களிலிருந்து வெளிவர வேண்டும்.

வியாபாரத்தை எதிர்பார்க்காத ஒரே தயாரிப்பாளர் என்.எஃப்.டி.சி.தான். ஆனால் அவர்களிடம் நாலணா கேட்டால் காலணா தருவார்கள்."

- ஆர்.சந்திரன் எழுதிய 'ஆஸ்கர் அ முதல்' நூல் வெளியீட்டு விழாவில் சுஜாதா.

# சாதனைப் பெண்மணி சாந்திமணி!

## ஆண்டுதோறும் நான்குமுறை தள்ளுபடி விற்பனை!

சென்னையில் போக்குவரத்து நெரிசல் மிக்க பகுதியாக இன்றைக்கு விளங்கும் அடையாறில் சுமார் ஐந்தாண்டு காலமாக 'Gokul Arcade'ல் புடவை தொழிலில் வெற்றி நடைபோட்டு கொண்டிருக்கும் சாந்திமணி சாரிஸ் உரிமையாளர் சாந்திமணி நம்மிடம் தன்னுடைய தொழிலின் வெற்றி ரகசியங்களை பகிர்ந்து கொள்கிறார்.

எனக்கு சிறு வயதிலிருந்தே ஏதாவது ஒரு சாதனை செய்ய வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. என்னுடைய திருமணத்திற்கு பிறகு நான் எனது இல்லத்திலேயே சிறிய அளவில் புடவை வியாபாரம் செய்து வந்தேன். மிகக் குறுகிய காலத்திலேயே வாடிக்கையாளர்கள் நிறைய கிடைக்க, இடம் பற்றாக்குறையால் எனது இல்லத்திற்கு அருகிலே உள்ள இந்த Gokul Arcade கடை எண் 5, டிசம்பர் 13 தேதி, 1998 அன்று தொடங்கினேன்.



எங்கள் கடையில் வருடத்திற்கு நான்குமுறை தள்ளுபடி விற்பனை செய்கிறோம். கோடை கால தள்ளுபடி, ஆடி தள்ளுபடி, நவராத்திரி மற்றும் தீபாவளி தள்ளுபடி என 10% முதல் 20% வரை தள்ளுபடி விற்பனை செய்கிறோம். இந்த தள்ளுபடி விற்பனை தமிழகத்தில் நாங்கள் மட்டும்தான் நான்கு முறை செய்கிறோம். இந்த தள்ளுபடி விற்பனையில் எங்கள் கடைக்குப் புதிய புதிய வாடிக்கையாளர்கள் வருவதால் வியாபாரமும் நல்ல சிறப்பாக நடக்கிறது.

வாடிக்கையாளர்களுடைய விருப்பத்திற்கேற்ப பல வண்ண டிசைன்களில் ஆர்டரின் பேரில் புடவைகளை செய்து தருகிறோம். எங்களிடம் *ராணி சாரிஸ், காஞ்சி காட்டன், கத்வால், சில்க் காட்டன், செட்டிநாடு, மங்களகிரி, அனைத்து மாநில காட்டன் புடைவைகள், பாவஞ்சி பாவாடை, சல்வார்,* சுடிதார் மெடிரியல் இது தவிர 9½ 10½ கஜம் போன்றவை எங்களிடம் தரமான, நியாயமான விலையில் கிடைக்கும்.

இந்த தீபாவளி சிறப்பு தள்ளுபடியாக விற்பனை upto 20% செய்துள்ளோம். இந்த பேட்டியை கொண்டு வருபவர்களுக்கு மேலும் 2% விற்பனையில் தள்ளுபடி செய்து தருகிறோம்.

இந்த வருட தீபாவளிக்கென்று பாரம்பரியமிக்க டிசைன்களில் சில்க் காட்டனில் ஜரிகை புட்டா, கட்டம், வைர ஊசி, டிஷ்யூ, கங்கா ஜமுனா புடவைகள் பிரத்தியேகமாக தயாரிக்கப்படுகிறது. சில்க் காட்டனில் சல்வார் செட், பாவாடை மற்றும் 9½ 10½ கஜம் புடைவை எங்களிடம் கிடைக்கிறது. மற்றும் எல்லா மாநிலங்களிலிருந்தும் டிசைனர் சில்க், Tusser, Fancy Embroidery புடவைகளும் பல வண்ண நிறங்களில் எங்களிடம் கிடைக்கும்.

இந்த புடவை வியாபாரத்தில் எங்களுக்கென்று தனி இடத்தில் சிறப்பாக இருப்பதற்கு காரணம் அன்பு நிறைந்த வாடிக்கையாளர்கள்தான். "வாடிக்கையாளரின் திருப்தியே எங்களுடைய திருப்தி" என்ற தாரக மந்திரத்தை கொண்டு மேலும், பல சாதனைகளை வியாபாரத்தில் எதிர்வரும் காலத்தில் செய்ய உள்ளோம் என்றார் சாந்திமணி நாம் விடைபெறும்போது.

# சாந்திமணி சாரீஸ்

கடை எண். 5, அடித்தளம், கோகுல் ஆர்கெட், எண்.2, சர்தார் பட்டேல் ரோடு, (அடையார், சிக்னல் அருகில்) அடையார், சென்னை - 20 Ph. 24451309/52117005

| *Tailoring undertaken* | Wholesale & Retail<br>All Major Credit Cards are accepted | ஞாயிறு கடை உண்டு |
|---|---|---|

**Starching & Polishing All Sarees.**

ADVT








# 'மைசூர்பா'வுக்கு ஆராய்ச்சிக் கூடம்!

நினைத்தாலே இனிக்கும் இருநூறு வகை இனிப்பு, காரங்கள் வகைகள். நமது கோவை விசிட்டின்போது மூன்று மெகா தட்டுக்களில் மொத்தம் நூற்றுப் பதினேழு அயிட்டங்கள் மாதிரிகளாக வைக்கப்பட்டிருந்தன. அடடா! நம்மைத்தான் ருசிக்கச் சொல்லப் போகிறார்கள் என்று நாக்கைச் சுழற்றிக் கொண்டு உள்ளே போனால், குட்டி வாண்டு ஹரிபிரசாத்துடன், அவனது பெற்றோர் மணிகண்டனும், ஜெயக்குமாரியும் ஒவ்வொன்றாக ருசித்துக் கொண்டே, தரக்காப்பாளர் முத்துக்குமாரசாமியிடம் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.



• ரெஃப்ரெக்டோ மீட்டர்



• ஆராய்ச்சிக் கூடம்

தரக் காப்பாளர்? அட ஆமாங்க, கோவை ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் தனது தயாரிப்புகளுக்குத் தனி தரக்காப்பாளரையே நியமித்திருக்கிறார்கள். "தினசரி இரண்டு வாடிக்கையாளர்களைக் கூப்பிட்டு, எங்கள் இனிப்பு கார, வகைகளைச் சுவைத்து, கருத்து, புத்தகத்தில் சுவை, தரம் பற்றி எழுதச் சொல்வோம்" என்கிறார் தரக்காப்பாளர்.

பத்து லட்ச ரூபாய் செலவில் தனக்கென்று தனி லேப் வசதியையும் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் முதல் இனிப்பு விற்பனை நிறுவனமும் இதுதான் போங்கள்! இந்த லேபில் தண்ணீர் முதற்கொண்டு, நெய் வரை அனைத்து மூலப் பொருட்களின் தரத்தையும் பரிசோதித்து, கலப்படத்தை நீக்குகிறார் முத்துக் குமாரசாமி. அதுசரி நெய்யின் தரத்தை எப்படி அறிகிறார்கள்? இதற்கென்றே ரெஃப்ரெக்டோ மீட்டரை வைத்திருக்கிறார்கள். இதில் ஒரு துளி நெய்யை விட்டதும் ரீடிங் மீட்டரில் நாற்பத்து நான்கைக் காட்டியது. மீட்டரில் 41.0 முதல் 44 வரை காட்டினால்தான் தூய தரமாம். வாயடைத்துப் போய் ஆர்.எஸ். புரம் ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் கிளைக்கு வந்தால்.. வாடிக்கையாளர்கள் காலணிகளை வெளியே விட்டுவிட்டு உள்ளே சென்றபடி இருந்தனர். நாமும் நுழைந்து பார்த்த பிறகுதான் தெரிந்தது! அந்தக் கிளையை ஓர் ஆலயம் போலவே பராமரிக்கிறார்கள். பவானி அம்மனுக்கு குருக்களின் பூஜையும் நடக்கிறது. ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் வாடிக்கையாளர்களின் நாவில் மட்டுமல்ல... இங்கே உள்ளத்திலும் சிம்மாசனம் போட்டு உட்கார்ந்திருக்கிறார்கள்!

- ஜெ

# நாயுடு vs நக்ஸலைட்!





நக்ஸலைட்டுகளின் கண்ணி வெடி தாக்குதலில் ஆந்திர முதல்வர் சந்திரபாபு நாயுடு உயிர் தப்பியதால், நாடே நிம்மதிப் பெருமூச்சு விட்டிருக்கிறது என்று சொல்லலாம். ஏதாவது அசம்பாவிதம் நடந்திருக்குமானால், அது மாநில அரசின் பாதுகாப்பு அமைப்புகளின்மீது அழியாக் கறையாக படிந்திருக்கும். ஆந்திரக் காவல் துறை இப்படி ஒரு தாக்குதலை திருப்பதி மலைப்பாதையில் எதிர்பார்க்கவில்லை என்பது தெளிவாகிறது.

சந்திரபாபு நாயுடு மட்டுமல்லாமல், மேற்கு வங்க முதல்வர் புத்ததேவ் பட்டாச்சார்யா, ஜார்கண்ட் முதல்வர் பாபுலால் மராண்டி ஆகியோரும் மக்கள் போர்க் குழுவின் கொலைப் பட்டியலில் இருக்கிறார்கள். இது பற்றி மிகத் தெளிவாகவே P.W.G. (People's War Group) எனப்படும் மார்க்ஸிய லெனினிய அமைப்பு தனது வெப்சைட்டில் சொல்லியிருக்கிறது.

பாதுகாப்பு ஏற்பாடுகளில் நிகழ்ந்துள்ள குறைபாடை ஆராய உத்தரவிட்டுள்ளது ஆந்திர அரசு. ஆய்வுப் பொறுப்புக்கென ஒரு தனி அமைப்பு தோற்றுவிக்கப்படுமாம்.

ஆய்வெல்லாம் நடப்பதற்கு முன்பாகவே வெளிச்சத்துக்கு வந்துள்ள ஓர் உண்மை மிகுந்த அதிர்ச்சி தருகிறது. நாயுடு பயணிக்கவிருந்த பாதையில் வைக்கப்பட்ட 'கிளேமோர்' ரக கண்ணி வெடிகளை, ஆந்திர காவல் துறையின் 'டிடெக்டர்' கருவிகளால் கண்டுபிடிக்க முடியவில்லை. Deep Search Metal Detectors என்ற அக்கருவிகளுக்கு டிமிக்கி கொடுத்த கண்ணிவெடிகள் தயாரிக்கும் தொழில்நுட்பம் எல்.டி.டி.ஈ.யின் உபயம் எனத் தெரிய வருகிறது. செவ்வக வடிவ தகர டப்பாக்களில் ஜெலடின் குச்சிகளுடன் கனிமத்துகள்கள், சிறு இரும்புக் குண்டுகள் அடங்கியிருக்கும். வெடிக்கிற போது பரவலாக அவை சிதறி பலத்த சேதம் உண்டாக்கும்.

இந்தத் தாக்குதலைத் தொடர்ந்து நக்ஸலைட் பிரச்னை மீண்டும் முன்னணிக்கு வந்திருக்கிறது. 1992ல் இந்தப் பிரச்னையைப் பற்றி ஆராய ஒரு கமிட்டி போடப்பட்டது. அந்த கமிட்டி கொடுத்த அறிக்கை மத்திய அரசின் உள்துறை அலுவலகத்தில், இரண்டு மூன்று வருடங்களாக தூசி படிந்திருக்கிறது.

தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனநாயக அரசு மக்களின் நியாயமான பிரச்னைகளைத் தீர்த்து வைத்து ஒரு நம்பிக்கையை அவர்களிடம் உருவாக்க வேண்டும். அது நடக்காத பட்சத்தில் ஒரு சிலர் இது போன்ற தீவிரவாதக் குழுக்களின் சித்தாந்தங்களில் சிக்கிக் கொண்டு விடுகிறார்கள். ஆகையால் பிரச்னையை சமாளிப்பதில் நமது ஆளும் அரசியல்வாதிகளுக்கு நிறையவே பொறுப்பிருக்கிறது. அதில் தவறுவார்களேயானால் வன்முறையே வாடிக்கையாகிவிடும்.

- கௌசி

இராமேஸ்வரத்தில் தீபாவளி அமாவாசையன்று அன்னதானமிடுவது பெரும் புண்ணியத்தைக் கொடுக்கும் !

# பரிகார ஸ்தலமான இராமேஸ்வரத்தில்

# தீபாவளி அமாவாசை நாளில்

## அக்னி தீர்த்தத்தில் தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள் !

ஜெகத்குரு காஞ்சி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அனுகிரகத்துடன் பேரின்பமும், பெருவாழ்வும் தரும் புண்ய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி **தீபாவளி அமாவாசையன்று** அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்குகொள்ள அன்புடன் அழைக்கிறோம்...

**பேரன்புடையீர் ! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ இராமநாத சுவாமி தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

பன்னிரெண்டு ஜோதிர்லிங்க ஸ்தலங்களுள் ஒன்றான இராமேஸ்வரத்தில் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீ இராமநாத சுவாமி உடனிருந்து அருள் பாலிக்கிறார். மூர்த்தி, தீர்த்தம், ஸ்தலம் மூவகையாலும் இராமேஸ்வரம் சிறப்புற்று சிவ விஷ்ணு ஸ்தலமாக பிரகாசிக்கிறது. **மாங்கல்ய தோஷம், புத்திர தோஷம், செவ்வாய் தோஷம், நாக தோஷம்** போன்ற எல்லா விதமான தோஷங்களுக்கும் பரிகாரத்தலமாக இராமேஸ்வரம் விளங்குகிறது. இத்தகைய சிறப்பு மிக்க புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நேரில் சென்று அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்ய இயலாத அன்பர்களுக்காக, "**ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்**" மூலம் அன்னதானத் திருப்பணி நடைபெறுகிறது. புண்ணிய பூமி இராமேஸ்வரத்தில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும் அன்னதானம் அளிக்கும் பணியிலும், குடும்பம் நலம் பெற அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றும் பணியிலும், நாமும் பங்கு கொண்டோம் என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

தங்கள் சார்பாக அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்ய தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பலாம்.

- **ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**
- **ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**
- **ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.**

அன்னதானத்திற்கும் , அக்னி தீர்த்தத்திற்கும் தீபம் ஏற்றுவதற்கு நன்கொடையை அனுப்புவோர் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத்தெரிவித்தால், அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை தினத்தில் இராமேஸ்வரத்தில் அக்னிதீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ. 1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட "கோடி தீர்த்த சொம்பும்" வலம்புரி சங்கும், ஸ்ரீ பர்வத வர்த்தினி சமேத ஸ்ரீ இராமநாத சுவாமி வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும். ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு, ஆறு வருடங்களுக்கு அன்னதானம் செய்து "இராமலிங்க தீபமும்" 336 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள "ஸ்ரீமத இராமாயணம்" புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

குடும்பத்தில் மூதாதையர்களுக்கு இராமேஸ்வரத்தில் நேரில் சென்று தர்ப்பணம்.செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "**ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்**" மூலம் தர்ப்பணம் செய்யப்படுகிறது. பித்ருகளை குறித்து இராமேஸ்வரத்தில் செய்யப்படும் தர்ப்பணம் செல்வம், கீர்த்தி, ஆயுள், ஸ்வர்க்கம் முதலிய நன்மைகளை அளிக்கும். எதிரிகளை விலக்கும். தன் வம்சம் தழைத்தோங்கச்செய்யும். மறைந்த முன்னோர்களுக்கு தர்ப்பணம் செய்ய ரூ. 750 அனுப்பும் போது யாருக்கு தர்ப்பணம் செய்ய விரும்புகிறீர்களோ, அவரின் பெயர், மாதம், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். மூர்த்தி, ஸ்தலம், தீர்த்தம் ஆகிய மூவகையாலும் சிறப்பு வாய்ந்த இராமேஸ்வரத்தில் தர்ப்பணம் செய்து கிடைத்தற்கரிய பேரருளைப் பெற்று க்ஷேமமாக வாழுங்கள்.

இராமேஸ்வரத்தில் அமாவாசை நாளில் அன்னதானம் செய்ய விரும்பும் அன்பர்கள் சார்பாக தாங்கள் என்ன வேண்டுதலுக்காக அக்னிதீர்த்தத்திற்கு தீபம் ஏற்ற வேண்டும் என்பதையும், உங்கள் பெயர், நட்சத்திரத்தையும் குறிப்பிட்டு எங்களுக்கு எழுதி அனுப்பினால் அதன்படி அமாவாசை நாளில் அக்னி தீர்த்தத்திற்கு தீபம் ஏற்றி தங்களுக்கு பிரசாதம் அனுப்பிவைக்கப்படும். தீபமேற்றும் பணியிலும், அன்னதானப்பணியிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque / D. D/ M. O. மூலம் Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4 என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். பெருவாழ்வும் , பேரின்பமும் அளிக்கும் புண்ணிய க்ஷேத்ரமானஇராமேஸ்வரத்தில் நடைபெறும் இச் சிறந்த அன்னதானப் பணியிலும், அக்னிதீர்த்தத்திற்கு தீபவழிபாட்டு பணியிலும் பங்கு கொண்டு முன்னோர்களின் நல்லாசிகளைப் பெற உங்களை அழைக்கிறோம்.

ஸ்ரீ பர்வதவர்த்தினி தாயார்

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

**TEL : 2495 9302, E-mail:siva siva @ vsnl.net**


ஸ்ரீ இராமநாத சுவாமி

இராமேஸ்வரத்தில் பித்ருக்களுக்கு தர்ப்பண பூஜை செய்வது ஒவ்வொருவரின் இன்றியமையாத கடமையாகும்.




## கவலை தரும் கல்பாக்கம்

கல்பாக்கம் அணுமின் நிலையம் குறித்து தமிழக மக்கள் மட்டுமின்றி, பாரதமே பெருமிதம் கொள்வதில் நியாயம் இருக்கிறது. ஆனால், எந்தக் கனவுக்குப் பெருமிதம் கொள்கிறோமோ, அதே அளவுக்குக் கலக்கமும் எச்சரிக்கை உணர்வும் கொள்ள வேண்டும் என்பது பெரும்பாலான மக்களுக்குத் தெரியாது, புரியாது.

நீர் அல்லது அனல் மின் உற்பத்தியை ஒப்பு நோக்க, அணு மின் உற்பத்தி என்பது செலவு அதிகமானாலும்கூட, விரைவாக, நிரந்தர, நீடித்த பலனைத் தரவல்லது. நதிநீர் தட்டுப்பாடு, நிலக்கரித் தட்டுப்பாடு போன்ற பாதிப்புகள் இராது. ஆனால், இம்முறையில் அடங்கியிருக்கும் அபாயங்கள் எப்போதும் குறைத்து மதிப்பிடப்படுகின்றன; அல்லது மறைக்கப்படுகின்றன.

அணுமின் நிலையங்களினால் பலவிதமான அபாயங்கள் உண்டு. பரவலாக அறியப்படுபவை மூன்று.

முதல் அபாயம், அணுக் கலங்களுக்கருகே பணியாற்றுவோருக்கு, கதிர் வீச்சினால் விளையும் உடல் சேதம். அணு பிளவுறும்போது வெளிப்படும் கதிர்வீச்சுக்குத் தொடர்ந்து உள்ளாகும்போது, ஊழியர்களின் ஆரோக்கியத்துக்கு ஆபத்து ஏற்படுகிறது. எவ்வளவுதான் முன்னெச்சரிக்கையாக இருந்தாலும், கதிர் வீச்சின் பாதிப்புக்கு ஓரளவு உள்ளாகத்தான் செய்கிறார்கள். இதன் பின் விளைவுகள் முற்றிலுமாக ஆராயப்படவில்லை.

கல்கி

2003 அக்டோபர் 12
சுபானு புரட்டாசி 25
மலர் : 62
இதழ் : 11

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




இரண்டாவது அபாயம், அணுமின் நிலையங்கள் வெளிப்படுத்தும் கழிவுகளால் ஏற்படுவது. கழிவுகளை உரிய முறையில் காற்றுக்கூட புகமுடியாதபடி 'சீல்' வைத்து, பூமியில் ஆழப் புதைத்தாலும், கடலின் அடிவாரத்தில் மூழ்கடித்தாலும், அவற்றில் ஊறு விளைவிக்கும் கதிரியக்க எச்சங்கள் இருப்பதைத் தவிர்க்க முடியாது. சுற்றுச் சூழலில் இவை நாளடைவில் அபாயகரமான மாசுகளைப் பரப்புகின்றன. பூமியின் எப்பகுதி மாசுபட்டாலும் அது மனித இனத்துக்கு பாதிப்புதான்; அபாயம்தான்.

மூன்றாவது அபாயம், இத்தகைய அணுமின் நிலையங்களில் நேரக் கூடிய விபத்துகளின் அச்சுறுத்தல்.

என்னதான் பாதுகாப்பு முறைகளும் தரக் கட்டுப்பாடு நிர்ணயங்களும் கடைப்பிடிக்கப் பட்டாலும் அவற்றையெல்லாம் மீறி நிகழ்வதுதான் விபத்து.

நம் நாட்டில் நிகழ்ந்த ஆலை விபத்துகளில் யூனியன் கார்பைட் நிறுவன ரசாயனக் கசிவு பயங்கரம் மிகப் பெரியது. அதன் விளைவுகள் எவ்வளவு கொடூரமாக இருந்தன என்பதை நாம் பார்த்தோம். ஓர் அணுமின் நிலைய விபத்தில் ஏற்படக் கூடிய கசிவின் விளைவுகள், அதைப் போல் பல்லாயிரம் மடங்கு கொடூரமானதாக இருக்கும். அதன் பாதிப்பு பல தலைமுறைகளுக்குத் தொடரும். கூன், குருடு, செவிட்டுச் சந்ததிகளையும், மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைகளையும் பிறப்பிக்கும்.

இந்த விளைவுகளையெல்லாம் கருதும்போது, கல்பாக்கத்தில் 3492 கோடி ரூபாய் செலவில் புதிதாக அமைக்கப்படவிருக்கும் ஐந்நூறு மெகாவாட் அதிவேக அணுமின் உற்பத்திக் கலம் குறித்து நாம் கவலையே கொள்ள வேண்டியிருக்கிறது.

நமது விஞ்ஞானிகள் 25 ஆண்டுகளாக உழைத்து, ஆராய்ச்சியில் ஈடுபட்டு, இந்த அதி நவீன அணுமின் உற்பத்திக் கலத்தை வடிவமைத்துள்ளார்கள் என்று அறிகிறோம். நம் நாட்டிலே யுரேனியம் கனிமத்தின் அளவு மிகவும் குறைவு. அயல்நாடுகளிலிருந்து யுரேனியம் இறக்குமதி




செய்ய உலக அளவில் தடை இருக்கிறது. இந்நிலையில், இப்புதிய புளூடோனியம் தொழில்நுட்பம் கை கொடுக்கும் என்கிறார்கள். விஞ்ஞானிகளின் உழைப்புக்கும் அறிவாற்றலுக்கும் நாம் தலை வணங்குவோம். ஆனால் அந்த ஆற்றலும் உழைப்பும் எதற்குப் பயன்படுகிறது என்பதையும் சிந்தித்துப் பார்க்க வேண்டியிருக்கிறது.

உலக அளவில் பரவிய ஒரு தொழில் நுட்பத்தை அயல்நாட்டு உதவியின்றி, நாமே செயல்படுத்துவதற்குத்தான் இந்த 25 ஆண்டு உழைப்பு உதவியிருக்கிறது. ஆனால், முன்னேறிய நாடுகளோ, இத் தொழில் நுட்பத்தின் அபாயங்களை உணர்ந்து அதனைக் கைவிட்டுவிட்டு, வேறு மார்க்கங்களைத் தேடிக் கொண்டிருக்கின்றன.

இந்நிலையில் கல்பாக்கம் திட்டத்தை நாம் எவ்வாறு மனதார வரவேற்க முடியும்?

எந்தத் துறையில்தான் அபாயம் இல்லை? விபத்து நேரும் வாய்ப்புகள், அனைத்து உற்பத்திக் களங்களிலுமே உண்டே என்று வாதிடலாம்.

ஆனால், அணு ஆலைகளில் ஏற்கெனவே நாம் விவரித்த மூன்று அபாயங்களைத் தவிர, இந்தப் புதிய புளூடோனியம் முறையால் அணு ஆயுத உற்பத்திக்கும் வசதி இருக்கிறது. தவறான நபர்களிடம் இந்த புளூடோனியம் சிக்கினால், அதோகதிதான்!

இருபத்தைந்து ஆண்டு உழைப்பும் ஏராளமான ரூபாய்களும் அணுமின் ஆலைகளுக்கு மாற்று ஏற்பாடு கண்டுபிடிக்கச் செலவிடப்பட்டிருக்குமாயின், மனதார வரவேற்று மகிழ்ந்திருக்கலாம். அந்தத் தொகையும் மனித சக்தியும் மின் வினியோகத்தில் நாம் காணும் விரயத்தைக் குறைக்க திசை திருப்பப்பட்டிருந்தால்கூட, கணிசமான முன்னேற்றத்தைக் கண்டிருப்போம்.

இப்போது கண்டுள்ள அதிவேக அணுமின் உற்பத்தி முன்னேற்றம், அபாயங்கள் நிறைந்த ஒரு கவர்ச்சிப் பெட்டகம் என்ற உண்மையையேனும் மக்கள் உணர வேண்டும்; விழிப்புணர்வு பெற வேண்டும். ●

# கண்கள் கவுண்ட் டவுன்

**'கண்களால் கைது செய்' படத்தின் நாயகி ப்ரியாமணி, தம்மைப் பாதித்த பத்துக் கண்களைக் கவுண்ட்டவுன் செய்கிறார்.**

**10 - பின்லேடன் :** சர்வதேச செய்திச் சேனல்களில் தினசரி ஒரு முறையாவது பார்க்க நேரும். தந்திரமும், சூழ்ச்சியும் ஒளிந்திருக்கும் கண்கள்.

**9 - வைரமுத்து :** கவிதையும், காந்தமும் கலந்தது போன்ற கண்கள், பேசும்போதும் கவிதை வாசிக்கும் போதும் கம்பீரமும் கொஞ்சம் கூடி விடும்.

**8 - ரஜினி :** சினேகத்தையும், தன்னம்பிக்கையையும் ஒளித்து வைத்திருக்கும் சின்னக் கண்கள். ரஜினி சிரிக்கும்போது கண்களும் சிரிப்பது கூடுதல் கவர்ச்சி.

**7 - சச்சின் :** அடடா! என்ன ஒரு துறுதுறுப்பு, துடிப்பு! செஞ்சுரி அடித்துவிட்டு வரும்போது அந்தக் கண்களில் ஒரு வெளிச்சம் தெரியுமே! சூப்பர்.

**6 - வைகோ :** வைகோ மேடையில் நின்று மைக்கில் கர்ஜனையோடு பேசும் போது, அந்தக் கண்களில் ஓர் ஆண் சிங்கத்தின் கோப உணர்ச்சி. சிரித்துப் பேசும்போது மானின் கண்களில் தென்படும் பரிவு!

**5 - சதா :** தமிழில் எத்தனை புதிய கதாநாயகிகள் வந்தாலும், சமீபத்தில் 'ஜெயம்' படத்தில் அறிமுகமான சதாவின் கண்களில் அலட்சியம் கலந்த அபார அழகு.

**4 - மீனா :** மீன் விழி அழகு மீனாவுக்கு.

**3 - ஐஸ்வர்யா ராய் :** இத்தாலி மார்பிள் சிலை போல் செதுக்கப்பட்ட உலக அழகியிடம், முதல் மதிப்பெண் பெறுவதே அவரின் ஐஸ்வர்யக் கண்கள்தான்.

**2 - ஸ்ரீ அரவிந்த அன்னை :** சாந்தம், கருணை, தாய்மை, ஈர்க்கம், தெய்வீகம் எல்லாவற்றின் கலவை. எத்தனை நேரம் வேண்டுமானாலும் பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

**1 - ப்ரியா மணி :** எத்தனை முறை கண்ணாடியில் பார்த்தாலும், உலகின் அழகான கண்கள் என்னுடையவைதான் என்று அடித்துச் சொல்லுவேன்! (ஆத்தி! ஆள விடு தாயி)

- ஸ்ரீசக்கரம்

ஸ்கேனிங்



திருச்சி புத்தூர் குழுமாயி அம்மன் கோயிலில் குட்டி குடிக்கும் திருவிழா பற்றித்தான் இப்போது ஒரே பேச்சு. காரணமில்லாமல் இல்லை. இந்தக் கோயிலுக்கு வருடா வருடம் அரசு சார்பில் ஓர் ஆட்டுக்குட்டி கொடுப்பது பல வருட மரபு!

ஆடு கோழி பலியிடத் தடை விதித்திருக்கும் நிலையில், இந்த வருடம் என்ன நடக்கப் போகிறது என்பதை அச்சத்தோடும் ஆச்சரியத்தோடும் எதிர்நோக்கியிருக்கிறார்கள் திருச்சிப் பகுதியினர்.

குழுமாயி அம்மன் கோயில் திருவிழா, மார்ச் மாதம் முதல் வாரத்தில் ஐந்து நாட்கள் நடைபெறும். மாசி மாதம் முதல் செவ்வாய், காப்பு கட்டுதல். மூன்றாவது செவ்வாய், காளியாவட்டம். மறுநாள் புதனன்று சுத்த பூஜை. வியாழக்கிழமை குட்டி குடித்தல். வெள்ளியன்று மஞ்சள் நீராட்டு. சனிக்கிழமை குடிபுகுதல்.

புத்தூர் அக்ரஹாரம், தலித்துகள் வசித்து வரும் கல்நாயக்கன் தெரு உட்பட பதினாறு வீதிகள் உள்ளடங்கியது இத் திருவிழாப் பகுதி. ஒவ்வொரு சாதியினருக்கும் திருவிழா நடத்துவதில் ஒவ்வொரு பங்களிப்பு இருக்கின்றது.

ஐந்து நாள் அம்மன் வீதியுலாவில் குட்டி குடிக்கும் திருவிழாவின்போது மட்டும் அக்ரஹாரத்துக்குள் நுழைவது இல்லை. ஆனால் இந்த நிகழ்வு உட்பட அனைத்தையும், திருவிழாக் கமிட்டியில் இடம் பெற்றிருக்கும் பிராமணர்கள் அருகிருந்து நின்றுதான் நடத்தி வைக்கிறார்கள்.

நாற்பது வயதாகும் மருளாளி சிவக்குமார், கடந்த பத்து வருடங்களாக குட்டி குடித்து வருகிறார். அன்று மட்டும் சுமார் ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஆடுகள் அம்மனுக்குக் குட்டி குடித்தலுக்காக நேர்ந்து விடப்படுமாம். கோயிலுக்கு முன்பாக இவை நடைபெறுவதில்லை. புத்தூர் மந்தையில் துவங்கும் இது, விடிய விடிய ஒவ்வொரு வீதி வழியாகவும், அம்மன் திருவீதி உலாவுக்கு முன்பாக நிகழ்ந்தவாறு நகர்ந்து கொண்டேயிருக்கும்.

# அரசே வழங்கும் பலியாடு!

கவர்மெண்ட் குட்டி என்று முதன் முதலாகத் தரப்படுவதிலிருந்து, குட்டி குடிக்கும் நிகழ்ச்சி தொடங்கி விடும். ஐந்து நாள் திருவிழாவில் மருளாளி ஆட்டு ரத்தத்தை உறிஞ்சி குட்டி குடிக்கும் சம்பவம், ஏராளமான பக்தர்களை ஈர்க்கிறது!

முதல் நாள் திருவிழாவின்போது, இரவு இரண்டு மணி முதல் நான்கு மணிக்குள்ளாக, தெற்கு முத்து ராஜா தெருவில் அமைந்திருக்கும் எல்லைக் கல் முன்பு, காப்பு கட்டும் பூசாரி நின்று கொண்டு, ஆட்டு ரத்தமும் வெறும் சாதமும் கலந்து பிடித்த மூன்று உருண்டைகளை வானத்தை நோக்கித் தூக்கி வீசி எறிவாராம்.

இதுவரை ஒரு பருக்கைச் சோறு கூட கீழ் நோக்கி வந்ததில்லையாம். இதனை நாங்கள் ஒவ்வொரு ஆண்டும் கண்கூடாகக் கண்டு வருகிறோம் என்கின்றனர் குழுமாயி அம்மன் பக்தர்கள். இதனை 'எறி சோறு' எனச் சொல்கின்றனர் அவர்கள்.

"சென்ற ஆண்டு குட்டி குடிக்கும் திருவிழாவில் புத்தூர் கிராம நிர்வாக அதிகாரி, அரசு சார்பாக ஒரு குட்டியைத் தந்திருந்தார். அரசு விதித்திருக்கும் தடைச் சட்டத்தின் மூலமாக, முதல் குட்டியாக கவர்மெண்ட் குட்டி கிடைக்குமா தெரியவில்லை. திருவிழா நெருங்கி வரும் முன்பாகவே அரசு மூலமாக இதற்கு அனுமதி பெற்றுத் தந்துவிடுவாள் குழுமாயி அம்மன், என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என்கிறார் கோயிலின் தலைமைப் பூசாரி கருப்பண்ண பிள்ளை (65). நான்காவது தலைமுறையாக அவரும், ஐந்தாவது தலைமுறையாக அவரது மகன் பன்னீர் செல்வமும் கோயில் பூசாரிகளாக இருந்து வருகின்றனர்.



• ஸ்ரீதரன்



• வெங்கட்ராமன்



• கருப்பண்ண பிள்ளை

• குழுமாயி கோயில்

பக்தர்கள் மற்றும் பொது மக்கள் கருத்தறிந்து, அரசிடம் முறையிட்டு, எப்படியும் குட்டி குடிக்கும் திருவிழாவினை தொய்வின்றி நடத்திக் காட்டுவோம்!" என்கிறார் கோயில் திருவிழாக் கமிட்டியின் செயலாளர் கே. ஸ்ரீதரன்.

"அரசின் அறிவிப்பினால், இத்திருவிழா நடக்குமா என்கிற கேள்வி எல்லோர் மனத்திலும் எழுந்துள்ளது. பலி சடங்கை மட்டும் ரத்து செய்துவிட்டால், ஐந்து நாள் திருவிழா மகத்துவமே இழந்து போகும்" என்கிறார் திருவிழாக் கமிட்டியின் தலைவரான வி. வெங்கட்ராமன்.

கட்டுரை, படங்கள் :
**இருள் நீக்கியான்**

# –சரத்குமார் பேட்டி

**வயது ஏறுவது திடீரென்று நின்று விட்டது மாதிரி இருக்கிற இளமையைக் காப்பாற்றி வைத்திருக்கிறார் சரத்குமார். கோடம்பாக்கத்தில் இளசுகளின் அலை அடிக்கிறது. இருக்கிற களேபரத்தில் இவர் மாதிரி நடுத்தர வயது ஹீரோக்கள் தங்களை எப்படித் தக்கவைத்துக் கொள்ளப் போகிறார்களென்று தெரியவில்லை. அதிலும் சரத்துக்குப் பத்துக் கைகள். (நூறு வேலைகள்). சினிமா, அரசியல் இரண்டு கண்கள். இரண்டிலும் இருக்கிற எதிரிகளைச் சமாளித்து, கலவரப்படுத்துகிற இளசுகளையும் எப்படிச் சமாளிக்கிறார் என்ற கேள்வி எழுந்தது. இதோ... சர்ச்சைகளில்லாமல் எல்லாவற்றிற்கும் சரத்குமார்...**

**இளம் ஹீரோக்கள் நிறைய வந்துட்டிருக்காங்க. இந்த நேரத்துல உங்களுக்கான ரோல் இன்னும் இருக்குன்னு நினைக்கிறீங்களா?**

இளமையான திங்கிங் எங்களுக்கு இல்லைங்கறீங்களா? இன்னைக்குப் பதினெட்டு வயசுப் பையன் நடிக்கற படம் ஓடுதுங்கறதுக்காக, முப்பது வயசுக்காரங்க நடிக்கறது ஓடாமலா இருக்கும்? ஹாலிவுட்ல எந்த ஹீரோவைப் பார்த்தாலும் நாற்பது நாற்பத்தைந்து வயசுக்கு மேலதான். அர்னால்ட் ஸ்வாஸ்நேகர், டாம்குருஸ், மெல்கிப்ஸன் இப்படி நிறையச் சொல்லலாம். முப்பது, முப்பத்தைந்து வயசுக்கு மேலதான் மெச்சூரிட்டி வரும். நூறு சதவிகித மெச்சூரிட்டிங்கறது நாற்பது வயசுக்கு மேலதான். பதினெட்டு வயசுப் பையன் நாற்பது வயசுப் பெண்ணை லவ் பண்ற மாதிரி கூட படம் வரலாம். அந்த மாதிரிப் படம் ஓடுதுங்கறதுக்காக நானும் பெட்ரூம் காட்சிகள்ல நடிக்க முடியுமா? நிச்சயமா மாட்டேன். Moral Values உள்ள படத்துலதான் நடிப்பேன். சினிமாவுல எனக்கும் பொறுப்புகள் இருக்குன்னு நினைக்கிறேன்.





**கதைகள்தான் இன்னைக்கு வெற்றி பெற்றிருக்கு. இது பற்றி உங்க கருத்து என்ன?**

ரொம்ப மோசமான ட்ரெண்ட். நமக்குன்னு பண்பாடு இருக்கு. கலாசாரம் இருக்கு. மேற்கத்திய கலாசாரத்தை நாம ஏத்துக்கிட்டாலும் முழுமையா நூறு சதவிகிதம் இல்லை. இன்னும் வேட்டி சட்டை போட றோம். ஒருசில முறைகளை 'அடாப்ட்' பண்ணியிருக்கோம் அவ்வளவுதான். அதுக்காக அவங்க அப்படி படம் பண் றாங்கங்கறதுக்காக நாமும் அதை அப்படியே ஃபாலோ பண்ணினா, நம்ம கலாசாரத்தை நாமே அழிக்கறோம்னு தான் அர்த்தம்.

'எல்லாமே மாடர்ன் ட்ரெண்ட்டுக்குப் போயாச்சு. இதுல என்ன தப்பு இருக்கு'ன்னு சொல்றவங்களுக்கு நான் என்ன சொல்றேன்னா பேசாம ஆங்கிலப் படம் எடுத்துட்டுப் போங்க. 'பாய்ஸ்' படத்தை எடுத்துக்கிட்டா, அந்தப் படத்துல டெக்னிக்கலா எல்லா விஷயமும் நல்லா யிருக்கு. டைரக்டர் ஷங்கர் என்னோட நல்ல நண்பர்தான். ஒரு காலேஜ்ல நடக்கக்கூடியது, பசங்க மத்தியில நடக்கறது தான்னு அவர் சொன்னாலும் படத்துல அது தெரிய லையே. அந்த மாதிரியான ரெண்டு மூணு படம் ஓடிட்டதால, இவரும் அந்த ட்ரெண்டுக்கு வந்துட்டாரோ என்னவோ? நம்ம தமிழ் சினிமாவைப் பொறுத்தவரை என்னன்னா, ஒரு தரமான படம் ஹிட்டாயிட்டால் அதே மாதிரி பத்துப் படம் வருது. இது மாறணும். நம்ம கலா சாரத்தை மேலைநாடுகளுக்குக் கொண்டு போறதுக்குப் பதிலா, அந்தக் கலாசாரத்தை இங்க கொண்டு வர்றதுல எனக்கு உடன்பாடில்லை.

**நாட்டாமை, நட்புக்காக, அரசு, திவான் போன்ற**

# "சினிமா கலந்ததுதான் தமிழக பாலிடிக்ஸ்"

அதை உணர்ந்துதான் நடிக்கிறேன். சிரஞ்சீவி மெகா ஸ்டார் ஆந்திரா வுல. அவர் நடிச்ச 'தாகூர்' படம் பிச்சிட்டுப் போகுது. அங்க இளம் ஹீரோக்கள் இல்லையா? இதை ரசிகர்கள்தான் தீர்மானிக்கறாங்க. இதுல எனக்கான இடம் நிச்சயம் இருக்கு.

**பாலுணர்வு சம்பந்தப்பட்ட படங்கள்ல வர்ற கிராமத்து கேரக்டர்கள் உங்களுக்குப் பொருத்தமா இருக்குன்னு நினைக்கிறீங்களா?**

நாயகனுக்குப் பிறகுதான் கமல் அதிகமாப் பேசப் பட்டார்ன்னு சொல்லலாம். அதுக்கு முன்னால கமல் நடிச்ச படங்களைச் சொல்லச் சொன்னா டக்குன்னு சொல்ல வராது. அதுக்காக அவர் முன்னால ஹிட் கொடுக் கலைன்னு அர்த்தமா? என்னன்னா, மெச்சூரிடி வந்த பிறகு வந்த படங்கள்தான் பேசப்படுது. எனக்கு நல்ல ஹிட்டான படங்கள் சூரியன், சாமுண்டி. இதுல வயசான கேரக்டர்கள் இல்லையே. அது ஓடலையா? சரத்குமார் படங்கள்

பார்க்கப் போகணும்னு மக்கள் விரும்பி வந்த போது, வெளியான படங்கள் 'சூரியவம்சம், நாட்டாமை, நட்புக்காக'ன்னு சொல்லலாம். இதுக்கு முன்னாலயும் காவல் நிலையம், பாலை வனப் பறவைகள்... எவ்வளவோ படங்கள் ஓடியிருக்கே.

**'திவான்' படத்துக்காக நிறைய மிரட்டல் வந்ததாமே?**



அப்படி எதுவும் எனக்கு வரலை. ஒரு நடிகனை நடிகனா மட்டும் பார்க்கணும். கலைஞன்ங்கறவன் எந்தக் கேரக்டரிலும் நடிப்பான். இப்படித்தான் நடிக்கணும். அப்படித்தான் நடிக்கணும்னு இல்லையே. படத்துல அது என்னோட கேரக்டர். அவ்வளவுதான். அதைப் பற்றி வேற எதையும் சொல்ல விரும்பலை.

**டாக்டர் ராமதாஸ் அஞ்சு வருஷம் சினிமாப் படமே எடுக்கக்கூடாதுன்னு சொல்றார். கிருஷ்ணசாமியும் திருமாவளவனும் தமிழக சீரழிவுக்கு நடிகர்கள்தான் காரணம்னு சொல்றாங்க. சினிமா, அரசியல் இரண்டு துறைகள்லயும் இருக்கற நீங்க இதை எப்படிப் பார்க்கறீங்க?**

டாக்டர், எடிட்டர், ரிப்போர்ட்டர், பேங்கர், பிஸினஸ்மேன் ஒவ்வொருத்தருக்கும் ஒரு துறை இருக்கு. அந்தந்த வேலையைப் பண்ண அவங்கவங்களுக்கு உரிமையிருக்கு. இந்தத் தொழிலை நீங்க பண்ணாதீங்கன்னு சொல்ல யாருக்குமே உரிமையில்லை. படத்துல வல்காரிட்டியோ வேறெதோ இருந்தா, கருத்துச் சொல்லலாமேயொழிய எடுக்கக் கூடாதுன்னு சொல்ல முடியாது. அப்படிச் சொன்னா அவர் தான் குற்றவாளி. அவங்கவங்க, சுதந்திரத்துல தலையிட யாருக்கும் உரிமையில்லை.

**உங்களுக்கும் விஜயகாந்துக்கும் இடையில் நிறைய இடைவெளி விழுந்துட்டதாப் பேசிக் கறாங்களே...?**

அப்படியெல்லாம் இல்லை. ரெண்டு பேருமே நடிகர்கள். எங்களுக்குள்ள என்ன கருத்து வேறுபாடு இருக்க முடியும்? ரெண்டு பேருமே பிஸியா இருக்கோம். அதனால சந்திக்க முடியலை. அவ்வளவுதான்.

**நடிகரா இருக்கீங்க. நடிகர் சங்கப் பொறுப்புல இருக்கீங்க. அரசியல்லயும் இருக்கீங்க. இவ்வளவு வேலையை கைல வச்சிருக்கறது கஷ்டமாயில்லையா?**

சினிமாவும், அரசியலும் கலந்ததுதான் தமிழ்நாட்டு பாலிடிக்ஸ்ன்னு ஆயிப் போச்சு. இந்த இடத்துல இத்தனை பொறுப்புகளை வச்சிக்கறது பெரிய கஷ்டமாயில்லை. இது நானா விரும்பின ஒண்ணுதானே.

பத்து வருஷத்துக்கு முன்னால, வோட்டுப் போடாதவங்க வீட்டு கரண்ட், ரேஷன் கார்டு, காஸ் கனெக்ஷன் எல்லாவற்றையும் கட் பண்ணுங்கன்னு சொல்லியிருக்கேன். அப்ப யாருமே இதைப் பெரிசா ஹைலைட் பண்ணலை. இப்ப சொன்னா பெரிசு பண்ணுவாங்க. ஏன்னா சினிமா, அரசியல் இரண்டிலேயும் நான் இருக்கேன். மக்களுக்கு நல்ல விஷயத்தைச் சொல்றதுக்கும் செயல்படுத்தறதுக்கும் அரசியல்லயும் சினிமாவுலயும் இருந்தா வசதியா இருக்கு.

**கொஞ்ச நாளா தி.மு.க. விழாக்கள்ல காண முடியலை. திடீர்னு விழுப்புரம் மாநாட்டுல கலந்துக்கிட்டீங்க! இடைப்பட்ட காலத்துல எங்க போயிருந்தீங்க?**

அப்படியெல்லாம் இல்லை. இது யாரோ கிளப்பி விட்ட வதந்தின்னு சொல்வேன். பொதுவா, கட்சி நிகழ்ச்சிகள்ல நான் என்னைக்குமே கலந்துக்கிட்டதில்லை. ஒருசில விழாக்களுக்குப் போயிருப்பேன். நான் பிஸியா இருக்கும்போது போக முடியாது. இது தலைவர் கலைஞருக்கே தெரியும். விழுப்புரம் மாநாடு ஒரு முக்கியமான மாநாடு. அதுல கலந்துதானே ஆகணும்."

**அரசியல்ல ஒரு பெரிய இடத்துக்கு வர முடியலையே?**

பெரிய இடம்னா?

**இரண்டாம் கட்ட மூன்றாம்கட்ட தலைவர்கள் மாதிரி...**

நான் எம்.பியா இருக்கேன். நடிப்புல பிஸியா இருக்கேன். முழு நேர அரசியல் வாதியா இறங்கினா அது பற்றி யோசிக்கலாம். ஒரு கட்சியின் எம்.பியா இருக்கறதே நல்ல இடம்தான்னு நினைக்கிறேன்.

**நடிகர் சங்க நிர்வாகிகளை முதல்வர் சந்திக்காம இருக்கறதுக்கு நீங்க முக்கியப் பொறுப்புல இருக்கறதுதான் காரணம்னு சொல்றாங்களே...**

முதல்வர் அப்படிச் சொன்னாங்களான்னு தெரியாது. மத்தவங்க அப்படி நினைச்சுக் கலாம். நான் பர்சனலா பார்க்கப் போனா அப்படிச் செய்யலாம். நான் நடிகர் சங்கப் பிரதிநிதியா முதல்வரைப் பார்க்கறதுல தப்பும் கிடையாது. பார்க்கக் கூடாதுன்னு சர்க்குலரும் இல்லை.

**- ஏக்நாத்**

படங்கள் : **ஸ்ரீஹரி**





# இனிய தீபாவளி நல்வாழ்த்துக்கள்!

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை

# P.R. JEWELLERY






**GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES**

Old No. 102, New No. 138, USMAN ROAD,
T. NAGAR, CHENNAI - 600 017.
PH: 24344442, 24327764 **TUESDAY HOLIDAY**
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

**PROPRIETOR : P. RAVINDHIRAN**
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

**P.R.** ஜுவல்லரியில் ராசிக்கல் மோதிரம் வாங்கி அணிந்துபயன்பெறுங்கள். ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 400/-

## வெற்றிகரமான
## 18-ம் ஆண்டு துவக்க விழா
## 22.10.2003

தொடர்ந்து தங்களது பேராதரவை
நல்கிவரும் வாடிக்கையாளர்கள்
மற்றும் ஆதரவாளர்களுக்கு எமது
இதயங்கனிந்த நன்றி.

ராசிக்கல் மோதிரம் வாங்க
ராசியான கடை P.R.ஜுவல்லரி.
எங்கு ஜோதிடம் பார்த்தாலும் எங்களிடம்
வந்து ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம்
ரூ. 400/-க்கு வாங்கிப் பயன்பெறுங்கள்.
உடனடியாகக் கிடைக்கும். கல் ஒரிஜினல் என
முழு உத்திரவாதம் தருகிறோம். தங்கத்தில்
2 கிராம் முதல் 8 கிராம் வரை
ரூ. 1800/- முதல் ரூ. 5000/-ம் வரை
உடனடியாகக் கிடைக்கும். தபால்
எழுதினால் முழு விவர பாம்லட்
இலவசமாக அனுப்புகிறோம்.

முகவரி தெளிவாக எழுதவும்.

எமது சிறப்புப் பேட்டியை ராஜ் டீ.வியில் தினசரி காலை 6.55 மணிக்கு காணத் தவறாதீர்கள்.



*வேர்கள் என்பது*
*பூமியைத் தொட*
*நினைக்கும்*
*மரத்தின் கிளைகள்.*
*கிளைகள் என்பது*
*வானத்தைத்*
*தொட முயலும்*
*மரத்தின் வேர்கள்.*
*- தாகூர் (வழி தப்பிய பறவைகள் தொகுப்பிலிருந்து)*

உயரங்கள் மீதான என்னுடைய காதலை சிறு வயதில் கிராமத்திலிருக்கும் மரங்களே நிறைவேற்றி வைத்தன. நட்டு வைத்த குடைகள் போல ஒவ்வொரு மரமும் கிளைக்கரம் நீட்டி என்னை உயரங்களுக்கு அழைத்துச் சென்ற காலம் அது. தலையெல்லாம் பூக்களாக காற்றின் பாடலை மொழி பெயர்த்துக் கொண்டிருக்கும் மரங்களின் உச்சாணிக் கிளையில், பறவைகளின் கூட்டிற்கு அருகில் அமர்ந்தபடி, அடிவயிற்றில் பயப்பந்து உருள, இந்தப் பூமியை ஒரு புல்லெனப் பார்க்கும் பால்யத்தின் இனம் புரியாத பரவசம் இப்போதும் என் உதிரத்தில் இருந்து கொண்டு அலைக்கழிக்கிறது.

எத்தனை எத்தனை மரங்கள்? ஒவ்வொரு மரத்திலும் ஒவ்வொரு ரகசியம் காத்திருந்தது. தென்னைமரம் உடம்பெல்லாம் வளையல்களோடு இளநீர் திருட அனுமதிக்கும். பனைமரம் மார்புகளில் சிராய்ப்புகளைப் பரிசாகக் கொடுத்து நுங்குகளுடனும், சிறு சிறு தேன்களின் கடியுடனும் காத்திருக்கும். சடைசடையாய்ப் பழங்கள் பழுத்த புளியமரங்கள் மஞ்சள் சிவப்பு கலந்த பூக்களுடனும், தூக்கில் தொங்கி இறந்தவர்களின் ஆவிகளுடனும் கிளை ஆட்டும். இலைகளிலும் வாசனை ஊற்றிக் கொண்டு மாமரங்கள் கோடைகளில் அழைக்கும். மண்ணில் உதிர்ந்து கிடக்கும் நட்சத்திரங்களைப் போல் பூக்களைச் சிதறவிட்டு வேப்பமரம் நறுங்காற்று வீசும். மேலே இருந்து கீழே விழுந்தவர்களைப் பற்றிய பயங்களைப் பூசிக் கொண்டு நாவல் மரம் வசீகரிக்கும். கிளையெல்லாம் பச்சைக் கிளிகள் படர்ந்திருப்பது போல், பச்சை நிற இலைகளுடனும் சிவப்பு நிறப் பழங்களுடனும் ஆலமரம் குருவிகளின் குரலில் ஆலாபனை செய்யும்.

கிராமத்தில் மண்ணின் மீது நான் இருந்ததைவிட மரங்களின்மீது இருந்த நேரமே அதிகம். என்னைத் தேடிக் கொண்டு வீட்டில் இருந்து வருபவர்கள் தோட்டங்களுக்கும் தோப்புகளுக்குமே வருவார்கள். இலைகளுக்கு நடுவில் ஒளிந்து கொண்டு, ஆந்தைகள் மாதிரி குரல் கொடுத்து அவர்களை அலற வைப்பது அப்போதைய விளையாட்டுகளில் ஒன்று.

எல்லா மரத்திலும் ஒரு சவால் காத்துக் கிடந்த நாட்கள் அது. ஏற முடியாத வழுக்கல்களுடனும் முட்களுடனும் சில மரங்கள் காத்திருக்கும். அவற்றிலும் லாகவமாய் ஏறுவோம். பார்ப்பதற்கு வலுவாகத் தெரியும். சில கிளைகள் கால் வைத்ததும் உடைந்துவிடும். கீழே விழுந்து கால் எலும்பு முறிந்து சில நாட்கள் படுக்கையில் கிடப்பேன். மீண்டும் மரங்கள் தங்கள் உயரங்களைக் காட்டி சூதாட அழைக்கும்.

காலையில் இரண்டு மூன்று புத்தகங்களுடன் மரம் ஏறி உச்சியை அடைந்து, முதுகு சாய்ந்து கொள்ளவும், கால் நீட்டிக் கொள்ளவும் வசதியாக ஒரு முதிர்ந்த கிளையைத் தேர்ந்தெடுத்து அமர்ந்துவிட்டால் போதும். மதியப் பசி தான் கீழே அழைக்கும்.

மரங்கள் பரிச்சயப்படுத்திய பறவைகளின் உலகம் அலாதியானது. ஒரு நாள் எங்கிருந்தோ வந்த பறவை ஒன்று மரத்தில் அமர்ந்திருந்த என்னிடம் கேட்டது.

"இந்த உயரம் போதுமா? இன்னும் மேலே பாக்கலாம் வா."

"என்னால முடியாது" என்றேன்.

"நான் சொல்லித்தரேன்."

"வேணாம். பயமாயிருக்கு!"

"மேலே மேலே போனா, மேகத்தைப் பிழிஞ்சு தண்ணி குடிக்கலாம்."

"இறக்கை முளைக்கட்டும் வரேன்."

அதற்குப் பிறகு பறக்கும் ஒவ்வொரு பறவையும் விமானமாக தெரிந்தது. அல்லது ஒவ்வொரு விமானமும் பறவையாகத் தெரிந்தது. விமானங்களால் வசீகரிக்கப்படாத குழந்தைகள் உண்டா? இன்றைக்கும் திருவிழாக் கடைகளில் விமானங்களின் பொம்மைகளைக் கை காட்டி வாங்கித் தரச் சொல்லி அடம்பிடிக்கும் குழந்தைகளைப் பார்க்க நேர்கிறது. பறத்தலுக்கான பொருளாதாரச் சாவியை பெற்றோர் வைத்திருக்க, சாவி கொடுக்கப்படாத சக்கரங்களுடன் குழந்தை




நா.முத்துக்குமார்

# கிராமம் நகரம் மாநகரம்

களைப் பார்த்துக் கண் சிமிட்டுகின்றன பொம்மை விமானங்கள்.

சிறு வயதில் அடம் பிடித்து நான் வாங்கிய பொம்மை விமானங்களும் ஹெலிகாப்டர்களும் ரெக்கை இழந்து சக்கரம் உடைந்து பரணில் உறங்குகின்றன. அவற்றின் ஞாபக அடுக்குகளில் செம்மண் தரைகளின் ஓடு தளங்களும் என் பிஞ்சு விரல்களும் வந்து போகக் கூடும்.

தும்பை பூத்துக் கிடக்கும் மானாவாரிக் காடுகளில் தும்பிகள் கூட்டம் கூட்டமாய்ப் பறக்கும். ஒரு குட்டி ஹெலிகாப்டரைப் போல் ஹெல்மெட் கண்களுடன் இருக்கும் அவற்றின் உருவத்தால் ஈர்க்கப்பட்டு துரத்திக் கொண்டே ஓடுவோம். நூலில் அவற்றைக் கட்டி விமானமாக்குவோம். ஆயினும் இந்த ஹெலிகாப்டர்களுக்கு உயரங்கள் சாத்தியமில்லை.

மரங்களுக்குப் பின் அதிக உயரத்தை எனக்குக் கற்றுக் கொடுத்தது எங்கள் ஊர் கோயில் கோபுரம். கோயிலுக்குள் இருக்கும் மைதானமே எங்களின் விளையாட்டுத் திடல். ஒருமுறை கோயிலை புனரமைக்கும் பணி தொடங்கியது. கோபுரத்தைச் செப்பனிடும் வேலையில் எங்களுக்குத் தெரிந்தவர் இருந்தார். அவரது உதவியுடன் சாரங்களைப் பிடித்து கோபுரத்தின் மேலே ஏறிப் பார்த்தேன். புறாக்களின் கிறீச்சிடலுடனும், ராட்சச தேன் கூடுகளின் ரீங்காரங்களுடனும் ஒவ்வொரு சாளரமாக கடக்கக் கடக்க, பூமி காலுக்கு கீழே புள்ளியாகி கொண்டே வந்தது. உயரத்தில் இருந்து பார்க்கையில் தலை சுற்றியது. பத்துப் பதினைந்து மரங்களின் உயரம்.

எங்கள் ஊரின் மேலும் சில சமயம் ஹெலிகாப்டர்கள் தாழப் பறப்பது உண்டு. எங்கள் வீட்டுக்கருகிலேயே காஞ்சிபுரம் பச்சையப்பன் கல்லூரி இருந்தது. காஞ்சிபுரத்துக்கு வரும் அரசியல் தலைவர்களின் ஹெலிகாப்டர்கள் கல்லூரி மைதானத்தில்தான் இறங்கும். எங்கள் தலைக்கு மேலாக தாழப் பறந்து மைதானத்தில் இறங்கப் போகும் ஹெலிகாப்டர்களைத் துரத்திக் கொண்டே ஓடுவோம். நேரு, இந்திரா காந்தி, ராஜீவ் காந்தி என வெவ்வேறு காலக் கட்டங்களில் வெவ்வேறு தலைவர்கள் எங்கள்

ஊர்ச் சிறுவர்களின் துரத்தல்களுடன்தான் ஹெலிகாப்டரில் வந்து இறங்குவார்கள். வரலாற்றின் பக்கங்களில் சிறுவர்களுக்கு இடமில்லையென்பதால், வெளி உலகத்திற்கு எங்களைத் தெரியாமல் போய்விட்டது.

கோடை விடுமுறைக்கு அப்பாவுடன் சென்னைக்கு வருவேன். பயணக் களைப்பில் தூங்கி விடுவேன். மீனம்பாக்கத்தைக் கடக்கும் அபூர்வ விநாடிகளில் அப்பா எழுப்பி விமானங்களின் ஆச்சரியங்களை அறிமுகப்படுத்துவார். எங்கள் பேருந்து மீனம்பாக்கத்தைக் கடக்கும் ஒவ்வொரு முறையும், ஏதேனும் ஒரு விமானம் மேலே கிளம்பும் அல்லது கீழே இறங்கும்.

மாநகரவாசியாகி நீண்ட வருடங்களுக்குப் பிறகும் ஆகாயத்தில் பறக்கும் விமானங்களின் சப்தம் கேட்டால், இன்றைக்கும் அதே வியப்புடன் அண்ணாந்து பார்க்கிறேன். சென்னையின் உயர்ந்த கட்டடங்கள் அனைத்திலும் ஏறிப் பார்த்தாகிவிட்டது. கோபுரத்தில் ஏறிப் பார்த்த அதே வசீகரம் வேறு வடிவத்தில் இடம் பெயர்ந்துவிட்டது.

சென்ற வாரம் முதன்முறையாக விமானத்தில் பயணம் செய்தேன். மும்பையில் ஒரு பாடல் பதிவு. 'காதல் கொண்டேன்' இயக்குநர் செல்வராகவன், இசையமைப்பாளர் யுவன் ஷங்கர் ராஜா, நான், மூவரும் கிளம்பினோம். வழக்கமாக உறவினர்களையும் நண்பர்களையும் வழியனுப்ப வரும் ஏர்போர்ட் வேறு கோணத்தில் தெரிகிறது. அனுமதிக்கப்பட்ட தூரத்தில் நின்ற கால்கள் இப்போது உள்ளே செல்கின்றன. எனக்கு முதல் பயணம் என்று அறிந்தவுடன் செல்வராகவனும், யுவனும் உற்சாகமடைகிறார்கள். அவர்களின் முதல் விமான அனுபவத்தை நகைச்சுவையோடு விவரிக்கிறார்கள். பால்ய காலத்தின் பரவசம் என் ரத்தத்தில் பரவத் தொடங்குகிறது. விமானத்தில் அமர்ந்த என்னையே ஒரு முறை கிள்ளிப் பார்த்துக் கொள்கிறேன். சென்னை முழுக்க தென்னை மரங்களாக மாற்றிக் காண்பித்து விமானம் உயரமடைகிறது. சரஸ்வதி சபதம் படத்தில் நாரதர் வருவதைப் போல சுற்றிலும் மேகக் கூட்டங்கள் மிதக்கின்றன. வானம் வேறு, மேகம் வேறு என்பது புலனாகிறது. பச்சையும் செம்மண் சிவப்பும் கட்டம் கட்டமாகக் கொட்டி வைத்து வரைந்த நவீன ஓவியம் போல, பூமி புள்ளியாகத் தெரிகிறது. நூறு இருநூறு மரங்களின் உயரமிருக்கும். என்னை என் பரவசத்தில் மூழ்க விட்டு விட்டு செல்வராகவன் கேட்கிறார்: "இந்த சந்தோஷ மனநிலையில் ஏதாவது எழுதலாமா?" உற்சாகத்துடன் "சரி" என்கிறேன். மும்பையில் தங்கும் மூன்று நாட்களுக்குள் நான்கு பாடல்கள் மெட்டமைத்து எழுதி பதிவாக வேண்டும். செல்வராகவன் கதையையும் சூழலையும் விளக்குகிறார். ஒவ்வொரு ஃபிரேமிலும் கவிதைத் தனத்துடன் கதை வசீகரிக்கிறது. "நீங்க ஏதாவது எழுதுங்க, அதுக்கு யுவன் ட்யூன் போடட்டும்" என்கிறார். ஜன்னலுக்கு வெளியே மிதக்கும் மேகங்களிடமிருந்து நீர்மையைக் கடன் வாங்கி எழுதுகிறேன்.

*"நனையாத காலுக்கெல்லாம் கடலோடு உறவில்லை,*
*நீ வேறு நான் வேறு என்றால் நட்பு என்று பெயரில்லை,*
*பறக்காத பறவைக்கெல்லாம் பறவையாகும் வரமில்லை,*
*திறக்காத மனத்தில் எல்லாம் கனவு போக வழியில்லை"*

படித்துக் காட்டியதும் செல்வராகவன் "பிரமாதமாக இருக்கு" என்று என் தோளைப் பிடித்து அழுத்துகிறார். யுவனின் லேப்டாப்பிலிருந்து இசை உருவாகிறது. சூழலின் ரம்யத்தை வனைந்து இசையாக மொழி பெயர்க்கிறார் யுவன். நான் கண்ணை மூடி புன்னகைக்கிறேன். என் புன்னகையைப் பார்த்துவிட்டு யுவன் கேட்கிறார். "எதுக்குச் சிரிக்கிறீங்க?"

நான் விமானத்தின் ஜன்னல் பக்கம் கைகாட்டி "அதோ தூரத்துல புள்ளியா தெரியற கிராமத்துல ஒரு பையன் மரத்திலிருந்து கீழே விழுந்துட்டான். இங்கேயிருந்து பார்த்தா தெளிவாத் தெரியுது. உடம்பெல்லாம் வலிக்குது"என்கிறேன். யுவன் சிரித்தபடி "அந்தப் பையன் பேரு முத்துக்குமாரா?" என்கிறார். செல்வராகவன் எங்கள் உரையாடலுக்குள் கலந்து "முத்துக்குமார். ஒரு வேளை அது நீங்களா இருந்தா... மரத்திலேயிருந்து கீழே விழுந்ததால தான் இன்னிக்கு விமானத்தில் போயிட்டிருக்கீங்க" என்கிறார். ஒரு மேக மூட்டைக்குள் விமானம் நுழைய, பார்வைப் புலன் மறைகிறது.

- சந்திக்கிறேன்

"அந்த ஆளு தொடர் சீரியலே பார்க்க மாட்டாரு...!"

"ஆச்சர்யமா இருக்கே, ஏனாம்?"

"அவருக்கு ஆஸ்துமாவாம்; ஒரு இழுப்பே போதுங்கிறாரு!"

- தேனி முருகேசன்

பாரம்பரியத்தை
பிரதிபலிக்கும்
பண்டிகை நாளில்
பாரம்பரிய
கைத்தறி சேலைகள்
தனலக்ஷ்மி சாரிசில்
சங்கமம்!



- சரியான விலை
- உயர்ந்த தரம்
- பணிவான சேவை
- கார் பார்க்கிங் வசதி

தீபாவளி
நல்வாழ்த்துகள்

உயர்தர காட்டன், கைத்தறி சேலைகள் பேன்சி ரக சேலைகள், சுடிதார் ரெடிமேட் மெட்டீரியல், பெட்டிகோட், நைட்டீஸ் சூரத், பாம்பே மில் சேலை ரகங்களை முழு திருப்தியுடன் வாங்க வருகை தாருங்கள்...

# தனலக்ஷ்மி சாரீஸ்

42 ஆண்டுகால வாடிக்கையாளர் சேவையில்...

**சென்னை**

3, கோபாலகிருஷ்ண ரோடு, தி.நகர், சென்னை -17.
பாண்டி பஜாரிலிருந்து டாக்டர் நாயர் ரோடுக்கு திரும்பியவுடன் இரண்டாவது இடதுபுற சாலை
Bus No-9,10,47A,47D
**Resi: 2815 7311, Shop: 2815 1327**

**கோயமுத்தூர்**

25/1-B, Maruthamalai Main Road, (Vadavalli, High School Bus Stop) Vadavalli, Coimbatore-1
**Resi: 2424981, Shop: 2423878**

**Sundays Open**
**Major Credit Cards accepted**

---



# S.V. முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

*முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

Charitable Trust (Reg)

# 50 / 88, Panchali Amman Kovil Street, (Near Arumbakkam Post Office)
Arumbakkam, Chennai - 600 106 Tel. Off: 2475 5700, 2475 1356.
E-mail:svhome@vsnl.net

"அருண் நில்லுங்கோ. நான் சொல்லுறதைக் கேளுங்கோ. உங்க மனசிலே ஏதேதோ கற்பனை செய்யுறீங்க என்று நினைக்கிறேன். வேண்டாம். அதைக் கலைத்து விடுங்கோ. குழம்ப வேண்டாம். என் மீதும் குற்றமிருக்கு. மேற்கத்திய சூழல்கள்ல இருக்கின்ற ஆணும் பெண்ணும் இயல்பாய் நண்பர்களாக இருக்க முடியுமென்டு நினைத்தேன். நம்பினேன். தவறாகி விட்டது. எனக்கு என்ட ரெண்டு பிள்ளைகளும் முக்கியம். அவர்களோட வாழ்க்கைக்கான விருப்பங்கள், தேவைகள் முக்கியம். என்னட அன்பு முழுசா அவர்களுக்குப் போய்ச் சேரணும். அப்படித்தான் எனக்கான விதி சொல்லுது. அதனைக் கூறு

# நாகரத்தினம் கிருஷ்ணா

போட இயலாது. விருப்பமுமில்லை. பிறகு..."

கடந்த சில வாரங்களாக இதைத்தான் அவள், திரும்பத் திரும்பப் பழுதடைந்த ஒலிநாடாவைப் போலச் சொல்லிக் கொண்டிருந்தாள். 'பிறகு' என்று அவள் தொடரும் போதெல்லாம் நான் அலட்சியம் காட்டியிருக்கிறேன். அந்த வாக்கியத்தை முடிக்க நான் அனுமதித்ததில்லை. ஒருவேளை முடித்திருக்கலாம். எனக்குத்தான் அதைக் கேட்பதற்கு விருப்பமில்லையோ என்னவோ? 'பிறகு' என்கின்ற வார்த்தைப் பிரயோகத்திற்கு அடுத்து வந்த சொல்லினால் எனக்கு என்ன நேர்ந்திருக்கும்? சந்தோஷமா? துக்கமா? இரண்டுமேவா? அந்த ராட்சஸி சொல்ல வந்ததை முழுசாகக் கேட்டுத் தொலைச்சிருக்கணும். "பிறகு...!"

இந்த முடிவில்லா கடைசி வாக்கியம், என்னை விடாமல் துரத்தியது. மேய்ப்பனில்லாத ஆடு நான். ஓடியிருக்கக் கூடாது. அவளைப் பார்த்தது, இரக்கப்பட்டது, எதிர்பார்த்து மனசுக்குச் சுகம் தேடிக் கொண்டது. அவள் நெருக்கத்தினால் கிடைத்த பெண் வாடையை நாசியில் கவளம் கவளமாய் வாங்கிக் கொண்டது, என எல்லாமே தப்புத்தான். தவிர்த்திருக்கணும். செய்யலை. இளிச்சவாயன். ஏமாந்துட்டேன். இப்படி முழுசா மீட்டர் உயரங்களில் இருக்கும் இரண்டு பிள்ளைகளை பெத்து வீட்டுல விட்டுட்டு... என்னோட எப்படி அவளால நெருங்க முடிஞ்சுது. ஊர் சுற்ற முடிஞ்சுது. போட்ட கூச்சலுக்கு, இப்போது அவளால எப்படி அமைதியாப் பதில் சொல்ல முடியுது. 'பிறகு'ன்னு, இன்னும் என்னத்தைச் சொல்ல வரா... வேண்டாம். நான் கேட்கப் போவ



தில்லை. இனியும் வாலைக் குழைத்துக் கொண்டு அவன் பின்னே நான் ஓடப் போவதில்லை.

# பிறகு...

அவளை முதன் முதலாப் பார்த்த தினம் ஒரு வகையில் முக்கியமான நாள். ஜூலை பதினாலாம் தேதி. பஸ்த்தி சிறையிலிருந்த கைதிகள் புரட்சியாளர்களால் விடுவிக்கப்பட்ட நாள். பிரான்ஸ் நாட்டின் சுதந்திர நாள். ராணுவ அணிவகுப்பைப் பார்த்து விட்டு, மணி மதியம் ஒன்றிருக்கும். பாரீஸின் கவர்ச்சிகரமான வயிற்றுப் பகுதியான 'சாம்ப்ஸ் எலிஸி' (Champs Elysee) ஓர் ஆடம்பர ரெஸ்டாரெண்டின் பேவ்மெண்ட் தெரஸ். சுற்றியிருந்த வெள்ளையர்களை ஒதுக்கிவிட்டு, என் கவனத்தைச் சற்றுத் தள்ளியிருந்த ஆர்க் தெ திரி யோம்பை (Arc-de-Triumph) முத்தமிட்டுச் செல்லும் கார்களில் பதித்த நேரம், அவள் வந்து கொண்டிருந்தாள்.

வெள்ளையர் கும்பலிலிருந்து வேறுபட்ட நிறம். சிக்கென எனது கவனத்தில் தொற்றிக் கொண்டாள். அவள் வலது கரத்தில் கற்றையாக வெள்ளைத் தாள்கள். எதிர்த் திசையில் இருந்த சேனல் பர்ஃபூமின் ஷோரூமை பார்த்துக் கொண்டே என்னை அவள் கடந்த போதுதான் அது நிகழ்ந்தது. அவள் கையிலிருந்து விடுபட்ட தாளொன்று, நேரே என்னை நோக்கிப் பறந்து வந்து காலில் விழுந்தது. ஓடி வந்தாள். இருவரும் இயல்பாய்க் குனிந்தோம். இயல்பாய்த் தாளைப் பற்றியிருந்தோம். அவள் ஏதேனும் சொன்னாளா? ஞாபகமில்லை. நான் ஊமையாக இருந்தேன். அவள் கரத்திலிருந்து மெல்லிய உஷ்ணம் என் கரத்திற்குப் பரவிற்று. அந்த உஷ்ணம் மெல்ல மெல்ல கை, தோள், உடல் என ஓட்டமிட்டு, இதயத்தைத் தொட்ட போது, நான் வியர்த்திருந்தேன்.

இன்றைக்கும் அந்த முதல் நாள் உஷ்ணம், மாற்றுக் குறையாமல் என்னிடமிருப்பது ஆச்சரியம். ஏன் அந்தப் பெண்ணிடம் இப்படிப் பைத்தியமாக இருக்க வேண்டும்?

அன்றைக்கு அவள் என்னிடம் கேட்ட கேள்வி இன்றைக்கும் மாத்திரை குறையாமல், மனத்தில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. 'நீங்க தமிழா? தமிழ் கதைப்பீங்களா?'

என்னோட ஊமைத் தலையாட்டலுக்குக் காத்திராமல், "யாழ்ப்பாணமா?" என்ற கேள்வி தொடர்ந்து வந்து விழுந்தது.

"பாண்டிச்சேரி" என்று சொல்லிவிட்டு நிமிர்ந்து நேரிடையாகப் பார்த்தேன்.

"நான் யாழ்ப்பாணம். பிரான்சுக்கு வந்து இரண்டு மாதம். எவ்ரியில இருக்கிறேன். இன்றைக்கு லீவுயெண்டு இந்தப் பக்கம் வந்தேன். 'லா ஷப்பெல்' போயிட்டு வீட்டுக்குப் போகணும். மெட்ரோ எடுக்கவேணும்..."

"வாங்க சேர்ந்தே போகலாம். நானும் கார் துய் நோர் போயிட்டு கிரிஞி போகணும்."

என் பதிலால் அவளுக்குச் சந்தோஷம். கண்களை அகல விரித்துப் படபடத்துப் பேசினாள். நான்தான் அவளது பெயரைக் கேட்டேன். 'பிரிசில்லா' என்றாள். எனது பெயரைக் கேட்பாள் என எதிர்பார்த்து, கேட்காததால், அருண் என்று சொல்லி வைத்தேன். அதனைச் சாதாரணமாக வாங்கிக் கொண்டதில் எனக்குச் சின்ன வலி.

அந்த முதல் நாள் சந்திப்பிற்குப் பிறகு, அவளை மறுபடியும் சந்திக்க நேர்ந்தது. 'லா ஷப்பெல்' தமிழ்க் கடையொன்றில்.

"தேனிசை செல்லப்பாவின் காசெட் கிடைக்குமா?" எனக் கடைக்காரரிடம் வைக்கப்பட்ட கேள்விக் குரலில் இருந்த பரிச்சயம் என்னை ஈர்க்க, திரும்பினேன். அவளேதான்.

நான், "போன் ஜூர்!" என, அவள் பதிலுக்கு 'வணக்கம்' என்றாள். இருவரும் பரஸ்பரம் நலம் விசாரித்துக் கொண்டோம். "நான் வெளியில உங்களுக்காகக் காத்திருக்கிறேன்" என்றேன். அவள் யோசித்து, "ஓம்" என்றாள். சிறிது நேரத்தில் வெளியே வந்தவளிடம் "வாங்க பக்கத்துல ஒரு

பிராஸ்ஸரி இருக்கு, காப்பி குடித்துக் கொண்டே பேசுவோம்" என்று சொல்ல, "அய்யய்யோ பியர், விஸ்கி யெண்டு மதுவாடையாயிருக்கும். எங்களோட தேனீர்க் கடைகள் இருக்குதே...!" எனச் சொல்லிவிட்டு என்னைப் பார்த்தாள்.

நான் பதிலேதும் சொல்லாமல் அருகி லிருந்த இலங்கைத் தமிழரின் தேனீர்க் கடைக்குள் முதன்முறையாக நுழைந்தேன். என்ன கேட்பது? எப்படிக் கேட்பது? என் பது தெரியாமல் நான் விழிப்பதைப் புரிந்த வளாக.

"எனக்குப் பசிக்குது. என்னெண்டாலும் சாப்பிட வேணும். கொத்து ரொட்டி பிடிக் குமா?" என்றாள்.

"எனக்கு டீ போதும்."

"சரி ஒரு கொத்து ரொட்டி. இரண்டு உழுந்து வடை, இரண்டு தேத் தண்ணி" என்று கட்டளையிட்டு விட்டு, "இரண்டு கதிரைகள் அந்தப் பக்கம் சும்மா இருக்குது. உட்காரலாம்," என்றாள்.

அவள் கதிரைகள் எனக் குறிப்பிட்டது நாற்காலிகளை என்பதைப் புரிந்து கொண்டு அவளைத் தொடர்ந்து சென்று உட்கார்ந் தேன்.

நான்தான் உரையாடலைத் தொடர்ந் தேன். "நான்", "எனது", "என்னைச் சார்ந் தவர்கள்" என்று சொல்லிக் கொண்டு போக, அவள் கொத்து ரொட்டியை ருசித் துக் கொண்டே, தமிழர் தம் பெருமை களைப் பதிலாகச் சொன்னாள்.

"பிரிசில்லா...!"

"ம்..."

"உங்களைப் பற்றி ஏதேனும் சொல் லலாமே?"

திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தாள். "எதைப் பற்றி? எந்த நேரமும் வாழ்க்கையில் தொங்கிக் கொண்டு பயணிப்பதையோ? பிரச்னைகளைச் சந்தித்த, சந்திக்கும், சந்தித் துக் கொண்டிருக்கும் சராசரி இலங்கைப் பெட்டை யெண்டா? எங்கட ஐயாவின் திடீர் மறைவுக்குப் பிறகு, அம்மா சுகயீன மாக, சகோதரங்களை ஆமிக்காரன் சுட்டுப் போட, வன்னிக்காட்டில் அலைந்ததைச் சொல்லவோ? இல்லை மோசம் போன மூத்த தமக்கைக்காக பிரான்சுக்கு களவாய் வந்ததையோ?... பிறகு."

"பிரிஸில்லா வேண்டாம். உன்னைப் புரட்டிப் போட்ட பழைய விபரீதங்கள் இப் போதைக்கு வேண்டாம். இந்த நேரத்தைச் சந்தோஷப்படுத்த நம்மிருவருக்கும் பொது வான வேறு விஷயங்கள் இல்லையா?"

"நானும் அதைத்தான் சொல்கிறேன். உங் களிடத்திலிருக்கும் சந்தோஷமோ அல்லது என்னிடத்திலிருக்கும் துக்கமோ வேண் டாம். இருவருக்கும் பொதுவான செய்தி களைப் பரிமாறிக் கொள்வோம் சரிதானே?" எனக் கேட்டு விட்டு அவள் நேரிட்ட போது, என்னிடம் பதிலில்லை.

அந்தச் சந்திப்பிற்குப் பிறகு எனக்கு அவ ளிடமும், அவளுக்கு என்னிடமும் ஏற்பட் டிருந்த ஈர்ப்பினை எந்த ரகத்தில் சேர்ப் பது? வெர்ஸாய் அரண்மனைப் பூங்கா விலோ, இத்தாலியன் ரெஸ்டாரண்டிலோ மணிக்கணக்கில் நாங்கள் பேசியதெல்லாம், சங்கச் சித்திரங்கள், தமிழன்பன் கவிதைகள் எனச் சொன்னால் நீங்கள் நம்பித்தான் ஆக வேண்டும்.

என் உளத்தை மனத்தின் கற்பனைக்கு அவள் பிடிபடாமலேயே இருந்தாள். ஒரு நாள் கேட்டே விட்டேன்.

"பிரிசில்லா... வெல்... எனக்குத் தெரிஞ் சாகணும். எத்தனை நாட்களுக்கு இப்படி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வது? எனக்கு நீ வேண்டும். எம் மனதைப் பதுக்கிக் கொண்டு பாசாங்கு உரையாடல்களை நடத்த என்னால் முடியாது."

"என்ன தெரிஞ்சாகணும்?"

"நீ! உன் மனது?..."

"அருண், வேண்டாம். இந்தச் சினிமா வசனத்தை மூட்டைக் கட்டி வையுங்க."

"என்னிடமிருந்து தப்பிக்க வேண்டாம். உனக்கு அப்படியொரு எண்ணமில் லையா?"

"இல்லை. சத்தியமா இல்லை. ரெண்டு பிள்ளைகள் முழுசா வச்சிக்கிட்டு எப்படி நான்...? ச்சே... நீங்களும் சராசரி மனுஷன்னு காட்டிட்டீங்களே!"

"என்ன உளர்றே?"



"என் முதல் பையன் 'ஓடி ஓடி' சம் பாதிச்சான். இரண் டாவது பையனோ தாவித் தாவி சம் பாதிக்கிறான்!"

"புரியுது, புரியுது. அவன் ஃபைனான்ஸ் கம்பெனி. இவன் அர சியல்வாதின்னு சொல் லுங்க!"

- பாஸு

"உளறலை. உண்மையைத்தான் சொல்றேன்!"

"உண்மையோ பொய்யோ. எனக்கு உன் கடந்த காலம் வேண்டாம். அக்கறையில்லை!"

"உங்களுக்கு வேண்டாம். எனக்கு வேண்டும். எனக்கதில் அக்கறையிருக்கின்றது. பிறகு..."

அப்போதாவது அந்த 'பிறகு'ஐ முடிக்கச் சொல்லிக் கேட்டிருக்க வேண்டும். தவறிவிட்டேன். எப்போதும் எதிலும் காட்டும் அவசரம் அப்போதும் வந்தது. மனம், "அவள் உனக்கானவள்" என்று சொல்லப் போக, என் கவனம் அவள் கதையில் அல்ல, அவளிடமிருந்தது.. தேவையற்ற கற்பனைகளைக் கொடியேற்றி கைத்தட்டியது.

இரண்டு மூன்று நாட்கள் சென்றிருக்கும். அன்று சனிக்கிழமை. அவளைச் சந்திக்க வேண்டுமென்று நினைத்து, பலமுறை தொலைபேசியில் எண்களை ஒற்ற, அடுத்த முனையில் எந்தப் பதிலும் இல்லை. எரிச்சலில் கட்டிலில் விழுந்தேன். எவ்வளவு நேரம் தூங்கியிருப்பேனோ? எழுந்து முகத்தை அலம்பிக் கொண்டு, டிக்காக்ஷன் விட்டு கறுப்புக் காப்பியை ஒரு சாசரில் வடித்துக் கொண்டு, மேசையின் முன்னால் உட்கார்ந்தேன். அன்றைக்கு வந்த கடிதங்களுக்கிடையே, சற்று வித்தியாசமான உறையில் ஒரு கடிதம். பிரித்துப் பார்த்தேன். அவள்தான் எழுதியிருந்தாள்.

"அருண் அவர்களுக்கு,

இந்தக் கடிதத்தை என்னிடமிருந்து எதிர்பார்த்திருக்க மாட்டீயள். ஏமாற்றங்கள் உங்களுக்கு எப்படியோ? எங்களைப் போன்றவர்களுக்கு அதுவே வாழ்க்கை. எந்தச் செய்தியையும் முழுவதுமாக வாங்கிக் கொள்ள நீங்கள் பழகிக்க வேணும்; ஒவ்வொரு முறையும் சொல்லலாமெண்டு நினைத்து நினைத்து, சொல்லாமல் விட்டதை நீங்கள் எப்படிக் கற்பனை செய்து கொண்டியளோ? என்னால் யூகிக்க முடியலை. இனியாகிலும் நிஜத்திற்கு வர வேணும். நான் பிரான்சுக்குக் களவாய் வந்ததைச் சொல்லியிருந்தேன். ஆனால் அப்படி வந்தது. மோசம் போயி செத்துப் போன எண்ட தமக்கைக்காக, அவளட இரண்டு பிள்ளைகளுக்காக, அப்படி வந்ததற்கான ஏற்பாடுகளைச் செய்த எண்ட தமக்கையின் புருஷனை மணமுடிப்பதற்காகவென்பதை, என்ன காரணத்தினாலோ உங்களிடம் நான் சொல்ல முயன்றபோதெல்லாம், ஏதோவொன்று தடுத்து விட்டது.

அநேக சமயங்களில், பெருமையாகப் பேசப்படும் நமது கலாசாரம், பெண்களின் விதிகளை மட்டும் இப்படித்தான் தீர்மானிக்கின்றது. ஆண்களின் சுயதேவைகளுக்காக எழுதப்பட்ட விதி. அவ் விதிகளைப் பொறுத்தே எங்களுக்கான விலைகள். நாங்கள் உயிரல்ல, உடைமை. ஆண்களுக்கான பிரத்தியேக உடமை. அப் பெருமையைக் காப்பாற்றவே(?) கனடாவுக்குப் பயணித்துக் கொண்டிருக்கிறேன். எனக்குள்ளும் கனவுகள். பெண்களுக்கான கனவுகள். நிஜத்தோடு ஒட்டாத முன்னிரவுக் கனவுகள். அக் கனவுகளைக் கலைக்காமலே ஒரு கேள்வி. ஒருவேளை நான் சொல்ல வந்ததை முழுவதுமாகச் சொல்லியிருந்தால், பிள்ளைகளோட என்னை மணமுடிக்க உங்களுக்குத் தைரியம் வந்திருக்குமா? சும்மா வேணும் 'ஓம்' என்று சொல்லுங்கள். பாலையை நிலமாகக் கொண்டவர்கள், கானல் நீரைத் தானே குடித்துப் பழகவேணும்..."

கதவைத் திறந்து கொண்டு, கைப் பிடியிலிருந்து வலதுகரத்தை எடுக்காமலேயே என் மனைவி.

"நான் சொன்னதை மறந்துட்டு இங்கே என்ன பழைய குப்பையைக் கிளறிக்கிட்டு இருக்கீங்க...?"

"உங்க மாதர் சங்கத்துல எழுத்தாளர் பிரிஸில்லாவோட ஏதோ சந்திப்புன்னு சொன்ன... போயிட்டு வாயேன்!"

"பெண் எழுத்தாளர்னா ஆண்கள் வரக் கூடாதுன்னு இல்லை. நீங்களும் வரலாம். தவிர வித்தியாசமான தலைப்புல பேசவும் வச்சிருக்கோம்!"

"என்னன்னு?"

"பிறகு..." ○



''கண்ட கண்ட நேரத்துலே சாப்பிடுறதும் கண்ட கண்ட நேரத்துலே தூங்குறதும் மாப்பிள்ளைக்குப் பிடிக்காது..''

''அட... ரொம்ப நல்ல பையன் போல இருக்கே..!''

''ஆமா! ஜெயில்லே அப்படி பழக்கிட்டாங்க!''

- தஞ்சை தாமு



# மாநகராட்சியில் ஒரு மல்லுக்கட்டு!


• கமிஷனர் விஜயகுமார்

"மாநகராட்சி எப்பவோ செத்துப் போச்சு" - ரிப்பன் கட்டட வளாகத்தில் மாநகராட்சியின் ஆளும் கட்சி உறுப்பினர் ஒருவர் இப்படிச் சொல்ல, நாம் ஆடிப் போய்விட்டோம். காரணம், அந்த உறுப்பினர் ஆளுங்கட்சியின் செல்வாக்கு மிக்க மனிதர். "இவருக்கே இப்படியா?" என்று மாநகராட்சியில் விசாரித்தால், அப்போது தான், அவர்களில் அறுபது பேர் மாநகராட்சி கமிஷனரையும், அதிகாரியையும் மாற்றும் முயற்சியில் ஈடுபட்டிருப்பது தெரியவந்தது.

ஆளும் கட்சி உறுப்பினர்களுக்கு கமிஷனர் மேல் கோபம், ப்ளஸ் வருத்தம். காரணம், அவர்கள் சொல்லும் எந்த வேலையையும் அவர் செய்து கொடுப்பதில்லையாம். "பாருங்க ஸார்... அறுபத்தெட்டாவது வட்டத்தில் பணிபுரிந்து கொண்டிருந்த துப்புரவுத் தொழிலாளர் ஒருவரை, எழுபத்தியோராவது வட்டத்துக்கு மாற்றி விட்டார்கள். அவர் எங்கள் கட்சியின் அனுதாபி. உடனே மண்டல உதவி ஆணையாளரைத் தொடர்பு கொண்டு, மாற்றல் உத்தரவை ரத்து செய்தோம். இதைக் கேள்விப்பட்ட கமிஷனர் விஜயகுமார், ரத்து உத்தரவை ரத்து செய்துவிட்டு, துப்புரவுத் தொழிலாளர் புது இடத்தில் வேலைக்குச் சேர வேண்டும்" என்ற ஆர்டர் போடுகிறார். எந்த வேலையானாலும் முதல்வர் சொன்னாத்தான் செய்வேன் என்கிறார். இது எப்படிச் சாத்தியமாகும்?" என்று கேட்டார் அண்ணா நகர் பகுதியைச் சேர்ந்த கவுன்சிலர் ஒருவர்.

பொதுவாக, ஆளும் கட்சி உறுப்பினர்கள் சொல்லும் விஷயம், தி.மு.க. உறுப்பினர்களுக்குத்தான் காரியங்களை அதிகாரிகள் செய்து கொடுத்து வருகிறார்கள் என்பது. மன்றத்தில் அவர்களது வாயடைக்கத்தான் காரியங்கள் செய்து கொடுக்கப்பட்டு வருகிறதாம்.

"எழில்மிகு சென்னை பணியில் கமிஷனர் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார். நடை பாதை ஆக்கிரமிப்புகள் அகற்றப்பட்டிருக்கின்றன. மழை நீர் வடிகால்கள் கட்டப்பட்டு வருகின்றன. எங்களின் நியாயமான கோரிக்கைகளை கமிஷனர் செய்து தருகிறார். சுயநலம் காரணமாகச் சிலர் கமிஷனருக்கு எதிரான நடவடிக்கையில் இறங்கியிருக்கிறார்கள்" என்கிறார் நிலைக்குழுத் தலைவர் ஒருவர்.

கமிஷனரையும், விஜிலன்ஸ் அதிகாரியையும் மாற்றச் சொல்லி முதல்வரிடம் கொடுக்கத் தயாரிக்கப்பட்ட மனுவில், ஐம்பது சதவிகித ஆளும் கட்சி உறுப்பினர்கள் கையெழுத்திட மறுத்துவிட்டதாக லேட்டஸ்ட் செய்திகள் சொல்லுகின்றன. "அம்மாவால் நியமிக்கப்பட்ட அதிகாரியை நாம் நீக்கச் சொல்வது சரியல்ல" என்று சொல்கிறார்களாம் சில கவுன்சிலர்கள். தொடரும் இந்தப் பனிப் போரைப் பார்த்தால், நிர்வாகத்துக்கும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களுக்கும் சம்பந்தமில்லையென்று தெரிகிறது. இதில் வெல்லப் போவது கவுன்சிலர்களா, அல்லது கமிஷனரா என்பது முதல்வர் கையில் மட்டும்தான் இருக்கிறது.

- சஞ்சயன்

படம் : ராஜன்




✉ 'விடலை ஹீரோக்கள்' குறித்த கவர் ஸ்டோரி படித்தேன். 'துள்ளுவதோ இளமை' படத்தில் தனது சேவையைத் துவங்கிய தனுஷ், இன்று ஹிந்திப் படத்தில் நடிக்கும் அளவுக்குப் பிரபலமாகிவிட்டார். சிறு வயது ஹீரோக்களின் வரவால் பெரிய ஸ்டார் ஹீரோக்கள் சற்றுக் கலக்கம் அடைந்துள்ளதென்னவோ உண்மைதான்.

மயிலாடுதுறை-1,
சிவா. பாலாஜி.

✉ நாஞ்சில் நாடனின் மனக் குமுறல் நியாயமே! ஒரு எழுத்தாளனின் படைப்புக்கு சினிமா வாயிலாகக் கிடைக்கும் பெயரும், புகழும், எப்படி அவரது எழுத்துக்களுக்குக் கிடைக்கும் உண்மையான அங்கீகாரமாகும்?

திருச்சிராப்பள்ளி - 21, ஆர். அப்துல் சலாம்.

✉ கல்கியிஸம் என்பதற்கு அளித்திருக்கும் விளக்கம் ஒரு புதிய பார்வையாக இருந்தது.

சென்னை - 41, கே.எஸ். கந்தசுவாமி.

✉ நாட்டிற்கு உழைக்கிறோமோ
இல்லையோ என்கிற குற்ற
உணர்வுடன் இருக்கிற
அரசியல்வாதிகளை - வீட்டிற்காவது
கொஞ்சம் உழைக்க
வைத்திருக்கிறீர்களே!
சபாஷ்!

ஈரோடு - 10,
பள்ளிபாளையம் ரஞ்சனிப்பிரியன்.

✉ 'எதிர்க்கட்சிகளும், பத்திரிகைகளும் செய்யும் விமர்சனங்கள் ஆக்கபூர்வமாகவும், அறிவுபூர்வமாகவும் இருக்க வேண்டும்' என்று டாக்டர் மைத்ரேயன் சொல்லி இருக்கிறார். தமிழக முதல்வரின் புதிய தொழில் கொள்கையில் உள்ள நியாயமான குறைகளையும், யோசனைகளையும் 'கல்கி' தலையங்கம் வழங்கியிருக்கிறது. தமிழக முதல்வர் இவற்றைப் பரிசீலனை செய்வாரா?

மதுரை,
என். பாலகிருஷ்ணன்.

✉ தற்போதுள்ள முதல்வர் குட்டிக்கதை சொல்வதும், அதற்கு மறுப்பாக

# இலக்கியம் பக்கம் அரசியல்!

முன்னாள் முதல்வர் கவிதை நயத்துடன் ஒரு கதை சொல்வதும்... அரசியல் இப்போது இலக்கியத்தின் பக்கமாகப் போய்க்கொண்டிருக்கிறதே!

ஊஞ்சவேலாம்பட்டி, டி. பசுபதி.

✉ கிராமம், நகரம், மாநகரம்,
"எங்கிலும் விரவிக் கிடக்கும் காயத்ரி,
முத்துகுமாரை மட்டுமன்றி
எங்களனைவரின் மனத்தையும்
கொள்ளை கொண்டு விட்டாள்."

நெய்வேலி, சாந்தி சுந்தர்.

✉ 'மானியங்கள் ஒரு பக்கம்;
கிடுக்கிப்பிடி மறுபக்கம்,' தலையங்கம்
படித்தேன். அரசுத் துறை ஊழியர்கள்
ஒத்துழைக்க வேண்டுமானால்,
அவர்களுடைய மனோநிலை
உற்சாகமாக இருக்க வேண்டும்.
அவர்களைத் தட்டிக் கொடுத்து
உற்சாகப்படுத்தித்தான் வேலை வாங்க
வேண்டும் என்ற கருத்து
சிந்திக்கத்தக்கதாய் இருந்தது.

மணியக்காரன்பாளையம்,
ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

* பாதியில் நிற்கும் தென்னூர்-பீம்நகர் பாலங்கள்



# திருச்சியிலும் மேம்பாலப் பிரச்னை!




தீவு போல துண்டிக்கப்பட்டு விட்டது திருச்சி திருவானைக் கோவில்! கொதித்துக் கிடக்கிறார்கள் பக்தர்கள். குறிப்பாக ஸ்ரீரங்கம் அரங்கனைக் கண்டு நெகிழ்ந்த கையோடு, ஜம்புகேஸ்வரரைத் தரிசிக்கச் செல்லலாம் என்றால் பெரிய தடைக்கல்! அது ஸ்ரீரங்கம் புதிய மேம்பாலம்.

காலம் சென்ற ரங்கராஜன் குமாரமங்கலம் முயற்சியால், திருச்சி மாநகருக்கு மொத்தம் நான்கு மேம்பாலங்கள் திட்டமிடப்பட்டன. அதில் ஸ்ரீரங்கம் மேம்பாலம் நிறைவடைந்து, ஒரு வழிப் பாதையாக போக்குவரத்துக்குத் திறந்துவிட்டதில் தான் சிக்கல்.

திருச்சி சந்திப்பிலிருந்து ஸ்ரீரங்கம் நோக்கிப் புறப்படும் நகரப் பேருந்துகள் சத்திரம், காவிரிப்பாலம், பெரியார் நகர், பிறகு புதிய மேம்பாலம் வழியாக ஸ்ரீரங்கம் வந்தடைகிறது. அப்படி வரும் பேருந்துகள் திரும்பவும் அதே வழியில் செல்ல முடிவதில்லை. இதனால் ஸ்ரீரங்கம் கோவிலுக்கு வரும் பக்தர்கள் இரண்டு பேருந்துகள் மாறி, நான்கு கிலோ மீட்டர் சுற்றிக் கொண்டு, திருவானைக் கோவிலுக்குச் செல்ல வேண்டியுள்ளது.

'இதனைப் பலமுறை சுட்டிக் காட்டியும் மாநகரப் போக்குவரத்துக் கழகமோ, மாவட்ட நிர்வாகமோ இதுவரை கண்டு கொள்ளவில்லை. இருவழிப் போக்குவரத்துக்கு ஏற்ற அகலமில்லை என்று தட்டிக் கழிக்கிறார்கள் என கொதிக்கிறார்கள் திருச்சி வாசிகள்.



* ஸ்ரீரங்கம் மேம்பாலம்

இது ஒரு புறமிருக்க, மாநகரின் மையப்பகுதிகளான தென்னூர் ரயில்வே கேட், பாலக்கரை பீம்நகர் ஆகிய இடங்களில் கட்டப்பட்டு வரும் எஞ்சிய இரண்டு பாலங்களும், திட்டம் முடிவுறும் தேதியைக் கடந்து, பல மாதங்கள் ஆகியும் இன்னும் பாதிவேலை கூட முடிவுறாததால் அந்தப் பகுதிகளில் போக்குவரத்து நெரிசல் மேலும் அதிகரித்து விட்டது.

''இந்தப் பாலம் சீக்கிரமாக முடிய வேண்டும் என்றுதான் இடங்களை அரசுக்கு விட்டுக் கொடுத்தோம். ஆனால் காண்ட்ராக்டர் தூங்கி வழிகிறார். நெடுஞ்சாலைத் துறை கண்டு கொள்கிற மாதிரி தெரியவில்லை' என்கிறார் பாலத்திற்கு இடம் கொடுத்த பாலக்கரை ஜெரால்டு.

புதிய மேம்பாலங்களால் திருச்சி மாநகரின் போக்குவரத்து மேம்படும் என்ற நிலை மாறி, மேலும் நெரிசலை அதிகரிக்க வைத்திருப்பதில், ரொம்பவே டென்ஷனாக இருக்கிறார்கள் திருச்சி மக்கள்.

- திருநாவு



* ஜெரால்டு

### அமரர் கல்கி நினைவு இளமைச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதை

பதினெட்டாம் நம்பர் பஸ்ஸுக்காகக் காத்திருந்தேன். எனக்குப் பின்னால் நான் வேலை செய்யும் துபாய் அரசு மருத்துவ மனை. எதிரே, அகன்ற இரட்டைச் சாலை கள். சாலையின் மறுபுறத்தில், எதிர்வசமாகச் சின்ன அளவிலான ஹம்ரியா போஸ்ட் ஆஃபீஸ்.

ஜூன் மாதத்தின் கடுமையான வெயில். சூரியன் நெருப்பாக எரிந்து கொண்டிருந்தது.

முந்திரிக் கொட்டையின் வடிவத்தில் அமைக்கப்பட்டிருந்த பஸ்-ஸ்டாப்! மருந் துக்குக் கூட நிழலில்லை. பஸ் - ஸ்டாப்புக் குப் பின்னால் நடைபாதையையொட்டி வரிசையாக நிழல் படர்த்தி நின்ற ஈச்சை மரங்கள். நான் நிழலில் ஒதுங்கினேன்.

சற்றைக்கெல்லாம் ஒரு வெளிர் நீல பென்ஸ் கார் பஸ் ஸ்டாப்புக்கு முன்னால் கிறீச்சிட்டு நின்றது. கதவுகளில் கறுப்பு நிறக் கண்ணாடி. உள்ளேயிருப்பது யாரென்று தெரியவில்லை. யாராக இருந்தால் நமக் கென்ன..? அசட்டையாக நின்றேன்.

தாழ்ந்து இறங்கிய கண்ணாடிக்குள் ளிருந்து அவள் எட்டிப் பார்த்தாள்.

ஆச்சரியப்பட்டேன். லைலா! நீலக்

## பெமினா

கண்களுடன் கறுப்பு நிற பர்தாவில் சிரிக்கும் அரபு நாட்டு தேவதை... நான் வேலை செய்கிற அதே துபாய் அரசு மருத்துவ மனையில், அட்மினிஸ்ட்ரேடிவ் செக்ரட் டரியாக பணிபுரிபவள்.

இதமான பார்வையால், பதமான வார்த்தையால் என் இதயத்தைக் கவர்ந்தவள்! ஆனாலும் அரபிப் பெண்ணாயிற்றே! பிழைக்க வந்த இடத்தில் ஏன் வம்பு? அதனால் இதயத்தின் மூலையில் எனக்கு மட்டும் கேட்கும் இனிய சங்கீதமாக, அவள்மீது எனக்குள்ள காதலை ஒளித்து வைத்திருந்தேன்.

புன்னகையுடன் ஆங்கிலத்தில் கேட்டாள். "முஹம்மத்...! என்ன இங்கே நிற்கிறீர்கள்?"

"வேறென்ன? பஸ்ஸுக்காகக் காத்திருக் கேன்..." சிரித்தவாறே சொன்னேன்.

அவள் கதவைத் திறந்து வைத்தவாறே அழைத்தாள். "ப்ளீஸ் கம் இன்! நான் கராமா வரைக்கும் போகிறேன். டிராப் பண்ண றேன்..."

"எதுக்கு வீண் சிரமம்? நான் பர்துபாயில் தங்கியிருக்கேன். பஸ்ஸிலேயே போய்க் கொள்கிறேனே..." தயங்கினேன்... பொதுவாக எனக்குப் பெண்கள் என்றாலே தயக்கம்! அதிலும் அரபிப் பெண்ணுடனா? வேண்டாம்...!

அவள் பொய்க் கோபத்துடன் கட்டளை யிடுவது போலச் சொன்னாள். "இந்த வண்டி பர்துபாய்க்கும் போகும்னு நான் நம்பறேன். பிகு பண்ணாமல் சும்மா ஏறி உட்காரு மேன்..."

அதற்கு மேலும் மறுக்கத் தோன்ற வில்லை. தயக்கத்துடன் முன் ஸீட்டில் அவளுக்குப் பக்கத்தில், ஒதுக்கமாக உட் கார்ந்தேன். பென்ஸ் இதமாக சாலையில் வழுக்கியது...

"பர்துபாயில் எங்கே தங்கியிருக்கிங்க?"

"பாம் பீச் ஹோட்டலுக்குப் பக்கத்தில்... உங்களுக்கு வீண் சிரமம்..."

"இருந்துட்டுப் போகட்டும்! அது சரி,



டெய்லி பஸ்ஸிலா போறீங்க? காரில்லையா? இங்கே கிளீனர்கள் கூடக் கார் வெச்சிருக் காங்க. துபாய் ஹாஸ்பிடலில் கம்ப்யூட்டர் புரோகிராமராக வேலை செய்துகிட்டு...!'' அவள் கேலி செய்தாள்.

''அதுக்கென்ன செய்ய? டிரைவிங் லைஸன்ஸ் கிடைச்சாத்தானே? இங்கேதான் டிரைவிங் டெஸ்டில் தேறுவதென்பது சிரமமான காரியமாச்சே..! ஒரு வருஷமா அலைகிறேன். கிடைத்தபாடில்லை!''

அவள் அழகாகச் சிரித்தாள். பென்ஸ் சீறிப் பாய்ந்தது...

தயக்கத்துடன் கேட்டேன். "உங்க வீடு கராமாவிலா?"

"நோ, நோ! ஜுமைராவில்...! அப்பாவும், அம்மாவும், தம்பியும், தங்கையும் அபுதாபிக்கு ஒரு கல்யாணத்துக்குப் போயிருக்காங்க! விடிஞ்சுடும் வீடு வந்து சேர! வீட்டில் வேலைக்காரர்கள் இருந் தாலும், தனியாக போரடிக்கும்! அதனாலே கராமாவிலிருக்கும் சிநேகிதி வீட்டுக்குப் போய், கொஞ்ச நேரம் அரட்டையடிச்சுட்டு அப்புறம் போகலாமே என்று நினைத்தேன். அதிருக்கட்டும், இஃப் யூ டோண்ட் மைண்ட்... முஹம்மத், ஏன் இன்னமும் திருமணம் செய்துக்கலை?"

அவளின் அந்த விசாரிப்பினால் மனத் தில் குளிர்காற்று வீசியது போலிருந்தது...

சொன்னேன். "அல்லாஹ் என் தோளில் நிறையச் சுமைகள் ஏற்றி வைத்திருக்கிறானே! என்ன செய்யட்டும்? ஊம்..!' வேண்டு மென்றே பெருமூச்சு விட்டேன்.

"அப்படியென்ன சுமை?" அவள் ஆச் சரியத்துடன் கேட் டாள்.

''அப்பா ரிடை யர்டு வாத்தியார். எனக்குக் கீழே மூன்று தங்கைகள்.

# கனவுகளைக் கலைக்காதீர்கள்



இரண்டு பேர் கல் யாணப் பருவத்தில்! மூத்த தங்கைக்குத் திருமணம் நிச்சய மாகியிருக்கிறது. அறுபது பவுன் நகையும், லட்ச ரூபாய் ரொக்க மும்! அப்பாவிடம் சேமிப் பேதுமில்லை. நான் தான் கொடுத் தாகணும்! அது முடிந்தால் மறு வருடமே இரண் டாவது தங்கைக்கு வரன் பார்த்தாக வேண்டும். மூன்றா வது தங்கைக்குப் பன்னிரண்டு வயது தான் ஆகிறது. வேண்டுமானால் இரண்டு தங்கை களின் திருமணத்தை

முடித்துவிட்டு, பிறகு என் திருமணத்தைப் பற்றி யோசிக்கலாம்! அதுவரை... ஊஹூம், மூச்!''

அவள் வருத்தப்பட்டாள். ''என்னது? பெண் வீட்டார் சீதனம் கொடுக்கணுமா? ஹராம்... நீங்கள் முஸ்லிம்கள்தானே.. பெண்ணுக்கு ஆண் மஹர் - விவாக மூலதனம் கொடுத்து, திருமணம் செய்யறதுதானே இஸ்லாமிய முறை?''

''உண்மைதான்! இந்த மாதிரி விஷயங்களில் தெய்வ கட்டளையை ஓரம் கட்டி, அதற்கு நேர் மாறான சம்பிரதாயங்களைத்தானே பின்பற்றுகிறார்கள்! யாரிடம் நொந்து கொள்ள? திருமணம் என்னவோ மஹரின் பேரில்தான் பதிவு செய்யப்படுகிறது. ஆனால் சீதனம்? அதைக் கொடுத்துத்தான் ஆக வேண்டும் என்கிற கட்டாய நிலை! முஸ்லிம் சமூகம் எங்கிருந்தோ கடன் வாங்கிய சாபக்கேடு..!''

''கஷ்டம்தான்! வழி காட்ட வேண்டியவர்களே வழி தவறிச் செல்கிறார்கள்! சரியா?''

''நூறு சதவிகிதம் சரி, இங்குதான் அந்தப் பிரச்னையில்லையே? அப்படியிருந்தும் நீங்க இன்னமும் கல்யாணம் செய்துக்காமல்...'' சங்கோஜம் சற்று விலகி இருந்ததால் துணிவுடன் கேட்டேன்.

லைலா பதிலொன்றும் சொல்லவில்லை. கார் அல்மக்தூம் பிரிட்ஜ் கடந்து காலிது-பின் வாலிது ரோடில், ரமதா ஜங்ஷன் அருகே நெருங்கியிருந்தது.

அவள் என்னைத் திரும்பிப் பார்த்துச் சொன்னாள். ''முஹம்மத்! உங்களுக்கு அவசரம் இல்லையே? கென்டகியில் போய் ஏதாவது சாப்பிட்டுக் கொண்டே கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருப்போமே...''

''ஸாரி, கென்டகி வேண்டாம். அது அமெரிக்கன் அவுட்லெட்! தங்களது ஆயுத பலத்தால் மூன்றாம் உலக நாடுகளைக் கொள்ளையடிக்கும் வல்லரசுகளை எதிர்க்க, எனக்குத் தெரிந்த வழி அவர்களை பகிஷ்கரிக்கிறது ஒன்றுதான்.

''ஓ..! பாய்காட்டா? அப்போ இந்தியன் உணவே ஆகட்டுமே!'' அவள் சிரித்தவாறே காரை முகல் ரெஸ்டாரண்டுக்குத் திருப்பினாள்...

முகல் ரெஸ்டாரண்டின் தனியறை. சில்லென்ற குளிர்பதனம். அழகான அலங்காரம். இதமான ஒளி... கட்லெட்டைச் சுவைத்தவாறே, லைலா என்னையே உற்றுப் பார்த்தாள். அதில் தேடுதல் இருந்தது...

இதமான சங்கீதமும், இனிமையான துணையும்... ஒரு போதை போல! மனக் கூட்டிலிருந்து காதல் புறாக்கள் கட்டவிழ்ந்து பறக்குமோ? நான் கூச்சத்துடன் நெளிந்தேன்.

அவள் கவனத்தைத் திருப்பி விட எண்ணிக் கேட்டேன். ''நான் கேட்டதற்குப் பதிலை இன்னமும் சொல்லவில்லையே...''

அவள் சிரித்தாள். ''ஓ, அதுவா? முஹம்மத், உங்க நாட்டில் சீதனப் பிரச்னை. இங்கே அதில்லைங்கிறது உண்மைதான்! ஆனாலும் புருஷன் பெண்ணுக்கு மஹர் கொடுக்கணும் இல்லையா? அதுதான் பிரச்னை..!''

''அதிலென்ன பிரச்னை?'' - ஆச்சரியப்பட்டேன்.

''இருக்கு! பெண்ணைப் பெத்தவங்க தங்கள் மகளுக்கு நிறையக் கிடைக்கணும்னு எதிர்பார்க்கிறாங்க! அது அவர்களுக்குக் கௌரவப் பிரச்னை. இருப்பவன் கொடுக்கிறான். அந்த அளவுக்கு வழியில்லாதவன்,

---

''மேடையில் தலைவர்கள் ஆளாளுக்கு ஒரு திசையைப் பார்த்துக்கிட்டு நவக்கிரகம் மாதிரி உட்கார்ந்திருக்காங்களே..?''

''எல்லாம் கேரள சோதிடர் குறித்துக் கொடுத்த திசைகளாம்!''

– சீர்காழி வி.ரேவதி

---

வெளிநாட்டுப் பெண்ணைக் கட்டிக்கிறான்! அதான் நிறைய அமெரிக்கா, ஐரோப்பா, மற்றும் ஆசிய நாடுகளைச் சேர்ந்த பெண்களெல்லாம், எங்கள் எதிர்காலச் சந்ததிகளைச் சுமக்கும் தாயாகிறார்கள்...

உயர்ந்த விலையுள்ள பொருட்கள் விற்கப்படாமல் கண்ணாடிக் கூட்டிலிருப்பது போல, இந்த நாட்டில் பல பெண்களும் தனிமரமாக நிற்கிறார்கள். வயதும் ஏறுகிறது! தவிரவும், கையில் பணமிருக்கும் அரபி, இருபதுக்கும் மேலாகாத இளம் பெண்களைத்தான் தேடுகிறான். முப்பது வயதாகியும் திருமணம் நடக்காது போனால், அப்புறம் கல்யாண மார்க்கெட்டில் விலை போவது கஷ்டம்தான்..!'' அவள் பெருமூச்சு விட்டாள்.

''வேடிக்கைதான்! பெத்தவங்களே மகளோட வாழ்க்கைக்குத் தடையாக இருக்கிறதா? மஹரைக் குறைத்துக் கொண்டால் என்ன குடியா மூழ்கிப் போயிடும்? நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தன் மகள் பாத்திமாவை அலி(ரலி)க்கு மணமுடித்துக் கொடுத்தது, ஒரு மேலங்கி மஹராக வாங்கிக்

கொண்டுதானே..!"

"முதலிலேயே சொன்னேனே.. கௌரவப் பிரச்னை! முதலில் அப்பா நிறையக் கேட்டார். காத்திருந்ததுதான் மிச்சம்! பொருத்தமான வரன் கிடைக்கவில்லை. வயதும் ஏறிவிட்டது. இப்போ அப்பா நினைக்கிறார். எப்படியாவது மகளின் கல்யாணம் நடந்தால் போதுமென்று. ஆனால் பெண் கேட்டு வருகிறவர்கள் ஏற்கெனவே ஆனவர்களாகவோ, மிகவும் வயதானவர்களாகவோ இருக்கிறார்கள். ஒத்துக் கொள்ள மனமில்லை...!"

"மஹரை நிச்சயிக்கும் உரிமை பெண்ணுக்கில்லையா..?"

"இஸ்லாமிய விதிப்படி, பெண்கள் தங்களின் மஹரை நிச்சயிக்கலாம்தான். ஆனால் எங்கேயும் சட்டங்கள் வேறு. சம்பிரதாயங்கள் வேறு. நீங்கள் இந்திய முஸ்லிம்கள் இஸ்லாத்திற்கு விரோதமாக சீதனம் வாங்குவது போல, இங்கே பெண்களின் மஹரை பெற்றவர்கள் நிச்சயிக்கிறார்கள். இஸ்லாம் பெண்களுக்கு வழங்கிய உரிமையை ஆண்கள் அனுமதித்தாலே போதும். எத்தனையோ பெண்களின் வாழ்வு விடியும்!"

"சம்பிராதயமென்கிற விலங்கை உடைக்க முடியாதா?"

"முடியும்! இஸ்லாம் ஆணுக்கும் பெண்ணுக்கும் வழங்கியுள்ள உரிமைகளை முதலில் உணர்ந்து கொள்ள வேண்டும். இஸ்லாமிய அடிப்படையில் சீர் செய்யப்பட்ட ஒரு சமூகத்தில், இந்த மாதிரி இழிவான சம்பிராதாயங்களுக்கு இடமிருக்காது. அப்படிப்பட்ட ஒரு சமூக அமைப்புக்காக உழைப்பவர்களை மத அடிப்படைவாதிகள் என்றும், தீவிரவாதிகள் என்றும் முத்திரை குத்தி எதிர்க்கிற நிலைமையல்லவா இருக்கிறது!"



நான் பெருமூச்சு விட்டேன். அப்பட்டமான உண்மை! எவ்வளவு அழகாகச் சொல்கிறாள்!! நாளைய பொழுதாவது விடியுமென்று நம்பலாமா?

ஏதோ தோன்றியது! தயக்கத்துடன் கேட்டேன். "சரி, உங்கள் ஆண்கள் வெளிநாட்டுப் பெண்களைத் திருமணம் செய்துக்கிற மாதிரி, நீங்கள் அரபிப் பெண்களும், அயல்நாட்டு ஆண்களைத் திருமணம் செய்து கொள்ளலாமே! ஏன் முன் வருவதில்லை?"

அவள் சிரித்தாள். "நியாயமான கேள்வி! எதற்குக் கேட்கிறீர்கள்? என்னைக் கல்யாணம் செய்து கொள்ள ஆசையா?"

குப்பென வியர்த்தது. பதில் சொல்ல முடியாமல் தடுமாறினேன்.

அவளே தொடர்ந்தாள். "அப்படி ஆசைப்பட்டாலும் அதில் தப்பில்லை. நானும் உங்களை மனதார நேசிக்கிறேன். ஆனால் இந்த நாட்டு ஆண் ஒரு வெள்ளைக்காரியைக் கல்யாணம் செய்துகிட்டால் அவளுக்கும், அவளுக்குப் பிறக்கிற குழந்தைகளுக்கும் பிரஜா உரிமை கிடைக்கிற மாதிரி, பெண் திருமணம் செய்து கொண்டால் கிடைப்பதில்லை. என் கணவரும் குழந்தைகளும் அயல்நாட்டினராகவே கருதப்படுவர். பிறகெப்படி வாழ்நாள் முழுவதும் சேர்ந்து வாழ முடியும்? எங்கே போனாலும், எப்படிப் போனாலும் இறுதியில் பாதிக்கப்படுவது பெண்கள்தான். இல்லையா?"

நான் யோசித்தேன். "அப்படியும் சட்டமுண்டா? நீங்க விரும்பினால் இந்தியா வரலாமே?"

அவள் சொன்னாள். "அல்லாஹ்வின் சட்டங்களில் பாகுபாடில்லை. ஆட்சியாளர்களின் சட்டங்களில் அது உண்டு. என் வேர்களை மறந்து அங்கு வந்து வாழ்ந்துவிட, என்னால் முடியுமென்று தோன்றவில்லை. சில ஆசைகளை கனவுகளாக வைத்திருக்கவே நம்மால் முடியும். நம் இதயத்தின் இரகசிய அறைகளில் அது நிம்மதியாக உறங்கிக் கொண்டு இருக்கும். அதை எழுப்ப வேண்டாம்! சுகமான கனவுகளைச் சுமப்பதும் ஒரு சுகம்தானே..?" விரக்தியுடன் சொன்னாள்.

அவள் சொன்னதின் பொருள் புரிந்த போது, மனதுக்குள் ஏதோ பாரம் ஏற்றி வைத்ததுபோலிருந்தது. நான் ஏமாற்றத்துடன் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன்.



பிண்டங்களா?''

''அரிசிச் சோறு உங்களுக்கு என்ன இளக்காரமாகப் போய்விட்டதா? உலகம் முழுக்கச் சுற்றி வாருங்கள். அரிசிச் சோறு, உருளைக்கிழங்கு, வெங்காயம், பூண்டு இல்லாத சமையலைக் காண்பது அரிது. தெரியுமா?'' என்று சவால் விட்ட அரோரா, ''அதைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் தொடர்ந்து ஒரு வாரம் இங்கே வர வேண்டும்'' என்றார்.

''ஏன்? 'ஏதாவது' வேண்டுதல் விவகாரமோ?''

''நோ... நோ.. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நாட்டு உணவைத் தயாரித்து வழங்குகிறோம். எங்கள் 'கொத்துமல்லி' (பிரெஞ்சு மொழியில் சிலிண்ட்ரோ - பொருள் கொத்துமல்லி) உணவகத்தில் அன்றாடம் ஆஜராகி விடுங்கள். உலகத்தைச் சுற்றி வந்து விடலாம்'' என்றார் அரோரா. ''கத்திப்பாராவில் உலகம் அடங்கி விட்டதா?'' என்று கண்களை விரித்து நாக்கைத் தொங்க விட்டோம்.

''பழகிப் போனப் பாதையில் (beaten track) போகாதீர்கள். புதுப்பாட்டையை உருவாக்குங்கள்'' என்பது மெரிடியன் ஹோட்டல் சேர்மன் பழனி. ஜி. பெரியசாமியின் தாரக மந்திரம். ''தினமும் இந்தியன், கான்டினென்டல், சைனீஸ் என்று போரடிக்காமல், புதுவிதமாக யோசித்துப் பாருங்களேன்'' என்று அவர் சொன்னவுடன் பேசாமல் இருக்க முடியுமா? உலகின் பல சிறந்த ஹோட்டல்களில் பணியாற்றிய அரோரா, சிந்தனைக் களத்தில் குதித்து விட்டார். அவ

* ஜீகேஷ் அரோரா

# கொத்துமல்லி

**எச்சரிக்கை! 'பசையுள்ளவர்களும் கிரெடிட் கார்டு' வைத்திருப்பவர்களும் கட்டுரைக்குள்ளே போகலாம்!**

''பூகோள உருண்டையை எடுத்துக் கொள்ளுங்கள். வட, தென் துருவங்களை இணைக்கும் பூமத்திய ரேகை மீது கண்களைப் பதியுங்கள். இந்தியாவிலிருந்து துவங்கி அப்படியே போனீர்கள் என்றால், சரியாக இந்தியாவிற்குப் பின்னால் மெக்ஸிகோ இருப்பது தெரிய வரும்'' என்றார் லீ ராயல் மெரிடியன் ஹோட்டலின் தலைமைச் சமையல் கலைஞரான ஜீகேஷ் அரோரா.

இவரென்ன சமையல் கலைஞரா அல்லது ஜியாக்ரபி ஆசிரியரா என்ற சந்தேகம் வந்து ''சரி... அதற்கென்ன?'' என்றோம் கொஞ்சமும் ஆர்வமில்லாமல்.

''ரிலாக்ஸ்... சரியாக நேர்ப் பின்னால் இருப்பதாலோ என்னவோ, மெக்ஸிகோ நாட்டு மக்களின் உணவுப் பழக்கங்களும், நம்மவர்களின் உணவுப் பழக்க வழக்கங்களும், கிட்டத்தட்ட ஒரே மாதிரியாகத்தான் இருக்கும்.''

''அது சரி... அவர்களும் சோற்றால் அடித்த

ருக்கு உதவியாக பொதுஜனத் தொடர்பு அதிகாரி விமல் சங்கர் போன்ற இளமைத் துடிப்புடன் கூடிய எக்ஸிக்யூட்டிவ்கள். தினசரி ஒவ்வொரு நாட்டு உணவைத் தயாரித்து பஃபே முறையில் வழங்கலாம் என்று முடிவு செய்தார்கள். திங்கள் அன்று அரேபியன் உணவு, செவ்வாய், தாய்நாட்டு உணவு வகைகள் என்று ஏழு நாட்களுக்கு ஏழு வகைகள். அதிரடியான விளம்பரங்களின் மூலம் செய்தி பரவ, உணவகத்தில் ஏகக் கூட்டம். ஒரு மாதம் மட்டும் சோதனை முயற்சியாகச் செய்து பார்க்கலாம் என்று துவங்கப்பட்ட இந்தத் திட்டம், மூன்று மாதங்களுக்கு நீட்டிக்கப்பட்டிருக்கிறது.

"மற்ற நாட்டு உணவு வகைகளுக்கும் நம்முடைய உணவு வகைகளுக்கும் உள்ள வித்தியாசம்?"

"நம்ம ஜனங்கள் காரமான மசாலா ஐட்டங்களை விரும்பிச் சாப்பிடுவார்கள். அரேபியன் உணவில் பாதாம், பிஸ்தா, முந்திரி போன்ற

# உலகம்!

கொலஸ்ட்ரால் ஐட்டங்களின் ஆதிக்கம் கொடிகட்டிப் பறக்கும். அசைவம் கட்டாயம். கேரளப் பாணி சமையலுக்கும் தாய் நாட்டுச் சமையலுக்கும் அடிப்படையாக ஓர் ஒற்றுமை உண்டு. இரண்டு சமையலிலும் தேங்காயின் பங்கு பிரதானம். ஃப்ரைட் ரைஸ், நூடுல்ஸ் என்று சுழற்றுபவர்கள் சைனாக்காரர்கள். தக்காளியில் மூழ்கி எழ வேண்டும் இத்தாலிக்காரர்களுக்கு. அது இல்லாமல் உணவு இறங்காது அவர்களுக்கு. மலேசிய உணவும் இந்திய உணவும் கிட்டத்தட்ட ஒரே மாதிரியானவைதான். எல்லா நாட்டு உணவுகளிலும் அசைவத்துக்கு ஒரு கணிசமான பங்கு இருப்பதை மறுப்பதற்கில்லை" என்று ஒரு குட்டி உலகப் பயணம் செய்து முடித்தார் அரோரா. இந்திய உணவில் தந்தூரிப் பிரிவைச் சேர்ந்த ருமாலி ரொட்டி, குடை மிளகாய்க்குள் சோற்றை அடக்கி செய்யப்படும் ஐட்டம், உப்பு, காரத்துடன் செய்யப்படும் மெக்ஸிகோ மிளகாய் பஜ்ஜி ஆகியவற்றை மக்கள் விரும்பிச் சாப்பிடுகிறார்களாம்.

அடுக்கி வைத்திருக்கிற பஃபே ஐட்டங்களைப் பார்க்கும்போது, நம்மை அறியாமலேயே நமது கை பர்ஸின் கனத்தைத் தொட்டுப் பார்க்கிறது. வறுமைக் கோட்டின் மேலேயே உட்கார்ந்து கொண்டிருக்கும் நடுத்தர வர்க்கத்தின் கைக்கெட்டும் (வாய்க்கெட்டும்!) தூரத்தில்தான் இவை இருக்கின்றனவா, என்ற கேள்வி மனதுக்குள் எழுகிறது. அதைப் புரிந்து கொள்கிறார் அரோரா.

"அதிகமில்லை ஜென்டில்மேன், பஃபே உணவு, வரியுடன் சேர்த்து நானூற்றியெழுபது ரூபாய்தான்" என்கிறார் அவர். விஜய், அர்ஜுன், சிலம்பரசன் ஆகியோர் கொத்துமல்லி உணவகத்தின் ரெகுலர் விஸிட்டர்களாம்.



* விமல் சங்கர், அரோராவுடன்... ஹோட்டல் ஊழியர்கள்

அவர்களுக்கு இதெல்லாம் சில்லறை சமாச்சாரம்!

'நானூற்றியெழுபது ரூபாய் இருந்தால் மின் கட்டணம் கட்டலாமே! ஒரு மாதம் ஸ்கூட்டருக்குப் பெட்ரோல் போடலாமே' என்ற சிந்தனைகள் நம்மைச் சிதறடிக்க, சொர்க்கலோகமாக ஜொலித்த ஹோட்டலின் லாபியைக் கடக்கும்போது, இந்த உலகம் நமக்குத் தொடர்பில்லாத ஒன்றோ என்று கூடத் தோன்றியது. "நீங்கள் நினைப்பது போல அல்ல; இப்போது நிறைய நடுத்தரப் பிரிவு மக்கள் இங்கே வருகிறார்கள். பணத்தைச் செலவழிக்கும் மனப்பாங்கு இப்போது சென்னை மக்களிடையே வளர்ந்து விட்டது" என்றார் விமல் சங்கர். அதை நிரூபிப்பது போல கொத்துக் கொத்தாக மக்கள் கொத்தமல்லி உணவகத்துக்குப் போய்க் கொண்டிருந்தார்கள்.

- ஸ்ரீநி

படங்கள்: மீடியா ராமு

**நெஞ்சில் நிற்கும் நீல கண்டனின் திருவிளை யாடல்கள் - வீ.ஜே. செல்வராஜு**

மனம் நெறிப்படவும், குணம் வழிப்படவும், அகம் வசப்படவும், இகம் சுகப்பட வும், இறை வழிபாடும் அதை யொட்டிய சமய நெறிகளும் தமிழகத்தில் ஏராளம். அதற்காக புனையப்பட்ட புராண, காவி யங்களும் பலப்பல. அதில் திரு விளையாடற் புராணத்திலிருந்து சுவையான சில துளிகளின் தொகுப்பு.

**மணிமேகலை பிரசுரம், 7. தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 17, விலை ரூ.45/-**




**குரு - (தொகுப்பு) க. சுப்ரமணியன் (காஞ்சி பரமாச் சார்யாரின் உரைகளி லிருந்து தொகுத்தவை)**

ஒரே தலையுள்ள பிரம்மா, இரண்டே கரங் களுடைய ஹரி, நெற்றிக் கண் இல்லாத சிவன் - குரு வானவரை இப்படி வர்ணிக் கிறார் வியாஸர். வேதமும், நூல்களும் சுட்டித்தான் காட் டும். குருதேவரோ தொட்டும் காட்டுவார், இட்டுக் கொண் டும் போவார். வாழ்க்கைக்கு வழிகாட்டுதலும், வழி காட் டலுக்கு குருவும் அவசியம் என்று குருவின் மகத்துவத்தைப் பற்றி காஞ்சி மஹா சுவாமிகள் கூறிய வற்றைத் தொகுத்த நூல்.

**திருவரசு புத்தக நிலை யம், 13. தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17, விலை ரூ.50/-**




**இயற்கை வைத்தியம் - டாக்டர் கே. என். சரஸ்வதி**

பழந்தமிழகத்தில் விருந்தும் மருந்தும் மூன்று நாட்கள்தான். இன்று வேளைக்கொன்று, மணிக் கொன்று என வண்ண வண்ண மாத்திரைகளே வாடிக்கையாகிப் போய் விட்டன. இயற்கையை நம்பி அதனோடு ஒன்றி வாழ்ந்தால், வேளைக்கொரு மாத்திரை என்பதையும் மாற்றலாம், ஆரோக்கியமாகவும் வாழலாம் என அறுதியிட்டுக் கூறும் நூல்.

**கடலங்குடி பப்ளிகே ஷன்ஸ், 38, நடேச ஐயர் தெரு, தி.நகர், சென்னை - 17, விலை. ரூ.25/-**



**சூரியன் என் முகவரி - இராம்கம்பர்**

வழிமாறி, உருமாறி, தடு மாறி, ஒரு மாதிரி வெறும் உரையாகிவிட்ட தமிழ்க் கவி தைகளில், இன்னும் எதுகை யையும் மோனையையும் இயன்றவரை தொட்டுக் கொண்டு, உயரே இருப்பவற் றையே பாடுபவர்களும் இருக் கிறார்கள். உண்மைகளின் தாக் கத்தால் உயர்ந்த நோக்கங் களைப் பாடும், உரைநடைக் கவிதைகளின் தொகுப்பு.

**தமிழ்த்தாய் பதிப்பகம், அம்மையப்பன், தத்துவாஞ் சேரி (அஞ்சல்), திருவிடை மருதூர் 612 502, விலை ரூ. 25/-**




**நாட்டுப்புறவியல் - சு. சண்முகசுந்தரம்**

நாட்டுப்புறத்துக் கென்று நம்பிக்கைகள், விழாக்கள், விதம் வித மான வழிபாடுகள், மருத் துவம் என பல கலைகளும், தனிப்பண்புகளும் உண்டு. அவற்றைப் பற்றித் தீவிர மாக, ஆர்வம் காரணமாக எடுத்துக் கொண்ட அதிகப் படியான சிரமங்களோடு, விவரமாகத் தொகுத்த நூல். ஆராய்ச்சி மாணவர்க்கு மிக அருமையாய் உதவக் கூடியது. சற்று முந்திக் கொண்டு வந்த பதிப்பு!

**காவ்யா, 14, முதல் குறுக் குத் தெரு, டிரஸ்ட்புரம், சென்னை - 24, விலை ரூ. 100/-**




- **விஸ்வக்**

## ஐசுவரிய ஆரோக்கிய மேன்மைகளை அட்டியின்றி தரும்

# ஆழ்நிலை தியானம்

## (தபால் வழி பயிற்சி)

நமது ஆராதனைகளை சக்திமிக்க வடிவில் செய்தால் தெய்வ சகாயத்தால் எத்தனை பெரிய காரியங்களிலும் வெற்றி காணலாம் என்பதுதான் ராஜயோக விளக்கம். அதன் அரிச்சுவடிதான் ஆழ்நிலை தியானம். மனம் ஒடுங்கிட தியானம் எப்படி செய்ய இறைவழி நலங்களை எல்லையில்லாமல் அடைய முடியும் என்பதன் அடிப்படை பயிற்சிதான் ஆழ்நிலை தியானம். மூச்சு ஒடுக்கம், தீர்க்க ஞானம், ஞான திருஷ்டி, திடதிரேகம், தீர்க்காயுள் என்றவை யாவும் ஆழ்நிலை வழியாக ஆண்டவன் தடையின்றி தருகின்ற வரப்பிரசாதமாகும்.

இதனை தொட்டெடுத்து செய்ய துவங்கிவிடில் - எத்தனை பெரிய வியாதி இருப்பினும் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து என்றும் நீடூழி வாழும் ஆரோக்கிய நிறைவை தந்துவிடும். இந்த வழி தியானத்தில் நிலைத்து நின்றிட நினைத்துவிடில் - எத்தனை பெரிய கோடீஸ்வர வாழ்வையும் கொண்டு வந்து நிறுத்திவிடலாம். கொஞ்சமும் சந்தேகமில்லை. இதுதான் ராஜயோகம்.

இந்த இனிய பயிற்சியை எவராலும் செய்ய முடியும். அத்தனை எளிதான வழிமுறைகள். எனவே எவருக்கும் நிச்சய நலன் செய்யும் இப்பயிற்சியை துவங்கிய 90 நாட்களிலேயே நல்ல அறிகுறிகள் தென்படும். அயர்வுகள் நீங்கிவிடும் - அடுத்தவர் செய்யும் தீங்குகள் மறைந்துவிடும். ஆண்டவனின் அருள் வழியாக ஆஸ்தி நிறைவு பெறுவதற்கான அறிகுறிகள் தென்படும். அத்தனை அதிசயமானது செய்ய செய்ய தீர்க்க தரிசனம் - யாம் செய்யும் காரியங்களை செவ்வனே செய்யும் சரியான முறைகள் தென்படுதல் - ஞான திருஷ்டி - பின் வருவனவற்றை முன் அறிதல் - எத்தனை பெரிய காரியத்தையும் செய்து நிச்சய வெற்றி பெறும் தெய்வீக திறனாற்றல் - அத்தனையும் இதன் வழியாக ஏற்படும்.

இதனை முன்வைத்து தொழில் வழி மேன்மை, குடும்ப நலம், குபேர வாழ்வு, குழந்தை நலம், இல்லற இலக்கணம் காணல்,பெற்றோர் காத்தல் - நீதி வழி நிற்றல், எவருக்கும் உதவிடும் இனிய ஆற்றல் பெறல் அத்தனையும் பெற்று அவனியில் அரியதோர் நிலையை அடைய முடியும். ஒரு மனிதன் எவ்விதம் வாழ வேண்டும் - இனிய வாழ்வை எப்படி அமைக்கலாம் என்ற வழிமுறைகள் அத்தனையும் ஆண்டவன் முன் நின்று அறிவிக்கும் ஒரு அரிதான நிலையதனை இந்த பயிற்சி வடிவில் காணலாம்.

இப்பயிற்சியை செய்து சிறந்ததான தேக நலமும் - சிறப்புற்ற செல்வ வளமும் பெற்றிட எண்ணுவோர்
நிச்சயமாக - மதுபானம் செய்வதோ, புகை பிடிப்பதோ, புகையிலை, பொடி போடுவதோ
போன்ற தீய குணங்கள் ஒரு சிறிதும் இருக்கக்கூடாது. அது இருப்பின் நிச்சயமாக
இதில் நலம் பெற வைக்காது. எனவே இத்தீய பழக்கம் உள்ளோர் விண்ணப்பிக்க வேண்டாம்.

நான்கு வித யோகங்கள் மூன்று வித சரீரங்கள் - அவற்றின் தன்மைகள், அவற்றின் இயக்கங்களுக்கு எதிரான இந்த தீய பழக்கங்கள் - தெய்வீக சக்தியை உடலில் வரவிடாமல் தடுத்துவிடும். எனவே - அவ்வித பழக்கம் உள்ளவர்கள் மனுச்செய்ய வேண்டாம்.

நிச்சயமாக காலை, மாலை மனம் ஒடுங்க பூஜை செய்யும் பழக்கம் சிறிதளவேனும் இருக்க வேண்டும். இவ்வியல்புடையவர்கள் இந்த பயிற்சியில் நிச்சய நலனை அடைவார்கள். பெண் இனத்தாரும் தியான வழியில் மிக மேலான நலன்களை பெற்று வேண்டிய நலன்களை அடைந்திருக்கின்றனர். ஆனதால் அவர்களும் ஜாதக நகலுடன் **19-11-2003** தேதி மாலைக்குள் மனுச்செய்வோர் அனைவரும் 'இப்பயிற்சி பெற விரும்புகிறேன்' என்று எழுதி மனுச்செய்துகொள்ள வேண்டும்.

எவர் ஒருவருக்கு இந்த ராஜயோக வழியாக மேன்மை அடையும் 'விதி' அமைப்பு இருக்கின்றதோ அவர் கண்ணில்தான் இந்த விளம்பரம்படும். அவருக்கு உரிய தேதிக்குள் ஜாதக நகலுடன் மனுச்செய்யும் வாய்ப்பை கடவுள் கொடுப்பார். கிடைத்தவுடன் உரியபடி ஜாதகத்தை பரிசீலித்து விபர படிவம் அனுப்புவோம். அது உங்களுக்கு கிடைத்தவுடன் நல்ல அறிகுறிகள் தென்படும். எமது ஆசிகள்.




பிரபல ஜோதிடர், ஜோதிட ஆசிரியர்

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா, யோகி**

இராஜயோக பயிற்சியாளர் தபால் பெட்டி எண்: 55

பிளாட்எண்:204,அண்ணாநகர் மதுரை - 625 020 தமிழ்நாடு

(0452)
2533412
2650576

# ஆசையா இருக்கா இங்கிலீஷ் பேச?



**இங்கிலீஷ்ல பேசணும்னு ஆசையாத் தான் இருக்கு. ஆனால்... ஏதாவது தப்பா பேசிடுவோமோன்னு பயமா இருக்கு. இதுதானே உங்க ப்ராப்ளம்?**

**இனி NO PROBLEM!**

விவேகானந்தா இன்ஸ்டிட்யூட்டின் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து நீங்கள் சுலபமாக இங்கிலீஷ் பேசக் கற்றுக் கொள்ளலாம்.

இனிய தமிழ் விளக்கங்களுடன் எளிய முறையில் அமைக்கப்பட்டுள்ள **ஸ்போக்கன் இங்கிலீஷ் கோர்ஸ்** பாடங்களை, உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் படித்து, பிராக்டிஸ் செய்தால் போதும். தயக்க மின்றி இங்கிலீஷில் சரளமாகப் பேச ஆரம்பித்து விடுவீர்கள்.

கடந்த **22** ஆண்டுகளில் **15** லட்சத் திற்கும் மேற்பட்டவர்கள் இப்பயிற்சி யின் மூலம் பயனடைந்துள்ளனர்.

**சரளமாக இங்கிலீஷ் பேச வேண்டும் என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்பயிற்சியின் மூலம் நிச்சயம் நிறைவேறும்.**

**எழுதப் படிக்கத் தெரிந்தால் போதும்!**

இங்கிலீஷ் வார்த்தைகளை ஓரளவு எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர்ந்து, சரளமாக இங்கிலீஷ் பேசப் பயிற்சி பெறலாம்.

**இலக்கணம்** மற்றும் **உரையாடல்** பயிற்சிப் பாடங்கள் அடங்கிய இக் கோர்ஸின் கட்டணம் ரூ. **395/-** மட்டுமே.

**அடிப்படையிலிருந்தும் ஆரம்பிக்கலாம்!**

இங்கிலீஷ் வார்த்தைகளை எழுதப் படிக்க இயலாதவர்கள் அடிப்படையி லிருந்து தொடங்கி ஆங்கில வார்த்தை களை ஸ்பெல்லிங் மிஸ்டேக் இல்லாமல் எழுதப் படிக்க கற்றுக்கொண்டு இங்கிலீஷில் மிகச் சரளமாகப் பேசப் பயிற்சி பெறலாம்.

**அடிப்படை மற்றும் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸின்** கட்டணம் ரூ. **525/-** மட்டுமே.

கீழே உள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள். பாடங்களை **V.P.P.** மூலம் உடனே அனுப்பு கிறோம். தபால்காரரிடம் பணத்தைச் செலுத்திப் பெற்றுக் கொள்ளுங்கள். பாடங்களை தினசரி அரைமணி நேரம் பிராக்டிஸ் செய்து மடமடவென இங்கிலீஷில் பேச ஆரம்பியுங்கள்.

**இதோ கூப்பன்**

☐ நான் விவேகானந்தாவின் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ. **395/-** செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

☐ நான் அடிப்படை (Basic) மற்றும் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். ரூ. **525/-** செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

(தேவையான கட்டத்தில் ✓ குறியிடுங்கள்)

AMR

பெயர் : ..........................................................

முகவரி : ..........................................................

..........................................................

..........................................பின்கோடு..........

**விவேகானந்தா இன்ஸ்டிட்யூட்**
9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை - 600 017.

கூப்பனை 15 நாட்களுக்குள் அனுப்பிப் பாடங்களுடன் 416 பக்கங்கள் கொண்ட இங்கிலீஷ் - தமிழ் டிக்ஷனரி ஒன்றினைப் பரிசாகப் பெறுங்கள்.

06 / TAM / 03 / NAGA

# சிவகாமியின் சபதம்

முப்பத்து இரண்டாம் அத்தியாயம்

## காபாலிகையின் காதல்

வெறி

னை நோக்கிக் கைகளைத் தூக்கிப் பல தெய்வங்களின் பேரில் ஆணையிட்டுச் சபதம் செய்த பிக்ஷு மறுபடியும் கீழே உட்கார்ந்து புலிகேசியின் உயிரற்ற உடலை எடுத்துத் தம் மடியின் மீது வைத்துக் கொண்டார்.

"தம்பி! நீ சாகவில்லை. இத்தனை நாளும் நாம் ஒருயிரும் இரண்டு உடலுமாக வாழ்ந்து வந்தோம். இப்போது உயிரைப் போல் உடம்பும் ஒன்றாகி விட்டோம். என் உயிரோடு உன் உயிர் ஒன்றாகக் கலந்து விட்டது. இனிமேல் நீதான் நான்; நான்தான் நீ! இரண்டு பேர் இல்லை!"

இவ்விதம் உருகிக் கனிந்த குரலில் கூறி விட்டுப் புத்த பிக்ஷு தமது தேகம் முழுவதும் குலுங்கும்படியாக விம்மி விம்மி அழுதார்.

சுயப் பிரக்ஞையை அறவே இழந்து சோகக் கடலின் அடியிலே அவர் ஆழ்ந்து விட்டார் என்று தோன்றியது.

இரவு விரைவாகச் சென்று கொண்டிருந்தது. சந்திரன் மேலே மேலே வந்து கொண்டிருந்தது.

பாறைகள் - மரங்களின் நிழல்கள் வர வரக் குட்டையாகிக் கொண்டு வந்தன.

நெடுநேரம் பாறை மறைவில் நின்று காத்துக் கொண்டிருந்த காபாலிகை கடைசியில் பொறுமை இழந்தாள்.

மெதுவாகப் பாறை மறைவிலிருந்து வெளிப்பட்டு மெள்ள மெள்ள அடிமேல் அடி வைத்து நடந்து வந்தாள்.

பிக்ஷுவின் பின்புறத்தில் வந்து நின்று

**அமரர் கல்கி**

அவருடைய தோள்களை இலேசாக விரல்களால் தொட்டாள்.

புத்த பிக்ஷு திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்.

''ரஞ்சனி! நீதானா?'' என்றார்.

''ஆம்; நான்தான்!'' என்றாள் காபாலிகை.



"இன்னும் நீ போகவில்லையா?"

"போகச் சொல்லி ஆக்ஞாபித்தால் போய் விடுகிறேன்."

"வேண்டாம், இரு! இந்தப் பெரிய உலகில் என்பேரில் அன்பு உடையவள் நீ ஒருத்திதான் இருக்கிறாய்."

"என் பேரில் அன்பு கொண்டவர் ஒருவருமே இல்லை."

"ஆ! ரஞ்சனி! ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? நான் ஒருவன் இல்லையா?'' என்றார் பிக்ஷு.

சற்றுமுன் அவருடைய குரலில் தொனித்த சோகம் எங்கேயோ போய் இப்போது அதில் கபடங் கலந்த நயிச்சிய பாவம் தொனித்தது.

"அடிகளே! ஏன் இந்தப் பேதையை

ஏமாற்றப் பார்க்கிறீர்? இந்தக் கோர அவலட்சண உருவத்தின் பேரில் யாருக்குத்தான் பிரியம் ஏற்படும்!" என்று காபாலிகை கேட்டாள்.

"காதலுக்குக் கண்ணில்லை என்று நீ கேட்டதில்லையா? நீ எத்தனை குரூபியாயிருந்தாலும் என் கண்ணுக்கு நீதான் ரதி!" என்றார் புத்த பிக்ஷு.



"வஞ்சக பிக்ஷுவே! ஏன் இப்படி மனமறிந்து பொய் சொல்லுகிறீர்? என்னை இந்த அலங்கோலம் ஆக்கினது நீர்தானே? என் பேரில் அன்பு இருந்தால் இப்படிச் செய்திருப்பீரா?" என்றாள் அந்தக் கோர காபாலிகை.

"ரஞ்சனி! இதைப் பற்றி எத்தனை தடவை உனக்குச் சொல்லிவிட்டேன்? அஜந்தா சித்திரத்தைப் போன்ற அற்புத அழகோடு வாதாபி அரண்மனையில் நீ இருந் தால், யாராவது ஒரு இராஜ குமாரன் உன்னை அபகரித்துக் கொண்டு போய் விடுவான் என்று தானே இப்படிச் செய்தேன்?"

"என்னைத் தாங்களே அபகரித்துக் கொண்டு போயிருக்கலாமே? யார் வேண்டாம் என்று சொன்னது?"

"அதையும்தான் உனக்கு ஆயிரம் தடவை சொல்லியிருக்கிறேன். மறுபடியும் சொல்லுகிறேன். நான் செய்ய வேண்டிய காரியங்கள் சில இருந்தன. முக்கியமாக, புத்த சங்கத்திலிருந்து விடுதலை பெற வேண்டியிருந்தது."

"இப்படித்தான் எத்தனையோ காலமாய்ச் சொல்லி வருகிறீர். எப்போதுதான் உமக்கு விடுதலை கிடைக்கப் போகிறது?"

"ரஞ்சனி! எனக்கு விடுதலை கிடைத்து விட்டது! உன் மனோரதம் நிறைவேறுவதற்கான பெருந்தடை நீங்கி விட்டது. உனக்குச் சந்தோஷந்தானே?" என்று பிக்ஷு நயமாகக் கூறினார்.

"சத்தியமாகச் சொல்லுகிறீரா?" என்று ரஞ்சனி கேட்டாள்.

"முக்காலும் சத்தியமாகச் சொல்லுகிறேன். நான் விடுதலை கேட்கவே தேவை ஏற்படவில்லை. புத்த சங்கத்தாரே என்னைப் பிரஷ்டம் செய்து விட்டார்கள். உன்னுடைய தபஸின் சக்தியினால்தான் இது நடந்திருக்க வேண்டும்."

காபாலிகை இன்னும் சந்தேகம் நீங்காதவளாய், "ஏன் பிரஷ்டம் செய்தார்கள்? சர்வ சக்தி வாய்ந்த நாகநந்தி பிக்ஷுவைப் புத்த



சங்கத்தார் எப்படிப் பிரஷ்டம் செய்யத் துணிந்தார்கள்?" என்று கேட்டான்.

''அது பெரிய கதை. அப்புறம் சொல்லுகிறேன். ரொம்ப முக்கியமான வேலை இப்போது நமக்கு இருக்கிறது. இதோ இந்த உடலை தகனம் செய்ய வேண்டும். யாருக்காவது தெரிந்து விட்டால் காரியம் கெட்டுவிடும். எங்கே ரஞ்சனி! கட்டைகள் கொண்டு வந்து இங்கேயே சிதை அடுக்கு. பார்க்கலாம்."

''என்னால் அது முடியாது!''

''ஏன் அப்படிச் சொல்லு

கிறாய்? எனக்கு உதவி செய்ய மாட்டாயா?" என்றார் புத்த பிக்ஷு.

"புத்த சங்கத்திலிருந்து உம்மை ஏன் பிரஷ்டம் செய்தார்கள்? அதைச் சொன்னால் உதவி செய்வேன்."

"சுருக்கமாகச் சொல்லுகிறேன், கேள்! காஞ்சி மாமல்லன் படையெடுத்து வருகிறான் என்ற விஷயம் எனக்கு முன்னமே தெரியும். ஆனால், அதைச் சில காரணங்களுக்காக என் சகோதரனிடம் சொல்லாமல், இரகசியமாய் வைத்திருந்தேன். இது தெரிந்தபோது நான் சகோதரத் துரோகமும் தேசத் துரோகமும் செய்து விட்டதாக இந்த நிர்மூடன் எண்ணினான். நான் உயிர் கொடுத்துக் காப்பாற்றி இவ்வளவு மேன்மைப் பதவிக்குக் கொண்டு வந்த என் சகோதரன் என்னைப் பார்த்து 'உயிரோடிருக்கும் வரையில் என் முகத்தில் விழிக்காதே' என்று சொல்லி அனுப்பினான். அதன் பலனாகத்தான் இப்போது இங்கே அநாதைப் பிரேதமாகக் கிடக்கிறான். நீயும் நானும் இவனை எடுத்துத் தகனம் செய்தாக வேண்டும்!'' என்று சொல்லி பிக்ஷு பெருமூச்சு விட்டார். மறுபடியும் கூறினார்: "இதெல்லாம் அஜந்தா சங்கிராமத்துப் புத்த பிக்ஷுக்களுக்குத் தெரிந்தது. இத்தனை காலமும் என்னால் கிடைத்த உதவிகளையெல்லாம் பெற்று வந்தவர்கள், நான் சக்கரவர்த்தியின் கோபத்துக்கு ஆளானேன் என்று தெரிந்ததும் உடனே என்னைச் சபித்துப் புத்த சங்கத்திலிருந்து பிரஷ்டம் செய்தார்கள். அதன் பலனை அவர்களும் அநுபவிக்க நேர்ந்தது. ரஞ்சனி! நீலகேசியை எதிர்ப்பவர்கள் யாராயிருந்தாலும் தப்பிப் பிழைக்க முடியாது. அவர்களுடைய கதி அதோகதிதான்!"

"அஜந்தா பிக்ஷுக்களுக்கு அப்படி என்ன கதி நேர்ந்தது?" என்று காபாலிகை கேட்டாள்.

"வேறொன்றும் இல்லை. அப்புறம் ஒரு வாரத்துக்கெல்லாம் அஜந்தா பிக்ஷுக்கள் சங்கிராமத்தை மூடிவிட்டு உயிர் தப்புவதற்கு ஓடும்படி நேர்ந்தது. நாடு நகரங்களில் எல்லாம் அஜந்தாக் கலை விழா, புத்த பிக்ஷுக்களின் சூழ்ச்சி; காஞ்சி மாமல்லனுக்கு ஒத்தாசையாக அவர்கள் செய்த வஞ்சகமான ஏற்பாடு' என்ற வதந்தி பரவியது. வதந்திக்கு விதை போட்டவன் நான்தான். ஜனங்கள் கோபங்கொண்டு அஜந்தாவுக்குத் திரண்டு போய்ச் சங்கிராமத்தையும் அங்குள்ள சிற்ப சித்திரங்களையும் அழித்துப் போடுவதற்கு ஆயத்தமாகி விட்டார்கள். இது தெரிந்ததும் பிக்ஷுக்கள் அஜந்தாவுக்குப் போகும் அந்தரங்க பகிரங்க வழிகள் எல்லாவற்றையும் மூடி மறைத்து விட்டு வடக்கே ஹர்ஷனுடைய ராஜ்யத்தை நோக்கி ஓட்டம் பிடித்தார்கள். அப்புறம் அஜந்தாவுக்குப் போக நானே பிரயத்தனம் செய்தேன். என்னாலேயே வழி கண்டுபிடிக்க முடியவில்லை. பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம் என்று திரும்பி வந்துவிட்டேன். நல்ல சமயத்திலேதான் வந்தேன். ரஞ்சனி! எழுந்திரு! சீக்கிரம் நான் சொன்னபடி செய்! உடனே சிதை அடுக்கு! நெருப்பு கொண்டு வா!"

"சக்கரவர்த்தியைத் தகனம் செய்த பிறகு என்ன செய்யப் போகிறீர்கள்?"

"ரஞ்சனி! சக்கரவர்த்தியின் மரணத்தைப் பற்றியோ, தகனத்தைப் பற்றியோ யாரிடமும் பிரஸ்தாபிக்கக் கூடாது. காற்றினிடம் கூடச் சொல்லக் கூடாது. இதைப் பரம ரகசியமாக வைத்திருக்க வேண்டும், தெரியுமா?"

"எதற்காக ரகசியம் அடிகளே?"

"எல்லாம் அப்புறம் சொல்லுகிறேன் ரஞ்சனி! இப்போது ஒரு கணமும் வீணாக்க நேரமில்லை."

"வஞ்சகப் பிக்ஷுவே! நீர் ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை; காரணம் எனக்கே தெரியும்."

"உனக்கு என்ன தெரியும்?"

"இந்தப் பிரேதத்தைத் தகனம் செய்துவிட்டு இரகசியச் சுரங்க வழியாக வாதாபி நகருக்குள் போகப் போகிறீர்! நீர்தான் சக்கரவர்த்தி என்று சொல்லிக் கொள்ளப் போகிறீர். சளுக்க சிம்மாசனத்தில் ஏறி அந்தக் காஞ்சி நகரத்து மூளியை உமக்கு அருகே உட்கார்த்தி வைத்துக் கொள்ளப் போகிறீர்...!"

நாகநந்தி கோபங்கொண்டு எழுந்து, "உன் வாக்குப்படியே செய்கிறேன். எப்படியாவது நீ தொலைந்து போ! இனிமேல் உன்னோடு..." என்று மேலும் சொல்வதற்குள் காபாலிகை அவர் காலில் விழுந்து, "அடிகளே! என்னை மன்னித்து விடுங்கள். நீர் சொல்வதைக் கேட்கிறேன்!" என்றாள்.

## அருள்வாக்கு



ஆலிலைக்கு ஒரு விசேஷமுண்டு. அதிலே ஜீவஸாரம் ரொம்ப அதிகம். அதனால்தான் அது எத்தனை வாடினாலும் மற்ற இலைகள் மாதிரி வற்றிப் போய் நொறுங்குவதில்லை. சருகாகிறபோது கூட மெத்தென்றே இருக்கும். அதனாலேயே பகவான் குழந்தையாக வருகிறபோது மேலும் ஸொகுஸாக உள்ள தனக்கு மெத்தையாக அதை 'யூஸ்' பண்ணிக் கொண்டிருக்கிறான். மரத்திலிருந்து வாடி உதிர்ந்த ஒரு ஆலிலையின் மேல் கொஞ்சம் ஜலத்தைத் தெளித்தால் போதும், மறுபடி அது பசுமை பெற்று விடுவதைப் பார்க்கலாம். பசுமைக்காகவே பசுவின் வெண்ணெய் சாப்பிடுபவன் இதில் சயனம் செய்வது ஏன்?

ஸம்ஸார ஸாகரத்தில் அலை பாய்கிற நமக்கு ஆலிலையைக் காட்டி நிலையான நித்யத்வத்தை, நிராலம்ப தத்துவத்தை உணர்த்துகிறான்.

ஆல மரத்தை விட எத்தனையோ அகன்ற, அகண்ட தத்துவம் அவன். அந்த மரம் எத்தனை பெரிசாயிருந்தாலும், எத்தனை காலமிருந்தாலும் அதன் பரப்புக்கு எல்லை உண்டு. அதன் காலத்துக்கும் முடிவு உண்டு. அவனோ முடிவேயில்லாத அகண்டன் ஆனந்தன். ஆனாலும் இந்த மஹா ப்ரபாவத்தை மறைத்துக் கொண்டு, நாம் அவனை எடுத்து வைத்துக் கொண்டு கொஞ்சுகிற விதத்தில், ஸரள ஸ்வபாவத்துடன் கூடிய குழந்தையாக இருக்கிறான். "ஒண்ணும் கவலைப்படாதேயப்பா! என் மாதிரி குழந்தை உள்ளத்தோடு இரு. ஸம்ஸார வெள்ளத்திலேயே அப்போது நீ அலையில் அடி படாமல் உன் பாட்டுக்கு ஆனந்தமாக, அதை ஒரு விளையாட்டாக எடுத்துக் கொண்டு மிதந்து கொண்டிருக்கலாம்" என்று சொல்லாமல் சொல்கிறான். சிலுப்புவதாலே கொந்தளிக்கிற மோரிலே வெண்ணெய் பட்டுக் கொள்ளாமல் மிதப்பது போல, ஸம்ஸார ஸாகரத்தில் அவனே வெண்ணெய்க் கட்டியாக மிதப்பது நாமும் அப்படி ஆக வேண்டும் என்று நம்மை நினைக்கச் செய்வதற்குத்தான்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி<br>ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி<br>சங்கராச்சார்ய சுவாமிகள்

"உனக்குத்தான் என்னிடம் கொஞ்சம் கூட நம்பிக்கை இல்லையே? உன்னிடம் சொல்லி என்ன பிரயோஜனம்?"

"எனக்கு நம்பிக்கை உண்டாக்குவதற்கு ஒரு வழி இருக்கிறதே!"

"அது என்ன?"

"அந்த நடனப் பெண்ணை எனக்குக் கொடுத்து விடுங்கள்!"

"ரஞ்சனி! இத்தனை காலம் பொறுத்தாய். இன்னும் சில நாள் பொறுத்துக் கொள். இந்த வாதாபி முற்றுகை முடியும் வரையில் பொறுத்துக் கொள். சிவகாமியை ஒரு காரியத்துக்காகக் காப்பாற்றி வைத்திருக்கிறேன் என்று உன்னிடம் சொல்லி வந்தேனல்லவா? அந்தக் காரியம் இப்போது நெருங்கி வந்துவிட்டது. மாமல்லன் மீது பழி வாங்கியதும் சிவகாமியை உனக்குத் தந்துவிடுகிறேன். பிறகு இந்த நீலகேசிதான் தக்ஷிண தேசத்தின் சக்கரவர்த்தி! நீதான் சக்கரவர்த்தினி! சளுக்க - பல்லவ - சோழ- பாண்டிய- வேங்கி நாடுகள் எல்லாம் நம் இருவருடைய காலின் கீழே கிடக்கப் போகின்றன!" என்று நாகநந்தி என்கிற நீலகேசி கூறிய போது நிலவொளியிலே அவருடைய கண்கள் தீப்பிழம்பைப் போல் ஒளி வீசின.

காபாலிகை ஒருவாறு சமாதானம் அடைந்தவளாய்க் காணப்பட்டாள். நீலகேசியின் சொற்படி அவள் தன் குகைக்குச் சென்று அங்கிருந்து விறகுக் கட்டைகளைக் கொண்டு வந்து அடுக்கலானாள். அப்போது, நீலகேசியின் காதில் விழாதபடி அவள் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள்: 'வஞ்சகப் பிக்ஷுவே! நீர் என்னை மறுபடியும் ஏமாற்றப் பார்க்கிறீர்! ஆனால் உம்முடைய எண்ணம் ஒருநாளும் பலிக்கப் போவதில்லை. நீர் எவ்வளவுதான் காலில் விழுந்து கெஞ்சினாலும், தேவேந்திர பதவியே அளித்தாலும் அந்த மூளி சிவகாமி உம்மைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டாள். கடைசியாக என் காலிலே வந்துதான் நீர் விழுந்தாக வேண்டும்!"

(தொடரும்)



# கோவை வாசகர்களுக்கு ஆஹா! ரூ.50,000 பரிசு!

வந்தாச்சு கடைசி கூப்பன். மடமட வென்று இதற்கு முன் வந்த ஐந்து கூப்பன் களையும் சேர்த்து விடைகளை எழுதி, உங்கள் பெயர், விலாசத்துடன் அக்டோபர் இருபதாம் தேதிக்குள் எங்களுக்கு அனுப்புங் கள்.

- அனைத்துக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதிய கோவை மாவட்ட கல்கி வாசகர் ஒருவருக்கு ரூ.50,000 பரிசு வழங்கப்படும்.
- ஒருவருக்கு மேற்பட்ட வாசகர்கள் சரி யான பதிலை எழுதியிருந்தால், இருக் கவே இருக்கிறது குலுக்கல் முறை.
- ஆறுதல் பரிசுகளாக, சென்னை, தி. நகர் P.R. ஜுவல்லரி வழங் கும் ரூ.120/- மதிப்புள்ள வெள்ளி காமாட்சி விளக்கு நூறு பேருக் குக் காத்திருக்கின்றன.



- உறையின் மீது 'ஆஹா! ரூ. 50,000 (கோவை)' என்று கட்டாயம் குறிப்பிட வேண்டும்.
- போட்டி தொடர்பாக விசாரணைகள் அனுமதிக்கப்படமாட்டாது.
- இந்தப் போட்டி கோவை மாவட்ட கல்கி வாசகர்களுக்கு மட்டுமே.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.

## ஆஹா! ரூ.50,000 பரிசு! குவிஸ் போட்டி கூப்பன் - 6

1. பிரபல நொய்யல் ஆறு .................... மலையில் உற்பத்தி ஆகிறது.
2. தனது விழிப்புணர்வுப் பாடல்களால் பெரும்புகழ் பெற்றவர் '................ நாராயண கவி'.
3. பல நகைச்சுவை நாடகங்களை எழுதி, நடித்துள்ள 'கோவை .................... ' பெண் பெயரில் ஒளிந்துள்ள ஓர் ஆண்தான்.
4. கோவை .................... யில் நீர்மின் விசை உற்பத்தி செய்யப்படுகிறது.
5. கோவை - சிறுவாணி சாலையில் அமைந்துள்ள தீம் பார்க் 'கோவை ....................'
6. முழுக்க பெண்களுக்கென இயங்குகிறது கோவை நகருக்குள்ளேயே அமைந்த .................... நிகர்நிலைப் பல்கலைக்கழகம்.

# அலை

மோதலில் ஆரம்பித்து காதலில் முடிகிற வழக்கமான கதை. சொல்லும் விதத்திலோ காட்சியமைப்பிலோ ஏதாவது புதுமையிருக்க வேண்டாமா? ஒரே ஆறுதல் விவேக். ஆயிரத்து ஐந்நூறு ரூபாய்க்காக அவர் அடிக்கும் லூட்டிகள் அமர்க்களம். எந்த ஒரு திருப்பமும் அழுத்தமும் இல்லாமல் நாடகத்தனமான க்ளைமாக்ஸ் அறுபதுகளில் வந்த படங்களை நினைவூட்டுகிறது. வித்யாசாகருக்கு என்னாச்சு? ஒரு பாடல் மட்டும் இனிமை.

**அட்வைஸ் - 1. சிம்பு :**
ஆட்காட்டி விரலையும், சுண்டு விரலையும் மடக்கி மடக்கி காட்டும் வித்தையெல்லாம் சரிதான். தன்னைச் சுற்றிதான் அலையடிக்கிறது என்கிற ஓவர் பில்டப்பில் சிலுப்பிக் கொண்டு திரிந்தால் அடிக்கிற அலையில் மூழ்கி விடவும் வாய்ப்பிருக்கிறது.

**அட்வைஸ் - 2. த்ரிஷா**
நிறைய ஆடை குறைப்பு செய்தால் 'நம்பர் ஒன்' இடத்துக்கு வந்துவிடலாம் என்று தப்புக் கணக்கிலிருந்தால் மாற்றிக் கொள்ளுங்கள். நடிக்கிற வழியைப் பாருங்கள்.

**அட்வைஸ் - 3. இயக்குனர் விக்ரம்**
'பெயரில் 'விக்ர' என்று வந்தாலே ஹிட் கொடுத்து விடுகிறார்கள்' என்று நடிகர் பார்த்திபன் ஒரு விழாவில் சொல்லியிருந்தார். அதைப் பொய்யாக்கியிருக்கறீர்கள். நான்கு ஃபைட், நான்கு பாட்டு, கொஞ்சம் காமெடி ஃபார்முலா எல்லாம் அரதப் பழசு. இனிமேலாவது கதையில் கவனம் செலுத்துங்கள்.

- மொக்கராசு

# ஆஹா! ரூ.50,000 பரிசு!

## திருச்சி வாசகர்களுக்காக மட்டுமே

# கல்கி

## வழங்கும் கலக்கல் குவிஸ் போட்டி



ரூ.50,000 மெகா பரிசைப் பெற நீங்கள் செய்ய வேண்டியது ரொம்ப ரொம்ப 'சிம்பிள்'!

கீழேயுள்ள கூப்பனில் இடம் பெற்றுள்ள கேள்விகளுக்குப் பதில் எழுதி வைத்துக் கொள்ளுங்கள். அடுத்து வரும் 19, 26 அக்டோபர் மற்றும் 2, 9 நவம்பர் இதழ்களிலும் இதே போன்று குவிஸ் கூப்பன்கள் இடம் பெறும். ஆறாவது வார இறுதியில் ஆறு கூப்பன்களையும் நிரப்பி, உங்கள் பெயர், விலாசத்துடன் எங்களுக்கு அனுப்ப வேண்டும்.

- அனைத்துக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதிய திருச்சி மாவட்ட கல்கி வாசகர் ஒருவருக்கு ரூ.50,000 பரிசு வழங்கப்படும்.
- ஒருவருக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியான பதிலை எழுதியிருந்தால், இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை.
- ஆறுதல் பரிசுகளாக, நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனமான அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை, வழங்கும் ரூ.85/- மதிப்புள்ள 'சோ' எழுதிய 'எங்கே பிராமணன்?' புத்தகம் - 120 நபர்களுக்கு.
- உறையின் மீது 'ஆஹா! ரூ. 50,000 (திருச்சி)' என்று குறிப்பிட வேண்டும்.
- போட்டி தொடர்பாக விசாரணைகள் அனுமதிக்கப்படமாட்டாது.
- இந்தப் போட்டி திருச்சி மாவட்ட கல்கி வாசகர்களுக்கு மட்டுமே.
- ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.





ஆஹா! ரூ. 50,000 பரிசு!

## திருச்சி குவிஸ் போட்டி கூப்பன் - 2

1. ஸ்ரீ ரங்கத்தின் .................................. திசை கோபுரம்தான் மிக உயரமானது.
2. திருச்சிக்கு நடுவில் ஓடும் ஆறு ..................................
3. பஞ்சபூதங்களில் .................................. தொடர்பான திருத்தலம் திருவானைக்காவல்.
4. வாரவிடுமுறையாக வெள்ளிக்கிழமையைக் கொண்டது 19, பாரதிதாசன் தெருவில் உள்ள ..................................
5. பிரசன்ன வெங்கடேஸ்வரர் உறையும் தலம் மட்டுமல்ல மனநிலை சரியில்லாதவர்களை சரியாக்கவும் வல்லது எனப் பலரும் கருதுமிடம் ..................................
6. மலைக்கோட்டையில் உச்சிப் பிள்ளையாருக்கும், அடிவாரத்தில் உள்ள பிள்ளையாருக்கும் இடையில் கோயில் கொண்டிருப்பவர் .................................. சுவாமி

# கடல்புரத்துக் காதல்!



சீற்றத்தை வெளிக்காட்டும் வரை இயற்கையின் அமைதி அலாதியானது. ஆனால் ஜனநாதன் இயக்கி வரும் 'இயற்கை' படம் வெளிவரும் முன்பே, தமிழ்ப்பட உலகில் அலைகளை உருவாக்கி இருக்கிறது. கடலும் கடல் சார்ந்த நெய்தல் நிலப் பின்னணியும் கொண்டு வெளிவந்த தமிழ்ப் படங்களில் இது உலகத்தரமானதாய் இருக்கும் என்கிறார்கள், படத்தைப் பார்த்தவர்கள். அதை மெய்ப்பிப்பதைப் போல இருக்கின்றன, சேனல்களில் ஒளிபரப்பப்பட்டுவரும் 'இயற்கை'யின் முன்னோட்டக் காட்சிகள். ஒளிப்பதிவும், கலை இயக்கமும் ஹாலிவுட் கோடம்பாக்கத்துக்கு வந்துவிட்ட பிரமிப்பை உருவாக்குகின்றன. யார் இந்த ஜனநாதன்?

தேசிய விருதுபெற்ற திரைப் படங்களையும், குறும்படங்களையும் இயக்கிவரும் எடிட்டர் பி. லெனினிடம் உதவி இயக்குனராகப் பணி புரிந்தவர். இவர் சினிமாவுக்கு வர சத்யஜித்ரே ஒரு வகையில் காரணம். சத்யஜித்ரேயிடம் உதவி இயக்குனராகப் பணிபுரிந்த கார்முகில் இவரது நண்பர். ரேயின் படங்களை கார்முகிலிடம் அடிக்கடி ஜனநாதன் விமர்சிக்க, நீங்கள் ஏன் சினிமாவுக்கு வரக் கூடாது என்று உந்துதல் தந்திருக்கிறார் நண்பர். நிஜ அரசியல் சினிமாக்களின் தந்தை என வர்ணிக்கப்படும் அடூரின் உதவி இயக்குனர் சீனிவாசனோடும் நட்பு வளர, "சினிமாதான் எனது வாழ்க்கை என்பதைக் கண்டு கொண்டேன்" என்கிறார் ஜனநாதன்.

இந்த அறிமுக இயக்குனரின் ரிஷிமூலமும் குருமூலமும், விருது, தரம், கலைச் சினிமா போன்றவற்றோடு அதிக தொடர்புகளை உள்ளடக்கிக் கொண்டிருப்பதில் நமக்குத் தோன்றிய முதல் கேள்வி, இயற்கை ஒரு கலாபூர்வ சினிமாவா? இல்லை வெகுஜன சினிமாவா? "சாதாரண பாமர ரசிகனில் தொடங்கி, தலைமறைவு சினிமாக்களைத் தேடிப் பிடித்துப் பார்க்கிற சினிமா ஆராய்ச்சியாளன் வரை, அத்தனை பேரையும் இருக்கையில் இறுதி வரை உட்கார வைக்கிற படமாக, இயற்கையை உருவாக்கி இருக்கிறேன்" என்கிறார்.

"நான் சினிமா எடுக்க வந்திருக்கிறேன். டாக்குமெண்டரி எடுக்க அல்ல. ஆனால் இயற்கை படம் யதார்த்தமாய் இருக்கும். டூயட்கூடக் கிடையாது. முதலில் ரசிகனை சமாதானப்படுத்தி உட்கார வைத்துக் கொண்டு, அதன்பிறகு கலாபூர்வ அம்சங்களை அவனுக்குக் காட்டினால் உச்சக் கொட்டி ரசிப்பான். அதைத்தான் இயற்கை மூலம் முயற்சித்திருக்கிறேன்" என்று சொல்லும் ஜனநாதன், படத்தில் இடம் பெறும் வசனங்களை இரண்டு பக்கங்களில் எழுதிவிடலாம் என்கிறார். தமிழ் சினிமா தவிர்த்துவரும் காட்சி மொழிக்குத்தான் அதிக முக்கியத்துவம் கொடுத்திருக்கிறாராம். படத்தின் கதை என்ன?

"ஒரு கடல் புறத்துக் காதலை, அரசியல், சமூகப் பார்வையோடு அணுகியிருக்கிறேன். இதில் இயற்கைதான் காதலைத் தீர்மானிக்கிறது" என்கிறார்.

- ஸ்ரீ



▪ சுப்பிரமணியம் சிவா

# கழுத்தில் விழுந்த பூ!

தஞ்சாவூரில் பூச்சி மருந்து கம்பெனியின் ரெப்ரசென்டேடிவாக இருந்தவர்தான் திருடா திருடி இயக்குனர் சுப்ரமணியம் சிவா.

"அது ஜாலியான காலம், சார். எதைப் பற்றியும் கவலையில்லாம கடை கடையாக ஏறி, இந்தக் கம்பெனியில இருந்து வந்திருக்கோம்ன்னு கார்டை நீட்டின உடனே அலட்சியமா ஒரு பார்வை பார்த்துட்டு, கொஞ்சம் வெயிட் பண்ணுங்கன்னு வியாபாரத்தை கவனிக்கப் போயிடுவாங்க. அந்தக் கொஞ்ச நேரம் அரைமணி, ஒரு மணின்னு ஓடிட்டே யிருக்கும். உள்ளுக்குள்ள வர்ற எரிச்சல் இருக்கே!.." சிரிக்கிறார் சு.சிவா.

"எல்லாரையும் மாதிரிதான் எனக்கும், சின்ன வயசுலயே சினிமா காதல். வீட்ல சொன்னா அவங்களுக்கு நம்பிக்கையில்லை. ரொம்ப நாளா அவங்க மனசைத் தேற்றிட்டு சென்னைக்கு பஸ் ஏறினேன். பஸ்ல ஏறுவதற்கு முன்னால பையில இருந்த ஒரு ரூபா நாணயத்தை எடுத்து மேல சுண்டி விட்டேன். பூ விழுந்தா சினிமா, தலை விழுந்தா அவ்வளவுதான்; நமக்கு வாய்ப்பில்லைன்னு நானே முடிவு பண்ணினேன். விழுந்தது பூ! பல படங்களில் காதலன் எறிஞ்ச காதலி கழுத்துல விழுற பூ மாதிரி, சினிமாங்கற காதலன் என்னை செலக்ட் பண்ணிட்ட மாதிரி நானே நினைச்சுக்கிட்டேன்.

சினிமா என்னை ஏமாத்திடலை. 'திருடா திருடி'யில ஒரு சில காம்ப்ரமைஸ்கள் பண்ணியிருக்கேன். இனிமே பண்ணப் போற படங்களிலே துளி ஆபாசம் இல்லாமப் படம் பண்ணனுங்கறதுதான் என் லட்சியமே" என்கிற சு.சிவா, தமக்கு இந்தப் பெயர் வைத்த அப்பாவைப் புகழ்ந்து தள்ளுகிறார்.

"இந்தப் பெயருக்குள்ள நான் இருக்கேனா தெரியாது. ஆனா அந்தத் தியாகி இருக்கறதா நினைக்கிறேன். அதனாலேயே எனக்குன்னு நிறையப் பொறுப்புகள் இருக்கறதா உள் மனசு சொல்லிக்கிட்டே இருக்குது. அடுத்தடுத்தப் படங்கள்ல அந்தப் பொறுப்புகள் வெளி வரும்!"

- அப்பு

அறிமுகம்-2

அறிமுகம்-3

# "முறுக்கு விற்றேன்!"



மலர்ந்தது நட்பு! கனிந்தது காதல்! உதிர்ந்தது எது? - 'உன்னைச் சரணடைந்தேன்' படத்தின் சுவரொட்டிகளில் பளிச்சென்று தென்படும் வாசகம். படத்தைப் பார்த்துவிட்டு வெளியே வருகிற ரசிகர்களின் முகங்களில் நிறைவின் வெளிச்சம். "இதுமாதிரி ஒரு நல்ல படத்தைப் பார்த்து எவ்வளவு நாள் ஆச்சு!" என்று அனைத்துத் தரப்பு ரசிகரின் பாராட்டுகளையும் அள்ளிக் கொண்டிருக்கும் அந்த அறிமுக இயக்குனர் சமுத்திரகனி. விருதுநகர் மாவட்டம் சேத்தூர் கிராமத்தைச் சேர்ந்தவர். பி.எஸ்சி., பி.எல். பட்டதாரி.

"பத்து வயசுலே வீட்டுக்குத் தெரியாம திருட்டுத்தனமா தியேட்டருக்குப் போய் படம் பார்க்க ஆரம்பித்தேன். காசில்லாமல் படம் பார்க்கலாமேன்னு தியேட்டரில் முறுக்கு வித்திருக்கேன். அந்தளவுக்கு சினிமா மீது எனக்கு அபிமானம். வீட்டிலிருப்பவர்களுக்கோ, என்னால் அவமானம்.

"படத்துக்குப் போவியா, போவியான்னு சொல்லிக்கிட்டே என்னைத் தலைகீழா கட்டித் தொங்கவிட்டு அடிச்சிருக்காங்க." என்று ஃப்ளாஷ்பேக்கை ஓபன் பண்ணிய சமுத்திரகனி, பத்தாம் வகுப்பு பரீட்சை எழுதிவிட்டு, விடுமுறையில் சென்னைக்கு வந்து முதன்முதலாய் சினிமா வாய்ப்புத் தேடினாராம். அதன்பிறகு ப்ளஸ் டூ விடுமுறை, கல்லூரியில் சேர்ந்ததும் செமஸ்டர் விடுமுறை, என விடுமுறைகள் நிழலில் நடிகனாகிவிடுவது என்று வெறுங் காலுடன் வெயிலில் அலைந்த சமுத்திரகனிக்குக் கிடைத்ததோ, சுந்தர் கே. விஜயனிடம் உதவி இயக்குனர் வாய்ப்பு. கிடைத்த வாய்ப்பைப் பிடித்துக் கொண்டு மேலேறியவருக்கு, கே. பாலச்சந்தரிடம் மூன்றாண்டுகள் உதவி இயக்குனராகப் பணி புரியும் வாய்ப்பு. தொடர்கள், மேக்ரோ சிந்தனைகள் வரிசையில் ஆறு குறுந்தொடர்கள் என இயக்கி முடித்த கையோடு, சமுத்திரகனியின் திறமையைப் பார்த்த கே.பி. 'அண்ணி' மெகா தொடரை இயக்கும் வாய்ப்பையும் கொடுக்க, அதிலும் ஜமாய்த்துவிட்டு, உன்னைச் சரணடைந்தேன் படத்தை எழுதி இயக்கி இருக்கிறார்.

இதுவரை தமிழ் சினிமா தொட்டுப் பார்க்காத நண்பர்களின் கதை! நண்பன் தன்னை மட்டுமே சார்ந்து இருக்க வேண்டும் என அளவுக்கதிகமாய் அன்பு வைத்து, அவனது காதலையே மிதிக்கும் கதை! ரசிகர்களின் ரத்தத்தைக் கொதிக்க வைக்கும் திரைக்கதை! இப்படியொரு கதையை தனது முதல் படைப்பாகத் தொட்டது ஏன்? சொந்த அனுபவமா?

"நான் உதவி இயக்குனராகச் சென்னையில் கஷ்டப்பட்ட போதும் சரி, இப்போதும் சரி, என் மீது அளவுக்கு அதிகமாய் அன்பு வைத்திருக்கும் என் நண்பர் ஒருவரின் உணர்வுகளைத்தான், கொஞ்சம் மாற்றியிருக்கிறேன். படத்தில் அந்த நண்பன் திருந்துவதாகக் காட்டியிருக்கிறேன். நிஜத்தில் எனது நண்பரோ, 'நீ என்னை நம்பி வந்தவன், நீ யார் எனக்கு உதவி செய்ய? நான்தான் உனக்குச் செய்வேன். செஞ்சுகிட்டே இருப்பேன்' என்கிறார். அவர் மாறவே இல்லை" எனும் சமுத்திரகனி அந்த நண்பரைப் பற்றி ரகசியம் காக்கிறார்.

- ஜெய்

# கதை தந்த கண்ணீர்க் காதல்!

தங்கர் பச்சான் இரகசியமாய் 'தென்றல்' படத்தை எடுத்துக் கொண்டிருக்க, அவரது பள்ளிக்கூடத்திலிருந்து முதன்முதலாய் வெளியே வந்து 'ரகசியமாய்' படத்தைத் தந்திருக்கிறார் அமுதன். இவரும் செம்புலத்து (கடலூர்) இளைஞர்தான். குருவைப் போலவே ஒளிப்பதிவு, நெறியாள்கை (இயக்கம்) இரண்டையும் தைரியமாய்க் கையாண்டிருக்கிறார்.

காதலுக்கு எதிர்ப்புகள் பூகம்பமாகக் கிளம்புவதுண்டு. இவரோ பூகம்ப பூமியை (குஜராத்) காதலின் களமாக்கி, பூமி அதிர்ச்சியை மனித உணர்ச்சிகளோடு கலந்து தந்திருக்கும் விதம், ரொம்பவே இதம் என்று ரசிகர்கள் பாராட்டும்படியாக படம் பிடித்திருக்கிறார். இவருக்கு எப்படி சினிமாவில் இடம் கிடைத்தது?

''ப்ளஸ் டூ முடிச்சிட்டு, சினிமாவுக்குள்ளே நுழைய விரும்பினேன். போட்டோகிராஃபி ரொம்பப் பிடிச்சது. திரைப்படக் கல்லூரியில் டி.எஃப்.டி ஒளிப்பதிவு முடிச்சேன். படிப்பு முடிஞ்சதும் முதன்முதலில் தங்கர் பச்சானிடம் போனேன். ஜீன்ஸ், டீ ஷர்ட் அணிந்து இன் பண்ணியிருந்தேன். என்னை மேலும் கீழும் பார்த்த தங்கர்பச்சான், "நீங்க கேமரா மேனா? நடிகரா? இப்படி இன் பண்ணிக்கிட்டு வந்து நடிகன் மாதிரி வாய்ப்புக் கேட்கறீங்க?'' என்றார். அன்று எனது டீ ஷர்டை எடுத்துக் கீழே விட்டவன்தான், இதுநாள் வரை இன் செய்வதையே மறந்து போனேன். தங்கர்பச்சானிடம் கண்டிப்பு உண்டு. அதே நேரம் தட்டிக் கொடுத்து வேலை வாங்கும் தன்மையான மனிதர். சுமார் பன்னிரண்டு படங்களுக்கு அவரோடு பணியாற்றினேன்'' என்று சொல்லும் அமுதன், டி.எஃப்.டி படித்துவிட்டு சினிமாவுக்குப் போனால் மற்ற துறைகளைப் போல உடனே வேலையில் சேர்ந்து கை நிறையச் சம்பாதிக்கலாம் என்ற பெற்றோரின் கனவை உடனடியாக நிறைவேற்ற முடியாமல் போனதில், அடிக்கடி ஊர்ப்பக்கம் தலை காட்ட முடியாதது மட்டும்தான் பெரிய இழப்பு என்கிறார். சமீபத்தில் குஜராத் பூகம்பத்தை மையப்படுத்தி வந்தது ஒரே தமிழ்ப் படம்தான். இப்போது அமுதன். "கிட்டத்தட்ட எண்பதாயிரம் உயிர்களை நிமிடங்களில் காவு கொண்ட பூகம்பத்தைப் பற்றி பத்திரிகைகளிலும் இணைய தளங்களிலும் நிறைய கண்ணீர்க் கதைகளைப் படித்தேன். அந்தக் காலை நேரத்தில், பூங்காவில் பேசிக் கொண்டிருந்த காதலர்கள் இருவர் மீது அருகிலிருந்த தண்ணீர்த் தொட்டி இடிந்து விழுந்து, அவர்கள் கைகோத்தபடி இறந்து போன செய்தியும் கண்ணில் பட்டபோது இதயம் வலித்தது. அந்த வலிதான் இந்தக் கதைக்கு வழி காட்டியது என்று சொல்ல வேண்டும்'' என்னும் அமுதனுக்குத் தொழில் நுட்ப ரீதியாக மணிரத்னத்தையும், உணர்வு ரீதியாக தங்கர்பச்சானையும் பிடிக்குமாம்.

''அழகியை ஒருமுறையாவது அழாமல் பார்த்து விடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டு பார்த்துத் தோற்றிருக்கிறேன்'' என்கிறார். தமக்கு இயக்குனர் வாய்ப்புக் கொடுத்த தயாரிப்பாளர்கள், ஜான், கிரஹாம் இருவருக்கும், 'இந்த உலகத்தை எனக்குக் காட்டிய தாய்க்கு இணையான நன்றியைச் சொல்லியே ஆக வேண்டும்' என்கிறார்.

- சக்கரம்

• அமுதன்



● படம்: யோகா

# எம்.ஜி.ஆர் தந்த

## சிரித்து வாழ வேண்டும்

-┘-┘

## நாகேஷ்

**நா**ன் தாராபுரத்தில் வீட்டை விட்டு வந்த பிறகு, ரயில்வேயில் வேலை கிடைத்துச் சென்னைக்கு வந்து மறுபடி தாராபுரத்துக்குப் போகவில்லை. ஒரு கடிதம் கூட எழுதவில்லை. ஆனால் நான் ரயில்வேயில் வேலை பார்ப்பது, நாடகத்தில் நடித்துக் கொண்டிருப்பது எல்லாம் யார் மூலமாகவோ, என் குடும்பத்தினருக்குத் தெரிந்திருந்தது.

ஒருநாள் மாலை என் அண்ணன் என்னைப் பார்க்க, தீனதயாளு தெருவில் இருந்த என் அறைக்கு வந்திருந்தார். "ஒரு வேலையா, மெட்ராஸ் வந்தேன். அப்படியே உன்னைப் பார்க்கலாம்னு இங்கே வந்தேன்! எப்படி இருக்கே?" என்றார்.

"எனக்கென்ன குறைச்சல்! ஆபீஸ்ல வேலை; ஒண்ணாம் தேதி வந்தா சம்பளம்! நான் நாடகத்தில் எல்லாம் நடிக்கிறேன் தெரியுமா? என் நடிப்பைப் பார்த்து, ஆச்சரியப்பட்டுப் போய் எம்.ஜி.ஆரே தன் கையால் எனக்கு ஒரு வெள்ளிக்கோப்பை பரிசு கொடுத்திருக்காரு தெரியுமா?" நான் பாட்டுக்கு பேசிக் கொண்டே போனேன். "உள்ளே வா! எம்.ஜி.ஆர், கொடுத்த வெள்ளிக் கோப்பையைக் காட்டறேன்! எவ்வளவு பெரிசு தெரியுமா?" கையால் அளவு காட்டினேன். நான் நடக்க, அண்ணன் பின் தொடர்ந்தார்.

என் ரூமுக்குள் நுழைந்து, "அதோ பார்! பரிசுக் கோப்பை!" என்று கையை அலமாரியின் பக்கம் சுட்டிக் காட்டினேன். எனக்கு ஷாக்! காரணம், அங்கே இருந்தது கோப்பையின் மரத்தாலான அடிப்பகுதி மட்டும்தான்! வெள்ளிக் கோப்பை பகுதியைக் காணோம்!

"எங்கடா போச்சு கோப்பை? காலைல கூட இருந்துதே!" என்று சொன்னபடியே என் அண்ணன் முகத்தைப் பார்த்தேன். அவர் முகத்தில், நான் சொன்னதையெல்லாம் அவர் நம்பவில்லை! என்று எழுதி ஒட்டியிருந்தது.

"எப்படியோ! நல்லபடியா இருந்தால் சரி! நான் வருகிறேன்!" என்று விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டவர், "என்னடா! கைச் செலவுக்கு ஏதாவது பணம் வேணுமா?" என்றார்.

"எனக்குப் பணக் கஷ்டமெல்லாம் இல்லை; பணம் இருக்கு. நீங்க தர வேணாம்" என்று சொன்னேன். அண்ணன் புறப்பட்டுச் சென்றார்.

அவர் போனவுடன், ரூம் மேட்டிடம், "டேய்!

வெள்ளிக்கோப்பையை என்னடா பண்ணினே?" என்றேன் கோபமாய். அவன் கூலாக, "நான்தான் எடுத்துக் கொண்டு போய் வித்திட்டேன்" என்றான்.

"அது எனக்கு எவ்வளவு பெரிய பொக்கிஷம்! அதைப் போய் வித்திட்டு வந்து நிக்கிறியே?"

"கோபப்படாதே நாகேஸ்வரா! எனக்கு அவசரச் செலவுக்குப் பணம் தேவைப்பட்டது. எனக்குப் பணம் கொடுத்து உதவி செய்கிற அளவுக்கு உனக்கு வசதி கிடையாது என்று எனக்குத் தெரியும். வேறு யார் கிட்டேயும் போய் நான் கை நீட்ட விரும்பவில்லை. உன் பரிசுக் கோப்பை என் கண்ணில் பட்டது. சட்டென்று அதை விற்று, என் பணக் கஷ்டத்தைச் சமாளித்துக் கொண்டேன். தயவு செய்து தப்பாக எடுத்துக்காதே!'' என்று வருத்தம் தோய்ந்த குரலில் அவன் பேசியதைக் கேட்ட பிறகு, 'சரி! போகட்டும். விட்டுத் தள்ளு!' என்று அதை அப்படியே விட்டு விட்டேன்.

இன்று என் வீட்டுக்கு வருகிறவர்கள் ஆச்சரியமான ஒரு விஷயத்தை கவனிக்க

# கோப்பை!

முடியும். நான் பல மொழிகளிலும் நூற்றுக்கணக்கான படங்களில் நடித்து, அதற்காக நிறைய ஷீல்டுகள் வாங்கியிருக்கிறேன் என்றாலும், என் வீட்டில் அவற்றை ஷோகேஸில் வைக்கிற பழக்கம் எனக்குக் கிடையாது. காரணம், இந்தப் பட்டம், ஷீல்டு இவைகளுக்கெல்லாம் நான் முக்கியத்துவம் தருவதில்லை.

ரயில்வேயில் வேலைக்குச் சேர்ந்த போது எனக்கு நூற்று



• படம்: நன்றி ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

அறுபத்து எட்டு ரூபாய் சம்பளம் என்று நினைக்கிறேன். ஒரு ரயில்வே ஊழியருக்கு என்னென்ன விதமான கடன் வசதியெல்லாம் உண்டோ, அத்தனைக் கடன்களையும் நான் வாங்கியிருந்தேன். எனவே, எல்லாக் கடன்களுக்குமாக, மாதா மாதம் கணிசமான தொகையைப் பிடித்துக் கொண்டு விடுவார்கள். எல்லாப் பிடித்தமும் போக, கையில் வெறும் ஐம்பத்தாறு ரூபாய்தான் வரும். ஆனாலும் தினம் இரண்டு வேளைச் சாப்பாட்டுக்கு எந்தப் பிரச்னையுமில்லை.

தெரியாத்தனமாக நான் ஒரு சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டேன். தீனதயாளு தெருவில் தங்குவதற்கு முன் சூளைமேட்டில் கொஞ்சநாள் வசித்தேன். அப்போது நண்பரான எம்.எல். ராதாகிருஷ்ணனுக்கு ரயில்வேயில்தான் வேலை. ஒருநாள், ராதாகிருஷ்ணன், தமது மனைவி திடீரென்று காணாமல் போய்விட்டதாகச் சொன்னார்.

"அவளை எப்படியாவது தேடிக் கண்டு பிடித்தாக வேண்டும். ஏதாவது ஒண்ணு கிடக்க ஒண்ணு ஆகிவிட்டால், விஷயம் விபரீதமாகி விடும். என் கையிலோ பணமில்லை. என்ன செய்வதென்று புரியவில்லை!" என்றார்.

''உனக்கு உதவி செய்கிற அளவுக்கு என்னிடமும் பணமில்லையே!" என்றேன்.

"யார் யாரிடமோ கேட்டுப் பார்த்து விட்டேன். பணம் புரட்ட முடியவில்லை. ஈட்டிக் காரர்கள் யாரிடமாவது கடன் வாங்குவதைத் தவிர, எனக்கு வேறு வழி தெரியலை!'' என்றார்.

''ஐயையோ! ஈட்டிக்காரரிடம் கடன் வாங்குவதா? வாழ்க்கையில் அது போன்ற காரியங்களைச் செய்து விடாதே!'' என்றேன்.

நான் இப்படிச் சொன்னதற்குக் காரணம், பள்ளிக்கூட நாட்களில் நிகழ்ந்த ஒரு சம்பவம்தான்.

என் பள்ளிக்கூட நண்பன் ஒருவன், சாயங்காலம் பள்ளி விட்டு, வீட்டுக்குப் போனபோது, அவனது அப்பாவின்



## சினிமா பாரடைஸ்!

'சினிமா பாரடைஸ்' என்ற ஹாலிவுட் தகவல் களஞ்சியத்தை எழுதி வருகிறார் பாரதிராஜாவிடம் உதவி இயக்குனராக இருக்கும் ரஞ்சித் மோகன். எந்தெந்த ஹாலிவுட் படங்கள் எந்தெந்த ஆண்டு வந்தது? இயக்குனர்கள் யார்? என்பது போன்ற புள்ளி விவரங்களிலிருந்து ஈரான், ஸ்பானிஷ் போன்ற சர்வதேச சினிமாக்களின் பட்டியலும் இதில் இருக்கும். மெகா சைஸில் உருவாக இருக்கும் இந்தப் புத்தகம் கோடம்பாக்க கலையுலகத்துக்குப் பய னுள்ளதாக இருக்கும். - ஜி

முகம் படு சீரியஸாக இருந்தது.

"நான் மானஸ்தனாக வாழ்ந்து கொண் டிருப்பது உனக்குப் பிடிக்கவில்லையா? என்னை ஏன் இப்படிச் சித்ரவதை செய் கிறாய்?" என்று கோபப்பட்டிருக்கிறார் அப்பா. நண்பனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"என்ன விஷயம்? எதற்காக இப்படி யெல்லாம் பேசுகிறீர்கள்?" என்று இவன் கேட்க, அப்பா அவனிடம் ஒரு லெட்டரை எடுத்துக் காட்டியிருக்கிறார்.

"பள்ளிக்கூடத்தில் அவசரச் செலவு என்று சொல்லி, சில மாதங்களுக்கு முன்பு பதினைந்து ரூபாய் வாங்கியதை நீ மறந்து விட்டாயோ, என்னவோ, நான் மறக்கவில்லை. அந்தப் பணம் இப்போது இருந்தால், எனக்கு மிகவும் உதவியாக இருக்கும் என நினைக்கிறேன்" என்று அதில் எழுதப்பட்டிருந்தது. 'கடன் வாங்கவே கூடாது' என்பதை வாழ்க்கையின் கட்டாய மான விதி போல கடைப்பிடித்து வரும் ஒரு மரியாதைக்குரிய மனிதருக்கு, அவரது மகன் வீட்டுக்குத் தெரியாமல் கடன் வாங்கியிருப்பது தெரிந்தால், எவ்வளவு அதிர்ச்சியாக இருக்கும்? அதுதான் அன்றைய தினம் நிகழ்ந்தது.

நண்பனின் அப்பா, மகனை அடிக்கவோ, கடுஞ்சொல் பேசவோ இல்லை. தன் ஆழ மான வேதனையை, மகனுக்குப் புரிய வைத்துவிட்டார். நண்பன், 'தான் யாரிடமும் கடன் வாங்கவில்லை. இது ஒரு விஷமத் தனமான ஒரு கடிதம்' என்று தந்தைக்கு விளக்கம் கொடுத்து விட்டாலும், அவனையும் மனத்தளவில் அது பாதிக்கவே செய்தது.

என்னைச் சந்தித்த நண்பன், கடிதம் கிளப்பிய பிரச்னை குறித்துச் சொல்லவும் நான், "உங்கள் வீட்டில் இதுபோல ஒரு பிரச்னை வரும் என்று எனக் குத் தெரியும்" என்றேன்.

"என்னது? உனக்குத் தெரி யுமா?"

"ஆமாம்! தெரியுமே!"

"எப்படி?"

"நான்தானே அந்த மாதிரி ஒரு லெட்டரை எழுதினது!"

எதிர்பாராத இந்த பதில் அவனை அதிர்ச்சிக்குள்ளாக் கியது.

"ஏன்டா இப்படிச் செஞ்சே?"

"உன்னை ஏப்ரல் முட்டாள் ஆக்கத்தான்."

"ஏப்ரல் ஃபூல் பண்ண வேறு ஐடியா கிடைக்கலையா உனக்கு? விளையாட்டாக நீ இப்படிச் செய்யப் போய், என் அப்பா ரொம்ப அப்செட் ஆயிட்டார்! வா... நீயே வீட்டுக்கு வந்து அவரிடம் விஷயத்தை விளக்கிச் சொல்" என்றான்.

இரண்டு பேருமாக அவன் வீட்டுக்குப் போய் அவனுடைய அப்பாவைச் சந்தித் தோம். விஷயத்தைச் சொல்லி, நான் அவரிடம் மன்னிப்புக் கேட்டேன்.

"வாழ்க்கையில் கடன் வாங்கவே கூடாது" என்பதை, தாம் லட்சியமாகக் கொண்டிருப்பது பற்றியும், நான் விளையாட்டாய் எழுதிய கடிதம் அவரது மனத்தை எவ்வளவு ஆழமாய்க் காயப் படுத்திவிட்டது என்பதையும் அவர் சொன்னபோது, நான் என் செயலுக்காக மிகவும் வருத்தப்பட்டேன்.

அன்று முதல் வாழ்க்கையில் நாம் கூட கடன் வாங்கக் கூடாது என்று தீர்மானம் செய் தேன்.

இந்த அனுபவப் பின்னணி காரண மாகத்தான் ஈட்டிக்காரரிடம் கடன் வாங்க வேண்டாம் என நண்பர் ராதாகிருஷ்ணனுக்கு ஆலோசனை சொன்னேன்.

ஆனாலும் விதி வலியதாயிற்றே!

நண்பரின் தலைவிதி மட்டுமில்லை, என் தலைவிதியும்தான்!

(தொடர்ந்து சிரிப்போம)






# முடிவில்லை!




* இளையராஜா

* சதீஷ் கன்னா

"நாங்கள் இரண்டு பேரும் உடன் பிறவா சகோதரர்கள். எங்களுக்கு இடையிலான நட்பு ரொம்ப ஆழமானது. கும்பகோணம், சென்னை ஓவியக் கல்லூரிகளில் ஒன்றாகப் படித்து முடித்துவிட்டு, இப்போதும் ஒன்றாகவே இருக்கிறோம். நன்றாகவே ஓவியம் வரைகிறோம்" என்கிறார்கள் இளையராஜாவும், சதீஷ் கன்னாவும். சென்னை வின்யாசா ஆர்ட் கேலரியில் 'முடிவில்லை' என்ற தலைப்பில் இவர்களது ஓவியக் கண்காட்சி சமீபத்தில் நடந்தது.

'ரியலிஸ்டிக் ஓவியம்' என்று சொல்லக் கூடிய வகையில் இருவரது ஓவியங்களும் இருக்கின்றன. கிண்டி ரயில் நிலையம், மெரினா மீனவர் குப்பம், சென்ட்ரல் ரயில் நிலையம், மியூசியம் தியேட்டர் என்று பல்வேறு சென்னை நகர ஸ்தலங்களை இவர்கள் ஓவியங்களில் நிஜம் போலவே வரைந்திருக்கிறார்கள்.

- கௌதம் ராம்

**மக்களவை மற்றும் மாநிலங்களவையின் முன்னாள் உறுப்பினர் திருச்சி சிவா. தி.மு.கழகத்தின் மாநில மாணவரணித் தலைவர். இரண்டரை ஆண்டு ஜெயலலிதா ஆட்சி எப்படி எனக் கேட்டோம். மனிதர் பொரிந்து தள்ளிவிட்டார்.**

# அஞ்சி நடுங்க வைக்கும் ஆட்சி!

தமிழ் மாநிலத்தை இந்தியாவில் முதலிடத்துக்குக் கொண்டு வருவதாக, ஆட்சிப் பொறுப்பேற்ற போது சொல்லியிருந்தார் செல்வி ஜெயலலிதா. இப்பொழுது இந்தியாவிலேயே எல்லா வகைகளிலும் அதிக பாதிப்புக்கு உள்ளான முதல் மாநிலமாக தமிழ்நாட்டை மாற்றிக் கொண்டேயிருக்கிறார். எல்லாத் தரப்பு மக்களையும் அதிகமாக பாதித்த மாநில அரசுகளில், தமிழ்நாட்டுக்கு முதலிடம் தரலாம்.

பச்சைப்பசேல் என்றிருந்த தஞ்சை மாவட்டம் இன்று பாலைவனமாகக் காட்சியளிக்கிறது. இதனால் பாதிக்கப்பட்ட விவசாயிகளுக்கு நிவாரணம் தருவதை விடுத்து, அவர்களின் ஒரே பிடிமானமாக இருந்து வந்த இலவச மின்சாரத்தைப் பிடுங்கிக் கொண்டு, மீட்டர் பொருத்திக் கொண்டிருக்கிறார்.

பள்ளிக் குழந்தைகளின் சத்துணவிலும் சில விஷயங்களை ரத்து செய்து விட்டார்கள். கலைஞர் ஆட்சியில் கர்ப்பிணித் தாய்மார்களுக்குக் கொடுத்து வந்த ஊட்டச் சத்து, உதவித் தொகை இரண்டுமே இப்போது தரப்படுவது இல்லை.

பறிக்கப்பட்ட உரிமைகளை மீண்டும் கேட்ட அரசு ஊழியர்கள், ஆசிரியர்கள் ஆகியோர் இந்த ஆட்சியில் பட்ட அவஸ்தை வேறு எந்த ஆட்சியிலும் பட்டிருக்க மாட்டார்கள். மன்னிப்புக் கேட்டதற்குப் பின்னாலும் தண்டிக்கின்ற மனநிலை, ஒரு தனி மனிதனுக்கே இருக்கக் கூடாது என்கிறபோது, ஆட்சித் தலைமையில் இருப்பவர்க்கு இருக்கலாமா?

இந்த ஆட்சியில் போராடிப் போராடி எல்லோரும் ஓய்ந்து போய்விட்டார்கள். ஓர் அரசுக்கு உறுதி தேவை. ஆனால் பிடிவாதம் கூடாது. முறையான கோரிக்கைகள்கூட குப்பைக் கூடைகளுக்குச் செல்கின்றன. பொதுவாக இங்கு இறுக்கமான அணுகு முறை இருக்கிறதே தவிர, இரக்கமான அணுகு முறை அறவே இல்லை.

இந்த ஆட்சியில் அரசாங்கம் எஜமானத் தனத்தோடு மக்களை அடிமைகளாக நடத்தி வருகிறது. இதனால் அறிவிக்கப்படாத அவசர நிலை தமிழகத்தில் நிலவி வருகிறது.

அரசின் செயல்பாடுகளை எதிர்த்து வழக்குப் போட்டால், தொடுத்தவர் மீதே புதிய வழக்குகள் அரசினால் போடப்படுகின்றன. விசித்திரமான நடவடிக்கை. வினோதமான அரசு.

சர்வாதிகார நாடுகளில் மட்டுமே அச்சம் கலந்த அசாதாரணமான அமைதி நிலவும். அது இப்போது தமிழகத்தில் இருக்கின்றது. இந்த பாதிப்பின் விளைவு தேர்தலில் தெரியும். யாருக்கும் பாதிப்பில்லாது ஏற்படப் போகின்ற அந்த மாற்றத்திற்குப் பெயர் தான் அமைதிப் புரட்சி. தமிழக மக்கள் அதில் வல்லவர்கள்.

**தா**. கிருட்டிணன் கொலை நிகழ்வு பற்றி தாங்கள் என்ன உணர்கிறீர்கள்? அநாகரிக அரசியலின் உச்சநிலைதானே அது? என்ற கேள்விக்குப் பதில் சொல்ல விரும்பாமல் நழுவிவிட்டார் சிவா.



# குழி பறிக்கும் புழு!

பிரபல டென்னிஸ் வீரர் லியாண்டர் பெயஸுக்கு திடீர் என்று மூளையில் பாதிப்பு ஏற்பட்டு, சிகிச்சை எடுத்து வருகிறார் அல்லவா? பன்றி இறைச்சியில் காணப்படும் தட்டைப் புழுக்கள் எனப்படும் ஒரு வகை குடல்பூச்சி அவரது மூளை நரம்பு மண்டலத்தைத் தாக்கியிருப்பதாலேயே, அவரது உடல் நலம் பாதித்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. இப்புழுக்கள், கழிவுநீர் பாசனத்தில் வளரும் கீரை, காய்கறிகளிலும் படிகின்றன.

லியாண்டர் பெயஸ் விரைவில் குணமடையட்டும் என்ற பிரார்த்தனையோடு, குடல் பூச்சிகளைப் பற்றிச் சொல்கிறேன்.

'கூடவே இருந்து கொண்டு குழி பறிப்பான்' என்பார்களே. அந்தப் புகழாரம் அப்படியே 'ஜம்' என்று குடல் வாழ் ஒட்டுண்ணிகளுக்குப் பொருந்தும். நம் வயிற்றுக்குள்ளேயே, பாதுகாப்பாக இருந்து கொண்டு, பெருந்துன்பத்தை, ரொம்ப சைலன்டாக குடல் பூச்சிகள் செய்து வருகின்றன.

கிட்டத்தட்ட நூற்று ஐம்பது வகை குடல் புழுக்கள் மனித இனத்தில் காணப்படுகின்றன. எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னால் மனப் புழுக்கம் அதிகமாகும் என்பதால், குடல் பகுதிகளைக் கபளீகரம் செய்யும் சில தாதா புழுக்களை மட்டும் அடையாளம் காட்டி, சுருக்கமாக முடித்துக் கொள்கிறேன்.

'அமீபா' எனப்படும் ஒரு வகை ஒட்டுண்ணி, மிக விரைவாக தொற்று வியாதிகளை உண்டாக்கக் கூடியது. அமீபாக்களில் பல வகை இருக்கின்றன. அவற்றில் 'என்டாமீபா ஹிஸ்டாலிகா' வகை ரொம்ப அபாயகரமானது. இந்த அமீபா ஒரு வகையான நச்சுப் பொருளைச் சுரக்கக் கூடியது என்பதால், ஹிஸ்டாலிகா அமீபா தொட்ட அவயத்தின் திசுக்கள் எல்லாம் அரிக்கப்படுகின்றன. இதனால் கடும் வயிற்றுப் போக்கு, கல்லீரல் அழற்சி, கல்லீரல் கட்டி, குடல் ஓட்டை போன்றவை ஏற்படும்.

குடிநீரைச் சுத்திகரிக்கப் போடப்படும் குளோரின் கூட இந்த அமீபாவின் சிஸ்ட் நிலையைத் தாக்காது. ஆனால் நீரைக் கொதிக்க வைக்கும்போது அமீபா அழிந்துவிடும்.

பல செல் உயிரிகளில், மனிதனுக்குத் தீங்கு விளைவிக்கக் கூடிய புழுக்கள் நிறைய உள்ளன. அவற்றை தட்டைப் புழுக்கள் குரூப் என்றும், உருண்டைப் புழுக்கள் குரூப் என்றும் பிரிக்கலாம். சாட்டைப் புழு, நூல் புழு, ஊசிப் புழு, நாக்குப் பூச்சி, தண்டு உருளைப் புழு என நிறைய ஒட்டுண்ணிகள் உருளைப் புழு வகைக்கான அடையாள அட்டையைப் பெற்றிருக்கின்றன.

சாட்டைப் புழு குடல் வால் பகுதியைப் பாதித்து, கடும் அழற்சி ஏற்படுத்தும். தண்டு உருளைப் புழு, நுரையீரல் மற்றும் குடல் பகுதிகளைத் தாக்கும். மலத்தின் மூலம் வெளியே வந்தாலும், மீண்டும் மல வெளித் துவாரத்தில் சருமத்தைத் துளைத்துக் கொண்டு ஆட்டோ இன்ஃபெக்ஷன் மூலம் மறுபடி ஆட்சி நடத்தும்.

நூல்புழு, ஊசிப் புழுக்கள் சுத்தமற்ற தின்பண்டங்கள் மூலம் பரவும். இப்புழுவின் முட்டைகள் ஆடைகள் மூலமும், காற்று வழியாகவும் வாய்க்குள் சென்றுவிடும். நாக்குப் பூச்சி மனிதனின் சிறு குடலில் அலர்ஜியை ஏற்படுத்தி, ஜீரண உறுப்புகளைப் பதம் பார்க்கும். குறிப்பாக, சிறு குழந்தைகளிடம் நாக்குப் பூச்சி தொல்லை இருந்தால், அந்தக் குழந்தைகள் சாப்பிடும் உணவை நாக்குப் பூச்சி அபகரித்து, ஆரோக்கியமாக வளரும். குழந்தை, பாவம்... உடம்பே தேறாது, பலவீனமாக இருக்கும்.

நாக்குப் பூச்சியின் பாதிப்பு அதிகமானால், பித்தநீர்க் குழாய், கல்லீரல், கணையம் முதலிய உறுப்புகளில் அதிரடி

அமர்க்களம் செய்து, மஞ்சள் காமாலையைப் பரப்பிவிட்டுத்தான் ஓயும். சில சமயம் குடல் அடைப்பு, குடல் உட்செருகல் என பாதிப்பு நீள்வதும் உண்டு. யானைக்கால் உண்டாக்கும் புழுவும் இந்த இனத்தைச் சார்ந்ததே!

**த**ட்டைப் புழுக்கள் தொகுதியிலும்




ஏகப்பட்ட புழுக்கள். ஏகப்பட்ட அணி, அதிலேயே இணை வகுப்பு, துணை அணி, கூட்டுக் குடும்பம், உயர் குடும்பம் என்று நிறையப் பிரிவுகள்; வம்சாவிருத்தி நிறைய!

அதில் முக்கியமானவை மாட்டிறைச்சி நாடாப் புழுக்கள், பன்றி இறைச்சி தட்டைப் புழுக்கள்தாம். சுகாதாரமாக சமைக்கப்படாத இறைச்சியை உண்பதால், உடலின் பல பகுதிகளில், இந்தத் தட்டைப் புழுக்கள் பாதிப்பு ஏற்படுத்தி, செயலிழக்கச் செய்கின்றன. எனவே, அசைவ விரும்பிகள் கவனமாக இருப்பது நல்லது.

புழு, பூச்சி பிரச்னை இல்லாமல் வாழ சில வழிகள் இருக்கின்றன. அவற்றை நீங்கள் பின் பற்றுவதோடு, சிறு குழந்தைகளும் கடைப் பிடிக்கச் சொல்லிக் கொள்ளுங்கள்.

• மலம் கழித்த பின்பு, அந்தரங்க இடங்களையும், கைகளையும் சோப்புப் போட்டு சுத்தமாகக் கழுவுங்கள்.

• சுத்தமற்ற பொது கழிப்பிடங்களைப் பயன்படுத்தாதீர்கள்.

• கைவிரல், கால்நகங்களை ஒட்ட வெட்டி சுத்தமாகப் பராமரியுங்கள்.

• கொக்கிப் புழு போன்றவை பாத சருமத்தைத் துளைத்துக் கொண்டு உடலுக்குள் புகுந்து விடும் என்பதால், காலணி இல்லாமல் கழிப்பறையைப் பயன்படுத்தக் கூடாது.

• சாக்கடை, அசுத்த நீரில் கை, கால் வைக்கக் கூடாது.

• ஈ மொய்த்த, திறந்து வைக்கப்பட்ட உணவுப் பண்டங்களைச் சாப்பிடக் கூடாது.

• குடிநீரைக் கொதிக்க வைத்துப் பயன்படுத்தவும்.

• பச்சைக் காய்கறிகள், அசைவ உணவைச் சாப்பிடும்போது, கவனமாக இருக்க வேண்டும். மிகவும் கவனமாக சுத்தம் செய்து உணவு தயாரிக்க வேண்டும்.

(அடுத்த வாரம் முற்றும் போட்டு விடலாமே!)

இப்படியொரு மதநல்லிணக்கக் கதை நடந்திருக்க வேண்டியதில்லை. இதை நான் எழுதுவதற்காக கடவுள்கள் சபிக்க மாட்டார்கள். சபிப்பது கடவுள் குணமல்ல. ஆனால் வருந்துவார்கள். 'இப்படி நடந்திருக்க வேண்டியதில்லை.' இது சமஸ்கிருத, எபிரேயு, அரபி மொழிகளில் பெயர்க்கப்படப் போவதில்லை என்றாலும், முப்பத்து முக்கோடி கடவுளரில் இலக்கிய இலாக்காவுக்காக ஒதுக்கப்பட்ட பாவப்பட்ட கடவுளர் வருந்தவே வருந்துவர். 'இப்படி நடந்திருக்கக் கூடாது' நாட்கள், நெய்கிறவனின் நாடாவிலும் தீவிரமாய் ஓடி, அவை நம்பிக்கை இல்லாமல் முடிந்து போன கதைதான் இது.

ஆகையால் நான் வாயை அடக்காமல் என் ஆவியின் வேதனையினால் பேசி, என் ஆத்துமத்தின் கசப்பினால் அங்கலாய்க்கிறேன்.

இது கயல்விழியைப் பற்றிய கதை. அவள் மீனின் கண்களையோ மீனைப் போன்ற கண்களையோ பெற்றிருக்கவில்லை. ஆனால் கண்கள் கண்ணாடிப் பெட்டியுள்ளிருந்தன. அவ்வளவு அகலமான தடித்த கண்ணாடி அணிந்திருந்தாள். அவளது கண்களின் பாவம் என்னவென்பதை ஒருமுறை மட்டும் பார்த்தால் அலசி ஆராய முடியாது.

சங்கர் சலீம் சைமன், அமர் அக்பர் அந்தோணி, ராம் ராபர்ட் ரஹீம் என மோனையில் பெயர் கொண்ட மும்மத நாயகர்களின் படம் பார்த்த யாரும், கயல்விழி கமருன்னிஸா காதரீன் எனப் பெயரிட்டு இதைப் புரிந்து கொள்ளலாம். எனினும் மூன்று வேடமும் ஒருத்தியே ஏற்ற இக்கதை, திரைப்படம் போன்று சுவாரசியமானதல்ல. அவ்வளவு ஏன், இது கதையே அல்ல.




கயல்விழியை நான் பார்த்தது என் பக்கத்து இருக்கைக்காரியாக பிளஸ் டூ முதலாண்டு படிக்கும் போது.

ஒருநாள் மதிய உணவு முடிந்து நானும் அவளுமுள்ள தனியில் அவள் சொல்லத் தலைப்பட்டாள்.

''எங்கப்பா டார்ச்சர் தாங்க முடியலடி'' தினந்தோறும் எனக்குச் செய்திகள் கிட்டத் தொடங்கின. ரணத்தின் மீது தீய்ப்பாய்ச்சலாக அவை இருந்தன.

''தினம் நானில்லாத நேரம் புத்தக நோட்டையெல்லாம் பிரிச்சுப் பாக்கறாரு.''

''எதுக்கு?''

''ம். அதுல லவ் லெட்டர்



இருக்குமான்னுதான்."

பாடங்களைச் சரியாகப் படிக்காதவர்கள்தான் காதல் கடிதங்களைப் புத்தகங்களுக்குள் வைத்திருப்பார்கள். அவள் மிக நன்றாகப் படிக்கிறவள். குலோத்துங்கன், இரணதீரன் எனப் பெயர் வைத்த யாரையும் அவள் அறிய மாட்டாள். அவளுக்குக் காதல் மடலெழுத பெயரளவில் கூட யாருக்கும் தகுதியில்லை. அவளது அப்பா, பெண்கள் சிரிப்பதற்கானவர்கள் அல்ல என்றவளைப் பழக்கியிருந்தார். சிரிக்காத பெண்ணுக்கு, காதல் கடிதங்கள் வருமென யாரும் எதிர்பார்க்க மாட்டார்கள். முட்டாள் தகப்பன்களைத் தவிர. தூய தமிழ்ப் பெயரை அவளுக்கு வைத்த அப்பா வீட்டில் அவளைத் தூய தமிழ்ச் சிறையில் அடைத்திருந்தார். அவருக்குத் தெரியாமல் ஓர் ஆணின் நிழலும் வீட்டு வாயிற்படியைத் தீண்டி விடவும், தாண்டி விடவும் கூடாது.

தினமும் பேருந்து நிறுத்தம் வரை வந்து அவளை பஸ் ஏற்றி விட்டு கண்டக்டரை

## க.சீ.சிவகுமார்

ஒரு தடவை முறைத்து விட்டுத் தன் அலுவலகம் செல்வார். திரும்ப வீடமைத்துப் போகவும் வந்து சேர்ந்து விடுவார்.

"ஆபீஸ் மட்டும் இல்லாட்டி எங்கப்பன் இங்கேயும் வந்துருவாருடி." என்பாள் கயல். அவள் வீடு செல்ல தாமதம் ஏற்பட்டால் அவருக்குத் தொலைபேசியில் தெரிவித்து விட வேண்டும்.

'கண்ணை இமை காப்பது போல' என்றெழுதினால், அவளது வலியைப் புரிந்து

கொள்வது கடினம்.

மேலே படிக்க நானும் அவளும் வேறு வேறு ஊர்களுக்குப் போனதாலும், இருவரும் வெவ்வேறு ஊர்க்காரிகள் என்பதாலும் அவளைச் சந்திக்கவே முடியவில்லை. பிறகு பல சமயங்களில் கேள்விப்பட்ட செய்திகள் மூலமாகவே அவளை அறிந்தேன்.



# பனை ஓலைத் தேர்!

பனை ஓலையிலிருந்து கூடைகள், கூடைகள், அலங்காரப் பொருட்களைத்தான் அதிகம் பார்த்திருப்போம். ஆனால் புதுக்கோட்டை மாவட்டம் 'கடியாபட்டி'யைச் சேர்ந்த பழனியப்பன் அம்பலத்தின் கை வண்ணத்தில் உருவாகும் 45 அடி உயர பனை ஓலைத் தேரைப் பார்க்கும்போது ஆச்சர்யம் மிஞ்சுகிறது.

ஐந்து ஆண்டுகள் கழித்துத்தான் முதன்முறை கேள்வியுற்றது. டிகிரி முடித்த பின் உள்ளூரில் ஒரு டெக்ஸ்டைல் நிறுவனத்தில் கணக்கெழுதும் வேலைக்குச் சென்றிருக்கிறாள். அந்த நிறுவன முதலாளிக்கும் அவளுக்கும் தொடர்பு உண்டாகி விட்டது. இச் செய்தியில் வியப்படைய ஒன்றுமில்லை. அந்த ஆளுக்கு ஏற்கெனவே கல்யாணமாகி குழந்தைகள் உண்டு, வயதும் நாற்பதுக்கு மேல் என்றால் வியப்புக் காட்ட மாட்டீர்கள்.

உலகத்தில்தான் நிறையப் பார்த்தாச்சே!

இது விஷயமாக கயலின் அப்பா அந்த நிறுவனத்துக்குச் சென்று சண்டை முஸ்தீபு காண்பிக்கும்போது அந்த ஆள், "உங்க பொண்ணு எங்கேன்னு எனக்கு எப்படித் தெரியும்? அது வேலைக்கு வந்தே ஒரு வாரமாச்சு..." வேணும்னா உள்ளே வந்து பாருங்க. இல்லேனா வேற எங்கேயும் போய்த் தேடுங்க" என்று கூறி விட்டான்.

உண்மையில் அப்போது கயல் கணக்கு மேஜை முன்புதான் அமர்ந்திருந்தாள். எள்ளின் நிறத்தில் பர்தா அணிந்தவளாக. எள், தண்ணீர் என பற்றறுப்பதற்கு எதையெதைத் தெளிக்க வேண்டுமோ, எதையும் தெளிக்காமல் அவளது உறவை உதறினார் தந்தை.

தூய, 'தமிழ்ப் புறக்கணிப்பு'.

சிறு வயதில் தொலைந்த மயில்பீலியின் நினைவு போல கயல்விழியின் ஞாபகம் அடி ஆழத்துக்குப் போய் விட்டிருந்தது. ஆனால் எப்போதும் அது என் முன் தலை எடுத்துப் படபடக்க சிறு காற்று கூடப் போதுமானதாயிருந்தது. மேலும் ஆறு ஆண்டுகளில் நான் கணவனோடு குழந்தையுமாயிருந்தேன். அப்போதுதான் கயல்விழியின் வாழ்வில் குறுக்கிட்ட டெக்ஸ்டைல் நிறுவன அதிபனைச் சந்தித்தேன். அதுவும் என் வீட்டில் வைத்தே. என் கணவரின் நண்பரின் நண்பராக வழிப்போக்கில் வந்திருந்தான். அறிமுகத்தில் எனக்கு ஊரும் பெயரும் சொன்னதுமே விளங்கி விட்டது. அவருடன் அவள் இல்லை என்பதும் கேள்விப்பட்டிருந்ததால்,

"தெரியும். என் கிளாஸ்மேட் கயல்விழியோட வாழ்க்கையைக் கெடுத்தது நீங்கதானே?" என்றேன்.

என் கணவர் ஒன்றும் புரியாது விதிர்விதித்திருந்தார். அந்த ஆள் படு சாந்தமாக,

"சேச்சே. புரியாமப் பேசாதீங்கம்மா. அந்த டைம்லே நான் மட்டும் இல்லேனா, அந்தப் பொண்ணு தற்கொலை பண்ணிக்கிட்டிருந்திருக்கும்."

"சரி இப்ப அவ எங்கே இருக்கா? அதாவது தெரியுமா?"

"தெரியாதும்மா."

நான் கோபமாக அடுக்களைக்குள் நுழைந்து கேஸ் ஸ்டவ்வைப் பற்ற வைத்தேன். நீலச்சுடரின் வட்ட வேலிகளில் வெளி வட்டம் கயலின் கண்ணாடியாகவும், உள்வட்டம் அவளது கண்ணாகவும் தெரிந்தது.

இந்த ஆள் கயலை வஞ்சித்தாரா ரட்சித்தாரா எனக் குழம்பினேன். கணவரின் குரல் கேட்டது.

இதுபோன்ற பனை ஓலைத் தேரினை பூச் சொரிதல் விழாக்கள், கோவில் திரு விழாக்களில் சுவாமி திருவீதியுலா, மாப் பிள்ளை அழைப்பு போன்ற நிகழ்ச்சிகளுக்கு அமைத்துக் கொடுக்கிறார் பழனியப்பன்.

ஐம்பது ஆண்டுகளாக இத் தொழிலில் இருக்கும் பழனியப்பனுக்கு நிரந்தர வருவாய் கிடைப்பதில்லையாம். கற்றுக் கொண்ட கலையைக் காப்பாற்றுவதற்காக செய்து வருகிறாராம். ஒரு விழாவிற்கு ரூ 5000 வாங்கினால் நொறுங்கி உதிரும் பனை ஓலைகளை மீண்டும் புதுப்பிக்கவே ரூ 3000 செலவழிந்து விடுமாம்.

மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி ஆகிய திருவிழா மாதங்களில் மட்டுமே இத்தொழில் செய்ய முடியுமாம். இரண்டு நாள் வெய் யிலில் காயவைத்து நாலு நாள் நிழலில் உலர வைத்து பனை ஓலைகளை நிமிர்த்தி ஒரு வாரம் பதப்படுத்தி, அதன்பின் வேலைப் பாடுகளைக் கத்தரிக்கோல் கொண்டு வெட்டி, வர்ணம் பூசி கைத்தையல் மூலம் இத்தேர் உருவாக்கப் படுகின்றதாம்.

இத்தொழிலில் தற்போது இவர் குடும்பம் மட்டுமே ஈடுபட்டு வருகிறதாம். ''இத் தொழிலை யாரும் கற்க முன்வருவ தில்லை. அப்படி யாராவது கற்றுக் கொள்ள முன் வந் தால் கற்றுக் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்'' என் கிறார் பழனியப்பன்.

**- சிங்காரவடிவேல்**



• பழனியப்பன்

"காப்பியச் சீக்கிரமா குடும்மா."

**பு**கையைப் போல நான்காண்டுகள் கலைந்து ஓடின. கயல்விழியை நான் பல் லடம் பேருந்து நிலையத்தில் சந்தித்தேன். இளகிய நெஞ்சக்காரரான, இதைப் படித்துக் கொண்டிருக்கும் நீங்கள் இதற்கும் வியப் படைந்திருக்க மாட்டீர்கள். உண்மையில் அவள் என் அருகிலேயே நின்றபோதும் சில நொடிகள் எனக்கு அடையாளம் காண முடியவில்லை. சந்தித்து முடித்த வனவாசக் கால இடைவெளி, இருவர் மீதும் சுவடு களை ஏற்றியிருந்தது. அவள் என் மூக்கைக் கண்டும் நான் அவளது கண்ணாடியைக் கண்டும் அடையாளம் மீட்டியபின்னே, விரல்கள் நெரிந்தன.

"எங்கடீ இருக்கே?" என்றேன்.

"இங்க. பக்கத்து ஊர்லதான். செயிண்ட் தாமஸ் மெட்ரிகுலேஷன் ஸ்கூல்ல டீச்சரா இருக்கேன்."

"அந்த ஆள் கூட... என்ன ஆச்சு.. என்ன தான் நடந்துது?"

''ப்ச்... அவருக்குக் குடும்பம் இருக் குல்லியா...?''

"அப்ப நீ?"

"தப்பு என்னுதுதான். முதல்ல அன்பு காட்டறப்ப தகப்பனா தெரிஞ்சாரு. அன் புள்ள தகப்பனா. நானும் அன்பு பாராட் டினேன். அன்பு உடம்புகள்ல திரும் பிடுச்சு... சாபமுள்ள கனவு. விடேண்டி அத. உனக்கு இவன் மட்டும்தானா? வாடா என் செல்லம், உன் பேரென்ன?" என்று என் மூன்று வயதுப் பயலை தூக்கிக் கொஞ்ச ஆரம்பித்தாள். கண்ணாடி விளிம்பில் தோய்ந்த ஒரு துளி அவனது கன்னத்தில் ஒழுகி, கடைக்குத் தூக்கிப் போய் பிஸ்கெட் பொட்டலம் வாங்கிக் கொடுத்தாள். 50 - 50.

''லெட்டர் போடு. ஃபிரெண்ட்ஸ் யாரும் காண்டாக்டே கிடையாது தெரி யுமா?'' என்றவளிடம் என் கணவரின் விசிட்டிங் கார்டை எடுத்துக் கொடுத் தேன். ஒரு சிறு துண்டுக் காகிதத்தை எடுத்து கைப் பையை அண்டக் கொடுத்து, முகவரியை எழுத ஆரம் பித்தாள். அவளது முகவரியை எழுதும் போது வரிக்கு வரி முறுவல் கூடிக் கொண்டே போனது. பின்கோடெல்லாம் எழுதி முடிக்கையில், முகத்துக்குச் சிரிப்புக் களை வந்து விட்டது.

இந்த முகத்துக்கு இப்போது எவனாவது காதல் கடிதம் தரலாமே என நான் நினைத்த போது, சிரிப்பு மாறாமல் முகவரியின் முதலாவது வரியை தன் பெயரை - கடைசியில் எழுதி னாள்.

'எஸ்தர்'

"டீ.. கயல்!' என்றேன் அதிர்ச்சியுடன். என் தாடையைச் செல்லமாகத் தட்டி விட்டு ஒரு சமணத் துறவியைப் போலப் புன்னகைத்தாள். ○

# எப்படியிருக்கு காலனி வாழ்க்கை?



• எஸ். மாதவன், சத்தியபாமா

அகலமான சாலைகள். இரு மருங்கிலும் மரங்கள். வண்ண வண்ணப் பூங்காக்கள், கல்வி நிலையங்கள். ஒரு லட்சம் புத்தகங்கள் அடங்கிய பன்மொழி நூலகம். வங்கிகள். ஆலயங்கள். இருபத்தி நான்கு மணி நேர சேவையுடன் கூடிய மருத்துவமனை. நீச்சல் குளம். பாதுகாக்கப்பட்ட குடிநீர். மாசு மருவற்ற சுற்றுப்புறச் சூழல். பொது சுகாதாரத்தை கவனத்தில் கொண்டு பார்த்துப் பார்த்து உருவாக்கப்பட்ட குடியிருப்பு.

அது திருச்சி பாய்லர் ஆலையில் பணி புரிபவர்களுக்கு என்று உருவாக்கப்பட்ட கவின்மிகு காலனி. இங்கே ஐந்தாயிரம் குடும்பங்கள் வசித்து வருகின்றன. இதன் வழியாகப் பயணிக்கிறபோது, அழகிய பூந்தோட்டக் காலனியாக சிலருக்குக் காட்சி தெரியும். இன்னும் சிலருக்குப் பச்சை வண்ண மரங்கள் அடர்ந்த வனச்சிறை போல வண்ணம் காட்டும். அது என்ன, பூந்தோட்டமா, வனச்சிறையா? அதனுள்ளே நுழைந்தோம் நாம்.

பாய்லர் ஆலையில் இருபது ஆண்டுகளாகப் பணி புரிந்து வரும் ஏ.டி. பழனிவேலு, மனைவி சுமதி மற்றும் இரண்டு பிள்ளைகளுடன் பன்னிரண்டு வருடமாக, காலனியில் வசித்து வருகிறார். அவருக்கு இந்தக் குடியிருப்பு வாழ்க்கை மிகவும் பிடித்துப் போயுள்ளது. ஆனால் அவரது மனைவிக்கோ, இந்தக் காலனி வாழ்க்கை கசந்து போய் விட்டதாம்.

"இந்தக் குடியிருப்பு வாழ்க்கை எங்களுக்குத் தனிப்பட்ட முறையில் இயங்க ஒரு சுதந்திரம் தந்துள்ளது. அதே சமயத்தில் இது ஒரு எந்திர வாழ்க்கை போல ஆகிவிட்டது. நான் கிராமத்துப் பெண். எனது பிறந்த ஊரான தேரெழுந்தூரில் நான் பார்க்க நேர்ந்த புன்னகை முகங்களை, இக் குடியிருப்புப் பகுதிக்குள் சந்திக்க முடியவில்லை. அவரவருக்கு அவரவர் வேலை. அவரவர் குடும்பமெனக் குறுகிய கூட்டுக்குள் தங்களைச் சுருக்கிக் கொண்டு வாழ்கின்றனர். பன்னிரண்டு வருடங்களில் இத்தனை வீடுகள் மத்தியில் வாழ்ந்து வந்த போதும், ஏனோ தனித்து விடப்பட்டது போன்ற உணர்வே எனக்கு ஏற்படுகிறது!" என்கிறார் ப. சுமதி.

இருபத்தியெட்டு ஆண்டுகளாகப் பணியாற்றி வரும் எஸ்.மாதவன், இங்கு பதினைந்து வருடங்களாக, தம் குடும்பத்துடன் குடியிருந்து வருகிறார். திருச்சி மாநகரின் உள்ளே சொந்தமாக வீடு ஒன்றும் அவருக்கு இருக்கின்றது. இருந்த போதிலும், பாய்லர்



• டி. ஜெயராமன், ஜெ. உஷா

ஆலைக் குடியிருப்பில் வசித்து வருவதே மனதுக்கு மகிழ்ச்சியாய் உள்ளது என்கிறார் அவர். வீட்டில் தையல் பயிற்சி தெரிந்த அவரது இல்லத்தரசி சத்தியபாமா, கணவரோடு மிகவும் ஒத்துப் போகிறார்.

"இந்தக் காலனி வாழ்க்கையில் ஒரு பாதுகாப்பான சூழ்நிலை இருக்கு. இதனை நகர வாழ்வில்



● எஸ். சீதாராமன், எஸ். லலிதா, எஸ். பிரசன்னா

நாம் அனுபவித்து விட முடியாது. வீடு புகுந்து திருடிச் சென்று விடுவார்களோ என்கிற பயம், காலனி குடும்பத்தினர் எவருக்கும் இல்லை. காரணம் செக்யூரிட்டிகள். காலனி வீடுகளுக்கு இந்த செக்யூரிட்டிகள் நல்ல பாதுகாப்பு!" என்கிறார் மா. சத்தியபாமா.

ஜெயராமன் என்பவர் தம் குடும்பத்தாருடன் ஐந்து ஆண்டுகளாக இங்கு வசித்து வருகிறார். அவரது மனைவி ஜெ. உஷா பள்ளி ஆசிரியை. குடியிருப்பு வாசிகளில் பெரும்பாலோர்க்கு அன்னியோன்ய உறவு இல்லை என்கிறார் அவர். புதிதாக ஒரு பொருளை ஒருவர் வாங்கிவிட்டால், பக்கத்து வீட்டுக்காரர் உடனே விரைந்து சென்று அதனைப் போல ஒன்றினை வாங்கி வந்து விடுகிறார். இந்த சந்தைப் பொருளாதாரம் பல்லாண்டுகளாகவே காலனிவாசிகளிடையே புகுந்து விட்டதாகக் குறைப்பட்டுக் கொள்கிறார் ஜெயராமன்.

"காலனி வாழ்க்கையில் எங்களுக்கு வெளி உலகத் தொடர்பே இல்லாததுபோல் இருக்கின்றது. அதனால், அருகிருக்கும் திருச்சி டவுனுக்குச் சென்று வருவதுகூட ஏதோ வெளியூருக்குப் போய் வருகின்ற சந்தோஷத்தை எங்களுக்குத் தருகின்றது" என்கிறார் ஜெ. உஷா.

கடந்த ஐந்து வருடங்களாக வசித்து வரும் எஸ். சீதாராமன், முன்னர் திருவெறும்பூர் மலைக்கோவில் பகுதியில் வாடகை வீட்டில் வசித்து வந்தவர். இரண்டினையும் ஒப்பிட்டு "இது ரொம்ப சூப்பர்" என உற்சாகப்படுகிறார். அந்த மனநிலை உற்சாகம் அவரது மனைவி எஸ்.லலிதாவிடமும் தொற்றிக் கொள்கிறது.

"டவுன்ஷிப்புக்குள்ளே குடி வந்தபோது முதலில் பயந்தோம்.



● ஏ.டி. பழனிவேலு, ப. சுமதி, ப. வினோத்

எல்லாரும் எப்படிப் பழகுவார்களோ, எவ்விதம் பேசுவார்களோ என்று. வந்த சில நாட்களில் எல்லோரும் உறவு மனுஷாளைப் போல ஒட்டிக் கொண்டு விட்டார்கள். வீட்டில் பெரியவர்கள் இல்லையா? யாருக்கேனும் அவசர மருத்துவ உதவியா? யாரும் யாரையும் தவிக்க விட்டு விடுவதில்லை. ஒருத்தருக்கொருத்தர் உதவி, ஒத்தாசைகளுடன் இனிமையாய்ப் போய்க் கொண்டிருக்கிறது இந்த வாழ்க்கை. அதுவும் குதூகலமாக. என் கணவரின் பணி ஓய்வுக்குப் பின்னர், குடியிருக்க வேறிடம் செல்ல வேண்டி இருக்கின்றதே என்று இப்பொழுதே நாங்கள் கவலைப்பட ஆரம்பித்து விட்டோம்!" என்கிறார் எஸ்.லலிதா.

கட்டுரை, படங்கள் :
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

பண்ருட்டியிலிருந்து இருபது கி.மீ தொலைவில் இருக்கிறது கீழக்குப்பம் கிராமம். பெரும்பாலும் விவசாயக் கூலிகள் வசிக்கும் கிராமம். இந்தக் கிராமத்தைச் சேர்ந்த முருகனுக்கு நுழைவுத் தேர்வின் மூலம், ஊட்டியில் உள்ள பொறியியல் கல்லூரியில் இடம் கிடைத்தது. "பண்ருட்டி எங்கே... ஊட்டி எங்கே... ஹாஸ்டலில் தங்கிப் படிக்க ஏகமாகச் செலவாகுமே" என்று மலைத்து உட்கார்ந்து விட்டார் முருகன்.

அம்மாவின் கூலி வேலையில்தான் குடும்பம் ஓடிக் கொண்டிருந்தது. அப்போதுதான் கிராமத்துப் பிரமுகர்கள் சிலர் "ஏன் தம்பி கலங்கற... நேரா பண்ருட்டிக்குப் போய், நம்ம எம்.எல்.ஏ தம்பியைப் பார்; ஏதாவது வழி பிறக்கும். உன்னை மாதிரி பசங்களுக்கு அவர் நிறையச் செய்யறாராம்" என்று வழியைக் காண்பித்தார்கள். அடுத்த நாளே பண்ருட்டி நகருக்கு வந்து எம்.எல்.ஏ வேல்முருகனைச் சந்தித்தார் முருகன். "கவலைப்படாதே... உன் படிப்புச் செலவையெல்லாம் நான் பார்த்துக்கிறேன்" என்று முதலில் கட்ட வேண்டிய தொகையைக் கொடுத்தார் எம்.எல்.ஏ. சிலிர்த்துவிட்டது முருகனுக்கு.

**கடந்த வருடம் சிறப்பாகப் பொதுப் பணியில் ஈடு பட்டதற்காக, வேல் முருகனுக்கு இந்த விருது கொடுக்கப் பட்டிருக்கிறது**

இந்த முருகனுக்கு மட்டுமல்ல, இருபது மாணவர்கள் பொறியியல் படிக்கவும், மூன்று மாணவர்கள் மருத்துவம் படிக்கவும் தன் சம்பளப் பணம் முழுவதையும் கொடுத்து உதவி செய்கிறார் வேல்முருகன். தொகுதி முழுக்க உள்ள பள்ளிகளில் பத்தாவது, ப்ளஸ் டூ பாஸ் செய்பவர்களுக்குத் தங்க நாணயம், டைட்டன் கடிகாரம் என்று கொடுத்து அசத்துகிறார். எல்லாம் சொந்தப் பணம்தான்.

இவர் செய்திருக்கும் நற்பணிகளைச் சுயேச்சையான முறையில் ஆராய்ந்து, பரிசீலனை செய்து 'பாரத ஜோதி' என்ற பட்டத்தை இவருக்கு அளித்திருக்கிறது இந்திய சர்வதேச நண்பர்கள் கழகம்

# முப்பதில் ஒருவர்

என்ற அமைப்பு. தில்லியைச் சேர்ந்த இந்த அமைப்பு, ஒவ்வொரு வருடமும் பல்வேறு துறைகளில் சிறப்பாகப் பணிபுரிந்த முப்பது பேருக்கு விருது கொடுத்து கௌரவிக்கிறது. அந்த வகையில் கடந்த வருடம் அரசியல்வாதிகளில் சிறப்பாகப் பொதுப்பணியில் ஈடுபட்டதற்காக, வேல்



முருகனுக்கு இந்த விருது கொடுக்கப்பட்டிருக்கிறது. முப்பதுபேரில் இவர் ஒருவர்தான் அரசியல்வாதி.

**வே**ல்முருகனுக்குச் சொந்த ஊர் புலியூர் காட்டு சாலை என்ற கிராமம். பண்ருட்டி ராமச்சந்திரனின் கிராமமும் இதுதான். முப்பது வருடமாக யாரிடமும் தோற்காத பண்ருட்டியாரை, சென்ற தேர்தலில் தோற்கடித்தவர் வேல்முருகன். பா.ம.கவைச் சேர்ந்த வேல்முருகன், தொகுதி மேம்பாட்டு நிதியைச் செலவழிப்பதில் புது அணுகுமுறையைக் கையாள்கிறார். ஒவ்வொரு ஆண்டும், எல்லா கிராமங்களுக்கும் விஸிட் செய்கிறார். மக்களிடம் 'என்ன தேவை' என்பது குறித்த மனுக்களைப் பெறுகிறார். அந்த அடிப்படையில் செய்ய வேண்டிய நலப்பணிகளை முடிவு செய்கிறார்.



''கடந்த மூன்று வருட காலத்தில் கிடைத்த இரண்டரைக் கோடி நிதியில், சிறு பாலங்கள் கட்ட ஐம்பது லட்சம், சாலை வசதிகளுக்கு ஒரு கோடி, பள்ளிக் கட்டடங்கள் மற்றும் முப்பது சுகாதார நிலையங்கள், கிராம நிர்வாக அலுவலர் அலுவலகங்கள், பிற்பட்ட தாழ்த்தப்பட்ட மாணவர்களுக்கான ஹாஸ்டல்கள், என்று மீதி ஒரு கோடியை செலவழித்திருக்கிறேன்'' என்கிறார் வேல்முருகன். இந்தப் பணிகளுக்கான ஒப்பந்தங்கள், பெறுவதிலும், வெளிப்படையான அணுகுமுறையைக் கையாள்கிறார். தமது தொகுதி நிதியைத் தவிர, நாபார்ட் வங்கியிலும் உதவி பெற்று பல நலப்பணிகளை நடத்தி முடித்திருக்கிறார் வேல்முருகன்.

'பாரத ஜோதி' விருதுக்கு இவரைத் தேர்வு செய்தபின், நேர்க்காணலுக்கு அவரது பணிகளைக் குறித்த விவரங்களுடன் வரச் சொன்னார்களாம். தன்னைப் பற்றி வெளிவந்த மூவாயிரம் பத்திரிகை செய்திகளுடன் சென்று காட்டியபோது 'அடேங்கப்பா' என்று வியந்து போனார்களாம் அந்த அமைப்பின் பிரமுகர்கள். ''பண்ருட்டியாரைக் குறை கூறிப் பேசுவதாக நினைக்க வேண்டாம். அவர் அமைச்சராகவும் பல வருடங்கள் இருந்திருக்கிறார். அவர் மனது வைத்திருந்தால் இந்தப் பகுதிக்கு எவ்வளவோ செய்திருக்கலாம். இங்கு அரசுக் கல்லூரி கிடையாது; ஒரு ஐ.டி.ஐ கிடையாது. நல்ல மருத்துவமனை கிடையாது. கிராமங்களுக்கு பஸ், சாலை வசதி கிடையாது. இப்படிச் சொல்லிக் கொண்டே போகலாம். என்னால் முடிந்தவரை செய்து கொண்டு வருகிறேன்'' என்று அடக்கத்துடன் கூறுகிறார் வேல்முருகன்.

இவரது இப்போதைய பெரிய கவலை, முந்திரிக்கு அரசு விலை நிர்ணயம் செய்ய வேண்டும் என்பதுதான். ''பண்ருட்டி பகுதியில் பெரும்பாலும் முந்திரி விவசாயம்தான். எக்குத்தப்பாக அதன் விலை இறங்கும்போது விவசாயிகளின் பாடு திண்டாட்டமாகப் போய் விடுகிறது. கடன் பிரச்னையில் பல முந்திரி விவசாயிகள் பூச்சி மருந்தைச் சாப்பிட்டு இறந்த கொடுமையும் இங்கு நடந்திருக்கிறது'' என்று வேதனை கொப்பளிக்கச் சொல்கிறார் வேல்முருகன். இப்போது கள்ளச் சாராயத்தை ஒழிக்க பெரிய போராட்டத்தில் இறங்கியிருக்கிறார் இவர். ''எஸ். பி. மற்றும் பெரிய அதிகாரிகள் எனக்கு ஊக்கமும், ஆதரவும் கொடுக்கிறார்கள். ஆனால் கீழே உள்ள காவலர்களும், அதிகாரிகளும் என் மேல் கடுப்பைக் காட்டுகிறார்கள். இதன் விளைவாக பா.ம.க தொண்டர்கள் மீது ஏகப்பட்ட பொய் வழக்குகள்'' என்கிறார் வேல்முருகன்.

சந்திப்பு : **ப்ரியன்**
படங்கள் : **ராஜன்**

# மெல்லினம்

ரத்தக் காட்டேரி. எங்கிருந்து தனக்கு அப்படியொரு பயங்கரமான யோசனை வந்தது என்று குட்டிக்கே ஆச்சர்யமாக இருந்தது. அவளுக்கு ஜக்குவைப் பற்றி யாரிடமாவது பேச வேண்டும் போலிருந்தது. ஆனால் அவன் சம்பந்தப்பட்ட விஷயங்கள் எதுவும் அத்தனை சுலபத்தில் பேசக்கூடியதாக இருப்பதில்லை. நடுராத்திரியில் வருகிற வயலட் புடைவை ஆவி. மகாபலிபுரத்திலிருந்து அவனுக்காகவே குடித்தனம் மாற்றிக் கொண்டு வந்து, அவன் வீட்டுத் தோட்டத்தில் குடியேறியிருக்கிற விக்கி என்கிற குரங்கு. பேசுவதையெல்லாம் புரிந்து கொள்கிற வெங்கடாஜலபதி என்கிற சமர்த்து நாய். மிருகங்களுடன் சகஜமாக மனித பாஷையிலேயே உரையாடும் ஜக்கு. மிருகங்கள், அவற்றின் சொந்த பாஷையில் பதில் சொன்னாலும் புரிந்துகொள்ளும் திறமைமிக்க ஜக்கு. தாவரங்களுடன் ரகசியம் பேசுகிறவன் அவன். அவன் கனவுகளில் தேவதைகள் வருகிறார்கள்.

கதை மாதிரிதான் இருக்கிறது. ஆனால் கதை இல்லை. நிச்சயம் இல்லை. பத்துக் கோடியே நாற்பத்தெட்டு லட்சத்து முப்பத்தி மூவாயிரம் பேர்களுள் ஒருத்தருக்குத்தான் இந்த சக்திகளெல்லாம் கிடைக்கும். ஜக்கு அந்தச் சக்தியை எப்படியோ பெற்றிருக்கிறான். சந்தோஷம்தான். பெருமைதான். சக்திமானை விடச் சக்தி படைத்த ஜக்குவுக்கு ஃப்ரெண்டாக இருக்க முடிவதற்கு எத்தனையோ கொடுத்து வைத்திருக்க வேண்டும்தான்.

ஆனால் இந்த மாதிரி, இவன் ஒரு மந்திரசக்தி படைத்த பையன் என்று பெருமையாக யாரிடத்திலும் சொல்லிக் கொள்ள முடியவில்லையே? என்னத்துக்காக எல்லா விஷயங்களுக்கும் ஒரு தடைக்கல் போல, அவன் ப்ராமிஸ் வாங்கிக் கொண்டு விடுகிறானோ? யார்கிட்டயாவது சொன்னேன்னா, உனக்கு மேத்ஸ் வராது. யார்கிட்டயானும் சொன்னேனா, எக்ஸாம்ல ஆன்ஸர் மறந்து போயிடும். காட் ப்ராமிஸ். மதர் ப்ராமிஸ். அது கூடப் பரவாயில்லை, கொஞ்ச நாளாக ஃப்ரெண்ட்ஷிப் ப்ராமிஸ் என்று வேறு சொல்ல ஆரம்பித்திருக்கிறான். அடக்கடவுளே! எதையாவது சொல்லித் தொலைத்து அவனுடன் ஃப்ரெண்ட்ஷிப்பே முடிந்து விட்டால் என்னவாவது?

அவளுக்குப் பெருத்த சங்கடமாக இருந்தது அது. கண்ணுக்குப் புலப்படாத எஃகுத் தடைச் சீலையொன்றை அவன் சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கும், அவளது உதடுகளுக்கும் இடையே அவன் விரித்துப் படரவிட்டிருந்தான்.

16

பா.ராகவன்

அநியாயமல்லவா? அக்கிரமம் அல்லவா?

கெட்ட விஷயமென்றால் சரி. இத்தனை பெருமைகளைப் போய் யாரிடமும் சொல்லக் கூடாது என்றால் என்ன அர்த்தம்? குட்டிக்குத் தாங்கவே முடியவில்லை. நாளெல்லாம் அவள் ஜக்குவைக் குறித்தேதான் சிந்தித்துக் கொண்டிருந்தாள். எனில் சிந்திப்பதில் ஒரு துளியையேனும் அடுத்தவரிடம் பகிர்ந்து கொள்ளக் கூடாது என்றால் என்ன நியாயம்?

"கேக்கறேனே? என்னமோ பயங்கரமான விஷயம் சொல்றேன்னியே, சொல்லு சீக்கிரம். டீச்சர் வந்துடப் போறாங்க" என்றாள் ரஞ்சனா.

ஜக்குவின் தீரபராக்கிரமங்கள். அதைக் குறித்துத்தான் அவள் பேச விரும்பினாள். தன் ஒருத்திக்கு மட்டுமே தெரிந்த அவனது மந்திரசக்தி மகிமைகள் குறித்து. ஆனால் சத்தியத்தை மீறுவது சாத்தியமில்லை. அவன் புரிந்து வரும் சாகசங்களைத் தானே சொல்ல முடியாது? அவன் ஒரு சாகசக்காரன் என்று சொல்லுவதில் என்ன தப்பு இருக்க முடியும்? ஆவியுடன் சண்டையிட்டுத் திருப்பி அனுப்பும் சக்தி மிக்கவனுக்கு, ரத்தக்காட்டேரி எம்மாத்திரம்? மேலும் ஒரு ஆவியை ரத்தக்காட்டேரி என்று மாற்றிச் சொல்லுவது சத்தியத்தை மீறியதாகவும் ஆக முடியாது. அடடா, என்ன ஒரு உபாயம்!

குட்டி சொல்ல ஆரம்பித்தாள்.

"தெரியுமா உனக்கு? என் ஃப்ரெண்டு ஜக்கு இருக்-



கானே, அவன் ஒரு ரத்தக் காட்டேரியைப் பார்த்தான்! பொம்பள ரத்தக் காட்டேரி யாம். மிட்நைட் ட்வெல்வ் ஓ க்ளாக்குக்கு அவன் வீட்டு வாசலுக்கு வந்திருக்கு அது. என்னமோ ஏதோன்னு எல்லாரும் முழிச்சிக்கப் போறாங்களேன்னு இவன் நைசா எழுந்து வெளில வந்து, மரியாதையாப் போயிடுன்னு அதை மிரட்டியிருக்கான்..."

"ஓ... நிஜமாவா சொல்றே நீ?" என்றாள் ரஞ்சனா.

"ஆமா, இன்னும் கேளு... இவன் யாரு பொடியன் தன்னைப் போகச் சொல்லறதுன்னு, அந்த ரத்தக்காட்டேரிக்குக் கோபம் வந்து வாய்லேருந்து நீள நீளமா நெருப்பைத் துப்பியிருக்கு. அதுங்கண்ணுலேருந்து கன்னங்கரேல்னு புகை புகையா வந்தது. கால் நகமெல்லாம் டு ஃபீட் இருந்தது... உடம்பு முழுக்க ரத்தம் கொட்டிண்டே யிருந்ததாம்... ஜக்கு பயப்படவேயில்லே தெரியுமா? அவனுக்கு நிறைய சுலோகம்ஸ் தெரியும். மனசுக்குள்ளே சொல்லிண்டே அதைக் கல்லால அடிச்சு விரட்டி யிருக்கான்..."

"ஐயோ..." என்றாள் ரஞ்சனா.

"என்ன சொல்றே நீ? நம்பவே முடிய லையே!"

"ச் போ!" என்றாள் குட்டி.

"கோச்சுக்காதே குட்டி. சரி சொல்லு. நான் நம்பறேன். ஆனா ரத்தக்காட்டேரி யெல்லாம் வீட்டுக்கு வருமா என்ன?"

"ஆமா! வரும். எங்கெல்லாம் குட் பாய்ஸ் இருக்காங்களோ அங்கெல்லாம் வருமாம். வந்து படிக்க விடாம பாடாப்படுத்துமாம்..."

"அடக்கடவுளே. உன் ஜக்கு எப்படி அவ்ளோ தைரியமா எழுந்து போய் அதை அடிச்சு விரட்டினானாம்? கேட்டியா நீ? அவப்பா அம்மாக்குத் தெரியுமா அது?"

"அவன் யார்கிட்டயும் சொல்லலை இதை. எனக்கு மட்டும்தான் சொல்லியிருக்கான். நீயும் இப்போ யார்கிட்டேயும் சொல்லக் கூடாது. இது நம்ம மேத்ஸ் சப்ஜெக்ட் மேல ப்ராமிஸ்" என்றாள் குட்டி.

ரஞ்சனாவுக்குக் கொஞ்சம் பயமாகி விட்டது. ரத்தக்காட்டேரி. ஐயோடா. இதென்ன விபரீதம்! படிக்கிற பசங்களைத் தேடித்தான் வருமாமே?

"உன் ஜக்குவை எனக்கு இன்ட்ரொடியூஸ் பண்ணி வெக்கறியா?" என்று ரஞ்சனா கேட்டாள்.

"ஓயெஸ்" என்றாள் குட்டி. அவளுக்கு மிகவும் பெருமையாக இருந்தது. அப்பாடா! ஒருவழியாக ஜக்குவைப் பற்றிப் பேசுவதற்கும் ஒரு வழி கண்டுபிடித்தாகி விட்டது. ரத்தக்காட்டேரிகள்.. பேய்கள்... பூதங்கள்... பிசாசுகள். அனைத்தையும் அவன் இனி தயக்கமின்றி வென்றுவிட முடியும். ஆவியை வெற்றி கொண்டவனுக்கு இதெல்லாம் எம்மாத்திரம்?

சற்று நேரம் இருவரும் பேசிக் கொள்ள வில்லை. குட்டி . விவரித்த விஷயத்தின் உக்கிரத்தை ரஞ்சனா தன் மனத்துக்குள் படர விட்டுப் பார்த்துக் கொண்டிருந்தாள். பேய்க்கதைகளில் ஆர்வம் மிக்க அவளுக்கு, இந்த நிஜமான சம்பவம் ஏற்படுத்தியிருந்த பாதிப்பு கொஞ்சநஞ்சமில்லை. ஒரு ரத்தக் காட்டேரியை அடித்துத் துரத்தும் அளவுக்கு ஒரு ஆறாம் கிளாஸ் பையனுக்கு வல்லமை இருக்குமா என்ன?

"மக்கு ரஞ்சு! ஆறாங்கிளாஸ் படிக்கறதா முக்கியம்? அவனுக்கு godடோ அருள் இருக்கு. இயற்கையிலேயே நிறைய சக்தி கிடைச்சிருக்கு. இதெல்லாம் காமன் மேனுக்குப் புரியாது" என்றாள் குட்டி.

அட, இந்தக் குட்டி எப்போதிலிருந்து இத்தனை விஷயம் தெரிந்தவளானாள்? ரஞ்சனாவுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது.

"நீ ஒரு வாட்டி ஜக்குவோட பேசிப் பாரு, புரியும். ஆனா அவன் உன்னை ஃப்ரெண்டா ஏத்துப்பானோ என்னமோ? எல்லாத்தையும் தீவிரமா யோசிச்சுத்தான் செய்வான். முடியாது, வேணாம்னு முடிவு பண்ணிட்டான்னா, செத்தே போனாலும் செய்ய மாட்டான்..."

"ஓ... கிரேட்...!" என்றாள் ரஞ்சனா. "எப்படியாவது என்னையும் ஃப்ரெண்டா சேர்த்துக்கச் சொல்லேன்! ப்ளீஸ்..."

---

"கவலைப்படாதீங்க. ஏதாவது துறைமுகத்துல நிக்கறப்ப திரும்ப கூட்டிட்டு வந்துடலாம்."

"என்ன மனுஷன்யா நீ! மானம் கப்பலேறிப் போச்சுன்னு வருத்தப்பட்டா இப்பிடியா சமாதானப் படுத்துவே?"

- அஜித்லால்





"உம், சரி" என்றாள் குட்டி. அவளுக்குப் பெருமை பிடிபடவில்லை.

அன்றிரவு ரஞ்சனா வீட்டில் ஹோம்ஒர்க் முடித்து விட்டு, அவளது அம்மாவின் மடியில் படுத்தபடி பள்ளிக்கூடக் கதைகளைச் சொல்லத் தொடங்கியபோது, எல்லாவற்றையும் விடப் பிரதானமாக குட்டி வருணித்த ஜக்குவின் பராக்கிரமங்கள்தான் அவள் மனத்தில் முன்நின்றன.

"நம்பவே முடியலேம்மா. அவ்ளோ சக்தி உள்ளவனாம் அந்த ஜக்கு. கடவுளோட பேசுவானாம். படிக்காமலேயே எல்லாப் பாடமும் அவன் ப்ரெயினுக்குள்ள தானா போய் உக்காந்துடுமாம். சென்டம் தவிர வேற மார்க்கே இதுவரைக்கும் வாங்கினதில்லையாம். கம்ப்யூட்டரெல்லாம் ஆப்பரேட் பண்ணுவானாம். நாய், பூனை, பாம்பு, கரடி எல்லாத்தோடவும் பேசத் தெரியுமாம். மொத்தம் ஹன்ட்ரட் லேங்குவேஜஸ் தெரியுமாம் அவனுக்கு..."

"அதென்னடி புதுக் கதை?" என்றாள் ரஞ்சனாவின் அம்மா.

"கதை இல்லேம்மா. ப்ராமிஸ். நீ யார்கிட்டேயும் இதையெல்லாம் சொல்ல வேணாம். ஆனா அது ப்ராமிஸ். குட்டிதான் சொன்னா. அவ ஃப்ரெண்டு ஜக்கு ஒரு சூப்பர்மேன் மாதிரி. என்னென்னவோ சக்தியெல்லாம் இருக்கு அவனுக்கு. கேக்கவே பயம்மா இருக்குன்னா பார்த்துக்கோயேன்... ஒருநாள் நடுராத்திரி அவன் வீட்டு வாசல்லே ஏழு ராட்சஸர்கள் வந்து இந்த க்ஷணம் உன்னைச் சாப்பிடப் போறேன். எழுந்து வா ஜக்குன்னு கூப்டாங்களாம்.... துளி பயமில்லாம எழுந்து போய் வாசல்ல அவங்க முன்னாடி நின்னிருக்கான். ஆனா ஒருத்தராலயும் அவனைப் பிடிக்கவே முடியலை... கிட்ட போனாலே அவனைச் சுத்தி ஒரு நெருப்பு வளையம் வந்துடுமாம்... யாருமே நெருங்க முடியாது!"

"சீ போ. பேசாம படுத்துத் தூங்கு. கண்ட கதையெல்லாம் யார்கிட்டயோ கேட்டுட்டு ராத்திரி பெட்டுல மூச்சா போற டெய்லி!" என்று அவளது அம்மா சொன்னாள்.

ரஞ்சனாவுக்கு அழுகை வந்து விட்டது. அவள் படுக்கையில் மூச்சா போவதைச் சுட்டிக்காட்டியதால் இல்லை. ஒரு உண்மை. அதுவும் பேருண்மை. தன் மீது எத்தனை நம்பிக்கை கொண்டு குட்டி அதைச் சொல்லியிருக்கிறாள்! மாமேதையான ஜக்குவுக்குத் தன்னை ஃப்ரெண்ட் ஆக்கி விடுவதாகவும் சொல்லியிருக்கிறாள். ஆனால் அந்த



"என்னது எல்.கே.ஜி.யில் படிக்கிற நம்ம பையன் ஆயிரம் ரூபாய் கேட்கிறானா!"

" 'கிளாஸ் லீடராக நியமித்த டீச்சருக்கு நன்றி! நன்றி!!'ன்னு போஸ்டர் ஒட்டணுமாம்!"

- ஸ்டாலின் பிரபு

அம்மாவுக்கு ஏன் தன் மீது நம்பிக்கையே வரவில்லை? தான் பொய் சொல்வதாக நினைக்கிறாளா என்ன?

ஆனால் அதுவும்தான் புரியவில்லை. ஜக்குவைக் குறித்துச் சொல்லும்போதே விஷயங்கள் இயல்பாகப் புதுப்பரிமாணம் பெற்று விடுகின்றன. விவரிக்கும் உண்மைகளுக்குத் திடீரென்று சிறகு முளைத்து, விநாடிப் பொழுதுக்குள் கண்ணுக்கெட்டாத தூரங்கள் வரை பரவி விடுகின்றன. குட்டி சொன்னதை அப்படியே சொல்ல முடியாதுதான். அது மேத்ஸ் மீது ப்ராமிஸ் விஷயம். ஆனால் தான் சொல்லுவது ஒன்றும் முற்றிலும் வேறான விஷயம் அல்லவே? ஜக்கு ஒரு மந்திரசக்தி பொருந்திய பையன். அவன் ரத்தக்காட்டேரியை விரட்டினால் என்ன? ராட்சஸர்களை விரட்டினால் என்ன? ஒருவேளை அவனது மந்திரசக்தியே தான் தன்னை ரத்தக்காட்டேரிக்கு பதில் ராட்சஸர்கள் என்று மாற்றிச் சொல்ல வைத்து விட்டதோ என்னமோ!

ஆனால் இந்த அம்மா ஏன் நம்ப மாட்டேன் என்கிறாள்?

"நான் சொல்றது நிஜம்தாம்மா... அவன் உண்மையிலேயே மந்திரவாதி மாண்ட்ரேக் மாதிரிதான் போலிருக்கு..." ரஞ்சனாவுக்கு அழுகையே வந்து விடும் போலிருந்தது.

"இந்தவாட்டி எக்ஸாம்ல எல்லா சப்ஜெக்ட்லேயும் மார்க் குறைஞ்சிருக்கு ரஞ்சு. ஒழுங்கா படிக்கணும். இந்த மாதிரி கண்ட கதையெல்லாம் யார்கிட்டேயும் கேட்டுண்டிருக்காதே... சமத்தோல்லியோ? ஹோம் ஒர்க் முடிச்சுட்டியா? போய்ப் படு?"

மறுநாள் ரஞ்சனாவை பள்ளியில் விடப் போகும் போது குட்டியின் அம்மாவைப் பார்த்துக் கொஞ்சம் பேச வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்.

(தொடரும்)





# வீடு

மூலை முடுக்கெல்லாம்
சிலந்தி வலைபின்ன
காலை விரித்தபடி
நண்டோடும் வளைக்குள்.

மண்ணுக்குள் புழுக்கள்
மரப் பொந்தில் ஆந்தை
விண்ணில் சிறகடிக்கும்
பறவைக்குச் சிறுகூடு...

காட்டுக்குள் உப்புக்
கடலுக்குள் பல்லுயிர்கள்
நாட்டு நாய் வாழும்
நிம்மதியாய்த் தெருவில்.

ஓதுவார் யாருமின்றி
ஒற்றுமை தேன்கூட்டில்
யாதும் ஊர்தானே
பூச்சிக்கும் எறும்புக்கும்!

செங்கல்லும், சுண்ணாம்பும்
சின்னஞ்சிறு குடிசைகளும்
மங்காத சலவைக்கல்
மாளிகையும் நிலைத்திருக்க...

சாதி மதச் சுவர்களுக்குள்
மூச்சுமுட்டி வெப்பத்தால்
சோதியாக எரியுதம்மா
பாழும் மனிதக் கட்டைகள்!

வைகைச் செல்வி



அடுத்த இதழ்...

# ஷாப்பிங் ஸ்பெஷல்!

## 2 புத்தகங்கள்

**செம்பியன்** எழுதும்

## நேற்று இன்று நாளை

-அட, நச், சூப்பர்பா, பிச்சிட்டார்யா, தூள், அட்டகாசம்... இப்படி ஏதாவதொன்றை ஒவ்வொரு வாரமும் உங்கள் உதடுகள் உச்சரிப்பதை உணர்வீர்கள்.

**சுபா** எழுதும்

## 'நான் வேண்டுமோ?'

-ரொமான்ஸ் த்ரில்லர் ஆரம்பம்...





**மேஷம்:** நாலா பக்கத்திலிருந்தும் நானாவிதமான எதிர்ப்புகள் வந்துக்கிட்டே இருந்தா, நீங்கதான் எவ்வளவு நாளைக்கு தம் பிடிச்சு சமாளிப்பீங்க! ஸ்ரீ மஹா கணபதியைப் பிரார்த்தனை செஞ்சுக்குங்க. நெஞ்சுல துணிவும், காரியத்துலே வெற்றியும் கிடைக்கும். ராகு பகவான், ஜென்ம ராசியில் 7ல் கேது என்பதால், செலவினங்கள் கட்டுக்கடங்காது. ஆனால் குரு பலம் காரணமாக உடனுக்குடன் நிவாரணம் ஏற்படும். சுப காரிய முயற்சிகள் அனுகூலம் தரும். திருமணம் ஆகாதவங்களுக்கு, அதற்கான வாய்ப்புக் கிடைக்கும்.

**ரிஷபம்:** கண்ணுல விளக்கெண்ணெய் விட்டுக்கிட்டு, உத்து உத்துப் பார்த்துக்கிட்டே இருங்க! அதிர்ஷ்டமான வாய்ப்பு ஒண்ணு, அமிர்த யோகம் கூடி வந்து நிக்கப் போகுது. 'ஏழரைச் சனி இரண்டாவது சுற்று நடக்ற சமயமாச்சே! அதிர்ஷ்டமாவது... அவரைக் காயாவது' என்று அசுவாரசியப்பட்டால் எப்படி? நம்புங்கள்... நல்லதே நடக்கும். சனி பகவான், 2ம் இடமான தனம், வாக்கு ஸ்தானத்தில் சஞ்சாரம் என்பதால் பண விஷயத்தில் கொஞ்சம் எச்சரிக்கை தேவை. கொடுக்கல் - வாங்கல் விஷயத்தில் பரம நிதானம் காட்டுவது நல்லது. மனை, நிலம், ரியல் எஸ்டேட் அனுகூலம் தரும்.



**மிதுனம்:** ஆரோக்கிய மேன்மை, உற்சாகமான மனநிலை, புதிய பொருள் சேர்க்கை, சரளமான பணவசதி என கேட்டாலே மனம் குளிர்ந்து போகும்படியான அம்சமான பலன்களை அனுபவிக்கப் போறீங்க! மாணவர்களின் உழைப்பும், திறமையும் சிறிதும் வீணாகாத அளவுக்கு பளிச்னு மின்னுவாங்க.

# நடக்குமென்பார்;

தாமதமாகி' வந்த பதவி உயர்வு, இடமாற்றம் வந்து சேரும். உத்தியோக சம்பந்தமான பயணம் அனுகூலம் தரும். சுய தொழில் சூப்பர் அபிவிருத்தி உண்டு.

**கடகம்:** மலை மேலே ஏறிப் போய் துண்டை விரிச்சுப் போட்டு உட்கார்ந்தாலும் உங்க காரியங்கள் எல்லாம் 'டாண் டாண்'னு அது பாட்டுக்கு நடந்துக்கிட்டேயிருக்கும். அப்படி ஒரு விசேஷமான ஜாதகம் உங்களுக்கு. குறிப்பாக, பெண்கள் நினைச்சதெல்லாம் துல்லியமா நடக்கும். குல தெய்வப் பிரார்த்தனை, புனித ஸ்தல பயணம் போன்றவை நடந்தேறி குதூகலம் தரும். புதிய காரியங்களில் ஈடுபடும்போது, பெரியவர்களின் ஆலோசனையை ஏற்று நடக்கவும், பயணங்கள் வெற்றி மேல் வெற்றி தரும்.



**சிம்மம்:** எதிர்பாராத பண வரவு, பிரபு தனவான்களின் ஆதரவு ஆகியவை ஏற்பட்டு, உங்களை சந்தோஷக் கடலில் ஆழ்த்தும். உத்தியோகத்தில் இதுவரை இருந்து வந்த சிக்கல்கள் யாவும் விலகி, ஆரோக்கியமான சூழல் உருவாகும். கண்ணி வெடியிலிருந்து மயிரிழையில் தப்பிச்ச ஆந்திர மாநில முதல்வர் மாதிரி, நீங்களும் பெரிய ஆபத்து ஒன்றிலிருந்து தப்பிப்பீர்கள். எனவே... பயணத்தில் கவனம் தேவை. குடும்பத்தில் கணவன் - மனைவி உறவு நிலை இனிமையாக இருக்கும்.

**கன்னி:** செவ்வாய் 6ல், அதுவும் குரு பார்வையுடன் சஞ்சரம் என்பது ரொம்பவே உற்சாகமான விஷயம்தான்! உத்தியோகமோ, தொழிலோ, படிப்பு விஷயமோ சகலவகையிலும் முன்னேற்றம் உண்டாகும். குறிப்பாக சுய தொழிலில் ஈடுபட்டவர்களுக்கு, புதிய திருப்பம் ஏற்பட்டு, பணமழை பெய்யும். சனியில் பலத்தால் நல்ல உச்சத்துக்குப் போய் வருவீர்கள். கலைத்துறை சம்பந்தப்பட்டவர்களுக்கு பெயர், புகழ், ஆதாயம் அதிகரிக்கும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.



**துலாம்:** 7ல் ராகு, 5ல் செவ்வாய் சஞ்சரிப்பது, நல்ல விஷயம் என்று நினைத்து மகிழ்ந்துவிட முடியாது. சிறு சிறு பிரச்னைகள் உறுத்திக் கொண்டேயிருக்கும். தெய்வ பலத்தை அபிவிருத்தி செய்து கொள்வது அவசியம். எதிர்பாராத பயணம் ஏற்படும். தனகாரகன் குரு, 11ம் இடமான லாபஸ்தானத்தில் பலம் பெற்று சஞ்சாரம் என்பதால், கொடுக்கல், வாங்கல் தக்க சமயத்தில் கை கொடுக்கும். அரசுத் துறையினர் ஆதாயம் பெறுவார்கள்.



வழக்கறிஞர் சுமதிக்கு (ரிஷபம்) அதிர்ஷ்ட வாய்ப்புக் காத்திருக்கிறதாம்.



**விருச்சிகம்:** 'பத்தாம் இடத்தில், குரு இருக்கிறாரே... பதவிக்கு ஆபத்து வந்து விடுமோ!' என்று கலங்காதீர்கள். ராசிநாதன் குருபகவான் பரஸ்பரம் பார்ப்பதால் மறைமுக எதிரிகள் கூட அட்ரஸ் இல்லாமல் போய்விடுவார்கள். எதிர்பாராத வெளிநாட்டுத் தொடர்பு அனுகூலம் தரும். கணவன் - மனைவி ஒற்றுமை இனிமை கூட்டும்.



**தனுசு:** தொட்டது துலங்கும்! பட்டது பளபளக்கும்! குறிப்பாக சுய தொழில், கூட்டுத் தொழில் வர்த்தகம் செய்பவர்களுக்கு அனுகூலமான கட்டம்! கடன் சுமையால் திணறிக் கொண்டிருந்தவர்கள்கூட, படிப்படியாக மீண்டு, நிம்மதிப் பெருமூச்சு விடும் நிலை ஏற்படும். பெண்களின் கையிருப்பு அதிகரிக்கும். குரு பலம் நிறைந்து இருப்பதால், பொன், பொருள், ஆடை, ஆபரணச் சேர்க்கை உண்டாகும். 'திருமணம் தள்ளிப் போகிறதே' என்று விசனப்பட்டுக் கொண்டிருந்தீர்கள் அல்லவா! இனி கெட்டிமேளம் கொட்டப் போகுது. வாழ்வில் இனிமை சொட்டப் போகுது!

# நடக்கும்!



**மகரம்:** ஆபீசுக்குப் போனாலே வம்பு, பிரச்னை, வீண் வாக்குவாதம் எல்லாம் வரிசையா காத்திருந்து வரவேற்கும். அதனாலே இந்த வாரம் முழுக்க பேச்சிலும் செயலிலும் நிதானம் தேவை. ஆனால் 'வைட்டமின் - ப' கொஞ்சம் தாராளமாகவே புரண்டு, குடும்பத்தில் மகிழ்ச்சி அலைகளைப் பரப்பும். ஆயுத பூஜைக்கு அநியாயத்துக்கு ஏறிவிடும் அரிசிப் பொரி விலை போல, உங்கள் மவுசும், திறமையும் திடீரென்று உயரும். சொத்து விவகாரங்கள் சுமுகமாகப் பைசல் ஆகும்.



**கும்பம்:** உங்கள் ராசிநாதன் சனி 5ம் இடத்தில், பூர்வபுண்ணிய ஸ்தானத்தில் சஞ்சாரம், 3ம் இடத்தில் ராகு மற்றும் குரு 7ல் சஞ்சாரம் என்பதால், பிரபுதனவான்களின் ஆதரவு அமோகமாகக் கிடைக்கும். இதனால் எடுத்த காரியத்தில் துணிச்சலுடன் ஈடுபட்டு 'பேஷ்!' என்று பாராட்டப் பெறுவீர்கள். வியாபாரிகளுக்குப் பொருளாதார அபிவிருத்தி ஏற்படும். அரசாங்க ஆதரவு, எதிர்பார்த்த வங்கிக் கடன், வெளிநாட்டுச் செய்தி கிடைத்து, உற்சாகத்தின் எல்லைக்கே போவீர்கள். பெண்களுக்குத் தெளிவான மனநிலை இருக்கும்.



**மீனம்:** கல்வி, கேள்வி, ஆராய்ச்சி போன்ற துறைக்காரர்களுக்கு சுபிட்சமான காலம். உத்தியோகஸ்தர்களுக்கு இதுவரை இருந்து வந்த சங்கடங்கள் யாவும் விலகி, சுமுகமான நிலைமை நிலவும். குரு பகவான், யோகம் சம்பந்தமான பயணங்கள் வெற்றிக்கு வித்திடும். குரு பகவான் 2ம் இடமான குடும்ப, தன, வாக்கு ஸ்தானத்தைப் பார்ப்பதால் சுப காரிய முயற்சி அனுகூலம் தரும். பொருளாதார நெருக்கடி ஏற்பட்டாலும் தக்க சமயத்தில் தெய்வ பலத்தால் சமாளிப்பீங்க. பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

11

இரண்டு வேளைதான் சாப்பிட வேண்டும். ஒரு வேளைக்குப் பதினாறு பிடிதான் சாப்பிட வேண்டும் என்று சொன்னேன். ஒரு பிரும்மச்சாரிக்கு இந்த நியமங்களெல்லாம் கிடையாது. மற்ற ஆசிரமங்களுக்குத்தான் நியமம் - இப்படியிப்படிச் சாப்பிட வேண்டும் என்று நியமம்.

கண்ட இடத்திலே சாப்பிடுவது, கண்ட பதார்த்தங்களைச் சாப்பிடுவது, இரண்டு நாள் வைத்திருந்து, சாப்பிடுவது - இதெல்லாம் கூடாது.

முதல் நாள் உடுத்திய வேஷ்டியை மறு நாள் உடுத்தக் கூடாது. பல சூரியன் பார்த்த வஸ்திரம் கூடவே கூடாது. வஸ்திரத்துக்கு சுத்தி ஏற்பட வேண்டுமானால் அன்றன்றைக்கு அதை நனைத்து, உலர்த்தி, உலர்ந்த பிற்பாடு உடுத்திக் கொண்டு சிராத்தாதி கர்மாக்கள் பண்ண வேண்டும். முதல் நாளே உலர்த்தக் கூடாது என்கிறது சாஸ்திரம்.

பிடக்கூடாது. இலையைச் சுற்றி விட்டு, கொஞ்சம் இலைக்குப் பக்கத்திலேயும் விட வேண்டும்.

எதற்காக அப்படி ஜலம் விடுகிறோம்... என்று கேட்டால் காரணம் இருக்கிறது...

ரௌரவம் என்று ஒரு நரகம். அதிலே 'ருரு' என்று ஒரு பிராணி. நீளமாக முதலை மாதிரி. ஆனால் முதலையைக் காட்டிலும் வாய் அதற்கு. ரம்பம் மாதிரி பற்கள்! அந்தப் பற்கள் அப்படியே ஒன்றுக்கொன்று பிடித்துக் கொண்டு நிற்கும்! யம படர்கள், இந்த நரகத்துக்குப் பாபாத்மாக்களை இழுத்துக் கொண்டு போவார்கள். கீழே பள்ளத்தாக்கிலே ஆயிரம் ருரு இருக்கிறது. அதிலே பிடித்துத் தள்ளுகிறார்கள். அத்தனையும் கடித்து அவனை ஹிம்ஸை பண்ணும். அதே ரௌரவத்திலே பெரிய பாலைவனம் இருக்கும். சூர்ய ரச்மியினால் மணல் அங்கே

# குறையொன்றுமில்லை

கொதிக்கிறது! ஒரே சூடு. அதிலே போட்டுப் புரட்டியெடுக்கிறார்கள் யமபடர்கள். 'தாகம்! தாகம்' என்று தவிப்பார்கள் இவர்கள். யம படர்கள் வாயருகே தண்ணீரைக் கொண்டு போய் ஜலத்தைக் காட்டுவார்கள். அவன் குடிப்பதற்குக் கிட்டே வருகிறபோது கீழே கொட்டி விடுவார்கள். பாவம், கஷ்டப்படுகிறானே, தண்ணீர் கொடுப்போமே என்று கொடுக்கவே மாட்டார்கள்.

அந்த மாதிரி கொடுத்தால் பாரபட்சம். கடமையைத்தான் அவர்கள் செய்வார்கள். யமனின் தலைக்கு மேலே மயிரிழையில் கட்டிய ஒரு பர்வதம் தொங்குகிறது. அவன் ஆசனத்துக் கீழே நெருப்பாறு ஓடுகிறது! யாருக்காவது தப்பாக, பக்ஷபாதமாகத் தீர்ப்பு அவன் சொன்னானானால், மலை அவன் தலையிலே விழுந்து, அவன் நெருப்பிலே விழ வேண்டும்.

இதுவரைக்கும் யமன் அப்படி விழுந்த

இதற்கே இவ்வளவு தோஷம் சொன்னால், சாப்பிடுகிற விஷயத்தில் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று எண்ணிப் பாருங்கள்.

சாப்பிடுவதிலே கட்டுப்பாடோடு அனுஷ்டானத்தோடு இருந்துவிட்டால், அப்படிப் பட்டவர்களிடம் ஒரு தோஷம் நெருங்குமா? திடகாத்திரமாக வஜ்ரவத் சரீரத்தோடு இருப்பார்கள் அவர்கள். அனுஷ்டான லோபம் ஏற்பட ஏற்பட, சரீரத்திலே பலவிதமான தோஷங்கள் ஏற்படுகின்றன.

ஆதலால்தான் பிராணாஹுதி, பரிசேஷணம் எல்லாம் ஏற்படுத்தியது. 'அமிர்தத்தால் இந்த அன்னத்தை மூடுகிறேன்' என்று ஜபித்துவிட்டு, தீர்த்தத்தைக் கையிலே வாங்கிக் கொண்டு சாப்பிடும்போது, அது பகவத் அர்ப்பணமாகிறது. கையிலே வாங்கிக் கொள்ளும் ஜலம் மொத்தத்தையும் சாப்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

தில்லை. பாரபட்சமே அவனிடம் கிடையாது. என்ன உண்டோ அதை நடத்தியே தீருவான்.

ஆகவே, யம படர்கள் ஓர் ஆத்மாவை இந்த மாதிரி நடத்துகிறார்கள் - அவன் "தாகம் தாகம்" என்கிறான் - அதனால் நாம் இப்போது சாப்பிடுகிறபோது, உலகத்திலே இருக்கிறவர்களுடைய செளக்கியத்தை மட்டும் வேண்டுவதில்லை. 'இப்படி நரகத்திலே போய்க் கஷ்டப்படுகிறார்களே, அவர்களுக்கும் இதோ விடுகிறேன் இந்த ஜலம். அவர்களுக்கு இது பூரண தாக சாந்தியை உண்டு பண்ணட்டும்...' என்று வேண்டுகிறோம்.

நரகத்திலே அங்கே கஷ்டப்படுகிறவர்கள், 'அடடா? இப்படி தீர்த்தத்தை விடுகிறானே... இவன் செளக்கியமாக இருக்கட்டும், பூலோகத்திலே நல்ல மழை பொழியட்டும், நல்ல தீர்த்தம் கிடைக்கட்டும்' என்று அனுக்கிரஹம் பண்ணுகிறார்களாம்.

இப்போது இந்த கர்மாவையே பிராணாஹுதி கர்மாவையே - நாம் விட்டு விட்டோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். ரெளரவத்தைக் காட்டிலும் மோசமாகப் போய்விடும். ஏனென்றால் தீர்த்தமே நமக்குக் கிடைக்காது என்று சாஸ்திரம் சொல்கிறது. ஆகவே பரிசேஷண கர்மாவானது முக்கியம்.

பூர்வ காலத்திலே ஆசாரத்துக்காகத் தீர்த்தத்தைக் கையிலே எடுத்துக்கொண்டு வருவார்கள். இப்போது தீர்த்தம் இல்லாமல் யாருமே எங்கேயுமே போவதில்லை. நல்ல தீர்த்தம் கிடைப்பதில்லை. எதைச் சாப்பிட்டால் என்ன ஆகுமோ என்று பயம் ஏற்படுத்துகிறது.

கலியுகத்திலே - நான்கு லட்சத்து முப்பத்திரண்டாயிரம் வருஷத்து முடிவிலே - வர வேண்டியதெல்லாம் இப்போதே - ஐயாயிரம் வருஷத்துக்குள்ளாகவே வந்துவிட்டது. கலியுக முடிவிலே என்னென்ன ஆகும், என்று மஹரிஷிகள் சொல்லியிருக்கிறார்களோ, அதெல்லாம் ஐயாயிரம் ஆண்டுக்குள்ளேயே வந்துவிட்டது. அப்படியானால், இன்னும் என்னவெல்லாம் வருமோ தெரியாது! அவ்வளவு கஷ்டங்களை அனுபவிக்க இருக்கிறோம் உலகத்திலே.

கர்மானுஷ்டானம் ரொம்ப முக்கியம் என்பதைத்தான் ஆழ்வார் 'ஐந்துமைந்து மைந்துமாய்' என்று சொன்னார். அவ்வளவு கடமைகள் நமக்கு இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

அடுத்த ஐந்து என்ன...? பஞ்சாக்னி வித்யா என்று உண்டு. அந்த பஞ்சாக்னி வித்யையாக பரமாத்மாவே இருகிறான்.

காருகபத்யம் என்பதுதான் பிரதான அக்னி குண்டம். சமீ விருக்ஷம் என்கிற விருக்ஷத்திலிருந்து அரணி பண்ணி கடைந்து, அக்னி ஏற்படுத்த வேண்டும்.

சமீ விருக்ஷம் என்பது வன்னி மரம். பஞ்ச பாண்டவர்கள், விராட நகரத்திலே ஒரு வருட காலம் அக்ஞாதவாஸம் பண்ணினார்கள் அல்லவா, அப்போது சமீ விருக்ஷத்திலே தான் தங்கள் ஆயுதங்களையெல்லாம் வைத்துவிட்டுப் போனார்கள். அக்னி அதிலே இருக்கிறது - யக்ஞத்துக்கு வேண்டிய அக்னி விசேஷமாய் இருக்கிறது. ஆகையினால்தான் அதிலிருந்து அரணிக்கட்டை எடுக்கப்படுகிறது.

யக்ஞம் பண்ணுகிறபோது அத்வர்யூ பெரும் சபையிலே அறிவித்துச் சொல்லி விட்டுத்தான் கடைவார் : "அக்னியைப் பெற அரணியைக் கடைகிறோம்..." நீங்கள் எல்லோரும் சாவதானமாகக் கையைக் கூப்பிக் கொண்டு பிரார்த்தனை பண்ணுங்கள்..." என்று அறிவிப்பார். அக்னி சீக்கிரமாக வர வேண்டும் என்பதற்காகப் பிரார்த்தனை.

கடைந்து கொண்டேயிருக்கிறபோது அக்னி வந்துவிடும். அப்போது ஏதோ இருபது லட்சம் பணம் கிடைத்த மாதிரி எகிறிக் குதிக்க வேண்டும். அப்புறம் இன்னும் பெருங்குரலில் சொல்ல வேண்டும் :

அக்னயே ஜாதாயானு ப்ருஹி - அந்த அக்னியை ரொம்ப ஜாக்கிரதையாக எடுத்துக் கொண்டு வந்து, காருகபத்ய அக்னி குண்

## வைரமுத்துவுக்கு நோபல்!

"இசையமைப்பாளர் பரத்வாஜ், கவிப்பேரரசு வைரமுத்து, ஒளிப்பதிவாளர் வெங்கடேஷ், கலை இயக்குனர் மோகன மகேந்திரன் உள்ளிட்ட எங்களது வெற்றிக் கூட்டணி இந்தப் படத்திலும் தொடர்ந்திருக்கிறது. இனியும் தொடரும். உங்கள் படங்களுக்கு பரத்வாஜ் மட்டுமே இசையமைத்து வருவது ஏன் என்று கேட்கிறார்கள். பரத்வாஜ் இது வரை எனக்கு மெட்டமைத்துக் கொடுத்த அத்தனையுமே ஹிட் பாடல்கள். அதே போல கவிப்பேரரசு வைரமுத்துவின் தொகுப்புக்களிலிருந்து நான் தேர்வு செய்து தரும் கவிதைகளுக்குத்தான் பரத்வாஜ் மெட்டுப் போடுகிறார். இன்றும் வைரமுத்துவுக்கு கற்பனை



* நடிகைகள் பூஜா, அமோகாவுடன் சரண்

வறட்சி என்பதைக் கற்பனையில் கூட நினைத்துப் பார்க்க இயலாது. நோபல் பரிசுக்குத் தகுதியான தமிழ்க் கவிஞர் அவர்!

ஜே.ஜே. படப்பாடல்கள் வெளியீட்டு விழாவில் படத்தின் இயக்குனர் சரண்.

- ஸ்ரீ

டத்திலே பிரதிஷ்டை பண்ண வேண்டும். அதிலே ஹோமங்களெல்லாம் நடக்கும். அதற்கப்புறம் அதிலேயிருந்து எடுத்து, ஆகவ மீயம், அதிலேயிருந்து எடுத்து தக்ஷிணாக்னி என்று வெவ்வேறு அக்னிகளை உண்டாக்க வேண்டும்.

இங்கே ஜன்ய - ஜனக பாவத்துடன் அக்னி உண்டாக்கப்படுகிறது. ஜனகன் யாரென்றால் காருகபத்ய அக்னி. ஜன்யம் இருக்கிறதே, அது ஆகவமீயம், தக்ஷிணாக்னி. இந்த இரண்டும் புத்ர ஸ்தானத்திலே - பிள்ளை ஸ்தானத்திலே இருக்கிறது. காருகபத்யம்தான் தந்தை ஸ்தானத்திலே இருக்கிறது. இதிலேயிருந்து தான் அதிலே சேர்க்க வேண்டும்.

ஒரு சமயம் யக்ஞத்தில் என்ன ஆயிற்று, காருகபத்ய அக்னி குண்டம் அணைந்து போயிருந்தது. அதிலேயிருந்து எடுத்துச் சேர்க்கப்பட்ட ஆகவமீயம், தக்ஷிணார்த்தத்திலே அக்னி எரிந்து கொண்டிருக்கிறது. சாதரணமாக என்ன செய்வோம்..? பிரதான ஹோம குண்டத்திலே ஹோமம் கட்டாயம் இருக்க வேண்டும் என்று எண்ணி, ஜன்ய குண்டத்திலேயிருந்து எடுத்து அதை ஏற்ற முயற்சி செய்வோம். ஆனால், அதைத்தான் கூடாது என்கிறது சாஸ்திரம்!

அக்னியைக் கடன் வாங்கக் கூடாது. அப்படிச் செய்தால் ஒரு கிருஹத்திலே அழுகைக் குரல் கேட்கும் என்கிறது. அக்னியை, சிலர் பக்கத்து கிருஹத்திலே போய்க் கடன் வாங்கிக் கொண்டு வருவார்கள். கிராமங்களிலே அது உண்டு. நகரங்களில் இருக்காது. ஆனால் சாஸ்திரம் இதை ஏற்பதில்லை.

வாயோர் அக்னி. வாயுவிலிருந்து அக்னி தோன்றியது. அக்னியே வாயுவாக இருக்கிறது இப்போது! பஞ்ச பூதங்களிலும் அக்னி இருக்கும்படியான நிலையைப் பார்க்கிறோம்.

அக்னியை, பிறரிடத்தில் வாங்கிவரக் கூடாது என்று சாஸ்திரம் சொல்கிறது அல்லவா..? இலங்கையிலே ஆஞ்சநேயன் என்ன செய்தான்? அவர் கேளாமலே அவர் வாலில் அக்னியைக் கொடுத்துவிட்டார்கள். உடனே அந்த மஹா வித்வான், நவ வியாகரண பண்டிதன், யோசனை பண்ணுகிறான்... அக்னியை வாங்கிக் கொள்ளக் கூடாதே, என்ன பண்ணுவது?' என்று யோசிக்கிறான்

'ஒன்று செய்வோம்; நாம் எடுத்துக் கொண்டு போனால் தப்பு; கொடுத்தவர்களுக்கே திருப்பிக் கொடுத்துவிடுவாம்..' என்று அங்கே இலங்கையிலேயே வைத்து விட்டுப் போய்விட்டான்! அதை எடுத்துக் கொண்டு போனானா பாருங்கள்!

ஆகையினாலே அக்னியை வாங்கிக் கொண்டால் அவ்வளவு தப்பு. அப்படி சாஸ்திரம் வரையறுத்திருக்கிறது.

அக்னியிடத்திலே ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். எங்கெங்கே அக்னி இருக்கிறது என்று பார்த்தால்... அது எங்கும் கிடைக்காது போனாலும், இருக்கக்கூடிய இடம் ஒன்று உண்டு.

பாணி ஹோமம் என்று பெயர் - பிராமணனுடைய வலது கரத்திலே அக்னி இருக்கிறது;

அதே மாதிரி அவன் வலது காதிலே அக்னி இருக்கிறது;

வெள்ளாடு இருக்கிறதே, அதன் காதிலே அக்னி இருக்கிறது; அரணிக் கட்டையிலே அக்னி இருக்கிறது; என்றெல்லாம் சாஸ்திரம் சொல்கிறது.

அங்கிருந்துதான் நாம் அக்னியைக் கொள்ள வேண்டும்.

அறுபது வருஷத்துக்கு முன் ஸ்ரீமத் முக்கூர் அழகிய சிங்கர் இருந்தார். சர்வ சாஸ்திர நிபுணர். அமிர்த வாக்ய வர்ஷி அவர்... அந்த ஸ்வாமி உபன்யாஸம் பண்ணி, 'பிராமணனுடைய வலது கையிலே அக்னி இருக்கிறது..' என்று சொல்லிக் கொண்டிருந்தார்... அப்போது ஒருத்தர் எழுந்து கேட்டார்... 'நீங்கள் சொல்லிவிட்டால் ஆயிற்றா? அக்னி எங்கே இருக்கிறது, தெரியலையே!" என்றார்.

அதற்கு அழகாக பதில் சொன்னார் அழகிய சிங்கர்.

(வளரும்)

# மணவிலக்கு குழந்தைகளைப் பாதிக்குமா?

பெரும்பான்மை திரை நட்சத்திரங்களின் திருமண வாழ்க்கை, குறுகிய ஆயுளோடு முறிந்து போகிறது. சமீபத்திய உதாரணம் பார்த்திபன் - சீதா மணவிலக்கு. இவர்களைப் போன்ற பிரபலங்களுக்கு மணவிலக்கு என்பது விடுதலையாகத் தெரியலாம். ஆனால் இவர்களது இளம் வாரிசுகளின் நிலை என்ன? பெற்றோரின் பிரிவு எப்படிப் பாதிக்கிறது? சென்னை ஸ்டேன்லி அரசு மருத்துவக் கல்லூரியின் மனநல மருத்துவத் துறைத் தலைவர், குழந்தை உளவியல் நிபுணர், டாக்டர் மா. திருநாவுக்கரசு என்ன சொல்கிறார் கேட்போம்.


* டாக்டர் மா. திருநாவுக்கரசு

“பிரபலமான பெற்றோர்கள், பிஸியான தொழில், அலுவலில் ஈடுபட்டுள்ள பெற்றோர் என யாராக இருப்பினும், பெற்றோரின் மணவிலக்கு என்பது பிள்ளைகளின் வயதைப் பொறுத்து தாக்கத்தை ஏற்படுத்தும். பத்தொன்பது வயது டீன் பருவம் முடியும் வரை, பிள்ளைகளைக் குழந்தைகள் என்று பார்ப்பதே சரி. என்றாலும், பதினெட்டு வயதிற்குப் பிறகே பகுத்துப் பார்க்கும் குணமும், ஸ்திரமான மனோபாவமும் ஏற்படும். பெற்றோர்கள் பிஸியாக இருந்தால் பிள்ளைகள் கெட்டுப்போய் விடுவார்கள், அல்லது ஏங்கி விடுவார்கள் என்று பொத்தாம் பொதுவாகச் சொல்வதுண்டு. ஆனால் இதை இப்படி அறுதியிட்டுச் சொல்வது தவறு. பெற்றோர்களால் பிள்ளைகளுக்கு மனநிலை மாற்றம் மற்றும் பாதிப்புக்கள், மூன்று விதங்களில் நேரலாம். முதலாவது பெற்றோர்கள் இல்லாமை (பேரன்டல் ஆப்சென்ஸ்). அதாவது பெற்றோர்கள் அருகில் இல்லாமல் இருத்தல். இரண்டாவது, பெற்றோர்கள் இருந்தும் இல்லாமை (பேரன்டல் டெப்ரிவேஷன்). இந்த நிலையில் பெற்றோர்கள் இருந்தும் அன்பைச் செலுத்த முடியாத குடும்பச் சூழல் இருக்கலாம். மூன்றாவது பெற்றோரின் புறக்கணிப்பு. (பேரன்டல் ரிஜெக்ஷன்). பெற்றோர் இருந்தும் பிள்ளைகளை அங்கீகரிக்காமல் வெறுத்தல், ஒதுக்குதல் அல்லது கைவிட்டு விடுதல் போன்றவை நிகழும். இவை அனைத்துமே குழந்தைகளின் பாதுகாப்பு உணர்வையும், ஸ்திரத் தன்மையையும் பட்டென்று பாதிக்கும். ஸ்திரத் தன்மை இல்லாமல் போய் விடுவதற்கும், புறக்கணிப்பதற்கும் நூலிழைதான் வித்தியாசம். இதன் பாதிப்பு மனச்சோர்வில் தொடங்கி, நினைவிழத்தல் வரை வந்து விடலாம். அதே சமயம் பெற்றோர்கள் இல்லாதிருத்தல் அல்லது புறக்கணித்தல் போன்றவை இருந்தும் இந்தத் தாக்கங்கள் ஒரு குழந்தைக்கு ஏற்பட்டே தீரும் என்றும் சொல்ல முடியாது.

"மன முறிவு ஏற்பட்ட பிறகும் பெரும்பாலான பெற்றோர் மணவிலக்கு செய்யாமல் இருப்பது குழந்தைகளுக்காகத்தான். ஆனால் பிரபலங்கள் மணவிலக்குப்



• சீதா



• பார்த்திபன்

பெற்றுக் கொள்ளும்போது சமூகத்தால் பெரிதும் கவனிக்கப்படுகிறது. இதனால் பிரபலங்களின் பிள்ளைகள் மீது அதீத கவனம் விழுகிறது. இது ஓரளவு பாதிப்பை ஏற்படுத்தும். இந்த நேரத்தில் இவர்கள் உணரும் ஆதரவற்ற சூழ்நிலை, பாதுகாப்பற்ற உணர்வு, ஸ்திரத் தன்மை இன்மை ஆகியவற்றை யார் போக்கினாலும், இவர்களை மனநிலை பாதிப்புகளிலிருந்து மீட்க முடியும். முக்கியமாக பாதிப்பு என்பது சூழ்நிலையின் தாக்கம், சம்பவத்தின் வீரியம், நேரும் வயது இவற்றைப் பொருத்தும் மாறுபடுகிறது.

"பெரும்பாலான பெற்றோர் 'நான் இல்லாமல் என் குழந்தை பள்ளிக்கூடம் போகமாட்டான். சாப்பிட மாட்டான். தூங்கமாட்டான்' என்று சொல்வார்கள். இப்படிச் சொல்வதன் மூலம் தங்களது முக்கியத்துவத்தை நிலைநிறுத்த முயற்சிக்கிறார்கள். ஆனால் உண்மையில் பெற்றோருக்கு இத்தகைய ஸ்திரத்தன்மை என்பது கிடையாது. எனவே எப்போதும் குழந்தைகளை நாம் இல்லாவிட்டாலும் தைரியமாகவும், தன்னம்பிக்கையோடும், சுயத்தோடும் வளர்க்க வேண்டும். குழந்தைகளுக்கு நாம் சேர்த்து வைக்க வேண்டிய சொத்து, சம்பத்து எல்லாம் இதுதான். தவிர, உங்கள் குழந்தைகள் துணிவாக ஒரு செயலைச் செய்தால், 'உனக்கு என்ன இத்தனை தைரியம் இந்த வயதில்?' என்று அவர்களின் தன்னம்பிக்கையில் அடிக்காதீர்கள். செய்யும் தவறுகளை மட்டும் சுட்டிக் காட்டுங்கள். கணிப்பொறி யுகத்தில் நீங்கள் தூரத்தில் இருந்து கொண்டே, உங்கள் குழந்தைகளோடு அடிக்கடி தொடர்பு கொண்டால், இருந்தும் இல்லாத நிலையைப் போக்க முடியும்!

தொடர்பற்று இருந்தால், அவர்களுடைய முன்னேற்றத்தைத் தடைசெய்து, அவர்களின் செயல்திறனைக் குறைத்து விடும்.

- ஜே.ஜோ.

# கதை சொல்லி தூங்க வைக்க முடியுமா?

● வத்சலா,
கெங்காபுரம்

? 'சூப்பர் ஸ்டார்' பதவி யாருக்கும் நிரந்தரம் அல்ல' என்று ரஜினி கூறுகிறாரே?

! 1) ஒவ்வொரு கால கட்டத்திலும் ஒவ்வொரு சூப்பர் ஸ்டார் வருவார், போவார். யாரும் நிரந்தர சூப்பர் ஸ்டார் அல்ல (அரசியல்?)

2) ரஜினி விக்ரமுக்குப் போட்டி அல்ல; ரஜினி ரஜினிக்கேதான் போட்டி. அப்படியேதான் விக்ரமும். முந்தைய படத்தைவிட, அடுத்த படம் சூப்பராக அமைய வேண்டும் என்பதில்தான் போட்டி.

3) விக்ரமுக்கு மனம் திறந்த பாராட்டு.

- ரஜினியின் த்ரீ இன் ஒன் பேச்சு short, sweat and sensible.



• த்ரீ இன் ஒன்!

● ஷோபனாதாசன்,
நாட்டரசன்கோட்டை

? 'சோனியா காந்தி எதிர்க்கட்சித் தலைவர் என்ற முறையில் பொறுப்புடன் செயல்படுகிறார்' என்று வாஜ்பாய் புகழாரம் சூட்டியுள்ளாரே...?

! நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை இதே தெளிவோடு சந்தித்திருந்தால் எவ்வளவு கௌரவமாய் இருந்திருக்கும்!

● எஸ். மகேஷ், நாக்பூர்.

? மத்திய அமைச்சர் கண்ணப்பன் பேச்சு, நாட்டின் பாதுகாப்புக்குக் குந்தகமானது என்கிறாரே ஜெயலலிதா?

! பொடா சட்டம் நமது நாட்டில் பயங்கரவாதத்தைக் கட்டுப்படுத்த ஏற்பட்டது. அயல்நாட்டில் உள்ள ஒரு தீவிரவாத அமைப்புக்குத் தார்மிக ஆதரவு மட்டுமே தருவதுகூட தவறு என்றால், பாலஸ்தீன தீவிரவாதிகளுக்கு ஆதரவு தரும் மத்திய அரசே தப்புத்தானே செய்கிறது!



• பொடா....



• ... பரிதாபம்!

● வஸந்தா ராஜகோபாலன்,
சென்னை - 45

? சினிமாத் துறையைச் சார்ந்தவர்களிடையே கணவன் - மனைவி பிரிவு அதிகமாகி வருகிறதே?

! மணமுறிவு என்பது பொதுவாகவே அதிகரித்து வருகிறது. காரணம், சகிப்புத் தன்மை குறைந்து வருகிறது. திரைத்துறை பிரபலங்கள் விஷயத்தில் அது செய்தியாகிறது!

● எஸ். சுவாமிநாதன், மன்னார்குடி.

? அன்னிய முதலீட்டின் காரணமாக இந்தியப் பத்திரிகைகளின் தரம் உயரும் என்று தராசு கருதுகிறதா...?

! அச்சுத் தரத்தில் உயரலாம்; உள்ளடக்கத்தில் உயராது. இப்போதே தரம் தாழ்ந்து வரும் பத்திரிகைகள் மேலும் கெடும். லாபம் ஒன்று மட்டுமே நோக்கமாகும்.

● ஆர். ஜெயச்சந்திரன்,
தேனேரிப்பட்டி

? நடப்பது மக்களாட்சியா? சட்டத்தின் ஆட்சியா? சட்டத்துக்குட்பட்ட மக்களாட்சியா...? அல்லது மக்களாட்சிக்கு உட்பட்ட சட்டத்தின் ஆட்சியா...? இல்லை எதுவுமே இல்லாத கம்பெனி நிர்வாகமா...?

! நடக்க வேண்டியது சட்டத்துக்கு உட்பட்ட மக்கள் ஆட்சி; நடப்பது, சட்டத்தை வளைக்கும் சர்வாதிகார ஆட்சி.

● இ. கஸ்தூரி, அகஸ்தியர்பட்டி.

? இன்றையச் சூழலில் இந்தியாவின் தலையாய பிரச்னை எது...?

! வேறென்ன, புள்ளி ராஜாவுக்கு

எய்ட்ஸ் வருமா என்பதுதான்! ஆபாசக் களஞ்சியமான இத்தகைய விளம்பரம், பிரச்னையைத் தீர்ப்பதற்குப் பதில் வளர்க்கத்தான் உதவும்.

**● விஜயலக்ஷ்மி முருகேசன், பொழிச்சலூர்.**

**? கதை சொல்லித் தூங்க வைக்க முடியுமா...? எப்போது...?**

! குறைந்த பட்சம் இன்னும் இரண்டு வருஷத்துக்கு.

**● நகை தி. மகராசன், கடமலைக்குண்டு.**

**? தமிழ் சினிமாவில் புது முகங்களின் வரவால் கதை பிழைத்தது என்று சொல்லலாமா...?**

! வெறும் கதை மட்டும் பிழைத்தால் சந்தோஷம். சதையும் சேரும்போது தானே பாதை மாறிப் போகிறது.

**● பொன்விழி, அன்னூர்**

**? நக்கீரன் கோபால் விஷயத்தில் தமிழக அரசு செய்வது நியாயமா...?**

! தமிழக அரசு நியாயமாக நடக்கிறதா? உயர்நீதிமன்ற ஜாமீன் தீர்ப்பை உச்சநீதிமன்றம் மாற்றி அமைத்தது சரியா என்றெல்லாம் விவாதிப்பதை விட, பொடா சட்டம் மிகக் கொடுமையானது என்று கூறுவதுதான் பொருத்தம். அது பயங்கரவாதத்தை மட்டும் எதிர்க்கவில்லை; ஜனநாயகத்தையே குழி தோண்டிப் புதைப்பதாக அமைந்துள்ளது. திருத்தங்கள் அவசியம் தேவை.

**● ரொசாரியோ ரவிச்சந்திரன், கிழக்கு தாம்பரம். ✱**

**? ஸ்டேன்ஸ் கொலை வழக்கில் தாராசிங்குக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறதே; இந்தத் தீர்ப்பையும் எதிர்த்து கருணை காட்ட வேண்டும் என்று விண்ணப்பிப்பார்களா?**

! சட்டம் கருணை காட்டுகிறதோ இல்லையோ, மனம் கருணை காட்டிவிட்டது. 'சட்டத்தின் நடைமுறைக்கும் மனத்தின் மன்னிப்புக்கும் தொடர்பில்லை. சட்டம் தண்டிப்பதால் மனம் மன்னிக்காமல் விட்டு விடாது' என்று ஸ்டேன்ஸ் பாதிரியாரின் மனைவி சொல்லியிருக்கிறார்! நம் நெஞ்சம் நெகிழ்கிறது.

**● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 21.**

**? தமிழக காங்கிரஸில் மீண்டும் தலைமை மாற்றம் வருகிறதாமே?**

! அதற்கு முன்னதாக இரண்டு எம்.பி பதவிகளில் மாற்றம் வந்துவிட்டது. இடைத்தேர்தல் முடிவுகள் ஏமாற்றம் அளிப்பதாக சோனியா கூறுகிறார். உட்கட்சிப் பூசல்களுக்கு அவர் முடிவு கட்டாத வரையில் ஏமாற்றங்கள் தொடரும்.



• பொறுப்பும்...

**● டேவிட் ராஜா, சென்னை - 114.**

**? விடலைகளை வீணடிப்பது எது?**

! காதல், போதை, சினிமா என நிறையவே இருந்தாலும், முதலிடம் சினிமாவுக்குத்தான். ஆந்திராவில் சிரஞ்சீவி நடித்த புதிய திரைப் படத்தைப் பார்க்க ஏற்பட்ட தள்ளுமுள்ளு நெரிசலில் இரண்டு இளைஞர்கள் இறந்தே போக, நிறையப் பேருக்கு பலத்த காயம்! படத்தின் பெயர் 'தாகூர்'. சாந்தி நிகேதனுக்கும் இந்த சினிமாவுக்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்கும்னு நினைக்கறீங்க...?



• .... புகழும்!

❒ ரூ 100/-
பரிசு பெறுபவர்

ஆர். ஜெயச்சந்திரன்
4/177, புரஃபசர் கார்டன்ஸ்,
தேனேரிப்பட்டி,
அகூர் அஞ்சல்,
திருச்சி 620 015

✱ ரூ 50/- பரிசு பெறுபவர்:

ரொசாரியோ ரவிச்சந்திரன்,
கிழக்கு தாம்பரம்.

**ஹோ**சூரிலிருந்து என் அன்புள்ள தாத்தா என்.எஸ்.கே. (கிருஷ்ணன் அல்ல, கிருஷ்ணசாமி) எழுதியிருக்கிறார் :

அன்பு பேத்தி.

கல்கி 21.9.2003 கடைசிக் குறிப்புப் பற்றி.. (அதாவது செய்தித் தாளில் வெளியிடப்படும் அஞ்சலி விளம்பரங்கள்)

இது விளம்பர யுகம். இரண்டு காரணங்களில் ஒன்று : பரம்பரைத் தொழிலின் மூலகாரணகர்த்தாவுக்கு நன்றி செலுத்தி. அதன் மூலம் பிறர் தம்மைத் தவறாக நினையாமல் காத்துக் கொள்ளுதல்.

இரண்டு : அனுபவிக்கும் பாரம்பரிய உரிமை அல்லது சொத்தை ஸ்திரப்படுத்திக் கொள்ளுதல் - நிலைநாட்டிக் கொள்ளுதல்.

உண்மையான நன்றி விளம்பரம் ஒரு விழுக்காடுதான் இருக்கும் என்பது என்.எஸ்.கே. தாத்தாவின் தீர்மானமான அபிப்பிராயம்.

உண்மையான நன்றியெனில், அதற்கு விளம்பரம் எதற்கு என்பதுதானே கேள்வியே!

சுமி மன்ற உறுப்பினராக என்ன தகுதி வேண்டும் என்றும் கேட்கிறார் தாத்தா... பதில் இதுதான் :

அங்காடி மூலம் விளம்பரம் கிடைக்கும் என்ற எதிர்பார்ப்பு இல்லாமல் செய்தி / அனுபவங்களைப் பகிர்வோர், சந்தா இன்றியே உறுப்பினர்களாகிவிடுவார்கள்.

சென்னை - 78, ராதா ஸ்ரீதர், தாத்தாவின் கருத்தைக் கிட்டத்தட்ட வழிமொழிகிறார். 'நெருங்கிய குடும்ப உறுப்பினர்களுக்கும் நண்பர்களுக்கும் மட்டும் அஞ்சல் மூலம் அஞ்சலியைத் தெரிவித்தாலே போதுமே. விளம்பரம் வெளியிடுவதால் வெளியிடுவோருக்கு மகிழ்ச்சி ஏற்படலாம். ஆனால் அவர்களோடு



* டேனியல் ராட் கிளிஃப்

தொடர்பே இல்லாத லட்சோப லட்சம் பேருக்கு என்ன பயன்?' என்று கேட்கிறார்.

சென்னை - 92 சௌந்தரராஜன் 'வீண் டம்பம்' என்று இந்தப் பழக்கத்தை முத்திரை குத்த, அதே சென்னை - 92ஐச் சேர்ந்த கிருஷ்ண ராஜ்கோபால் (உலகம் எவ்வளவு சிறியது பாருங்கள்...) 'இதில் என்ன புதிர் உள்ளது? பணம் இருக்கிறதால் விளம்பரம் போடுகிறார்கள். எனக்குக் கூடத்தான் பதினான்கு வருடங்களாக ஆசை, பணம் இல்லாததால் மனதளவில் பதிப்பித்துக் கொள்கிறேன்' என்கிறார். கிருஷ்ண ராஜ் கோபாலின் 'வனவாசம்' சீக்கிரமே முடிவுக்கு வந்து, அவர் ஆசை நிறைவேற வாழ்த்துவோம். (உங்களுக்கு ஒரு அடிக்குறிப்பு காத்திருக்கிறது கிருஷ்ணராஜ் கோபால்; மறவாமல் படியுங்கள்....)

# இளமையோடு திரும்புவேன்!

**ஆ**சைகளுக்கு அளவில்லை என்பதால்தான் 'ஈசனோடாயினும் ஆசை அறுமின்' என்று திருமூலர் கடும் எச்சரிக்கை செய்து போனார் போலும். இதே திருமூலர்தான் 'அன்பே சிவம்' என்றும் சொன்னார். அப்படியானால், அன்பென்பது ஆசைகளைக் கடந்து நிற்கும் உயர்நிலையாகிவிடுகிறது அல்லவா!

ஆங்கில உபன்யாஸகர் பிரேமா பாண்டுரங்கன், இதை வெகு அழகாக ஓர் இடத்தில் விளக்கியுள்ளார் :

ஆசை அல்லது பற்று நம்மைப் பற்றிக் கொண்டால், கூடவே பாரபட்சமும் நம்மை ஆட்கொள்கிறது. நம் கருத்தோடு ஒத்துவராதவர்களை நாம் வெறுக்கவும் ஒதுக்கவும் ஆரம்பிக்கிறோம். நமது நண்பர்களையும் எதிரிகளையும் நமது ஆசையே நிர்ணயிக்க ஆரம்பித்துவிடுகிறது. ஆனால், பற்றற்ற நிலை, விருப்பு - வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டு நம்மை இயங்க

## சுமி பல்பொருள் அங்காடி

அனுமதிக்கிறது.

துறவிகளுக்கு மட்டும்தான் இது இயலும் என்று நாம் நினைக்கவிடாமல் செய்திருக்கிறார், இவ்வாண்டின் இலக்கிய நோபல் பரிசு பெறும் ஜான் மாக்வெல் கோட்ஸி. *1993, 1999* - இரண்டு ஆண்டுகளிலும் இவருக்கு அளிக்கப்பட்ட புக்கர் பரிசை, மனிதர் போய் வாங்கிக் கொள்ளவேயில்லை! தென்னாப்பிரிக்காக்காரர். எட்டு நாவல்களும் எண்ணிலடங்கா விஷயங்களைக் குறித்து ஏராளமான கட்டுரைகளும் எழுதியிருக்கிறாராம். ஆழமான அலசல்களுக்குப் பெயர் போனவர்; ஒரு நூலைப் போல் இவரது இன்னொரு நூல் அமையாது - புதிய அதிசயங்களை உள்ளடக்கியிருக்கும், என்று நோபல் அமைப்புச் செயலர் புகழாரம் சூட்டியிருக்கிறார். எழுத்தை விரும்பும் கோட்ஸி விளம்பரம் விரும்பாதவர். பற்றற்ற உயர் நிலை!

**வி**ரும்பாத விளம்பரங்கள் தேடி வந்தால் என்ன செய்யலாம்...? ஹாரி பாட்டர் திரைப்பட நட்சத்திரம் டேனியல் ராட்கிளிஃப் அடிபட்டுப் படுத்துக்கிடக்கிறார்... அடுத்த ஆண்டு வெளிவரவிருக்கும் பாட்டர் படத்தில் அவர் நடிக்கப் போவதில்லை என்று, இணையதளம் முழுதும் 'சத்திய'ச் செய்திகள் பரப்பப்பட்டுள்ளன. இதற்கு ராட்கிளிஃப் தரப்பிலிருந்து மறுப்பு தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் வதந்திகள் அவ்வளவு எளிதில் ஓய்வதில்லையே!

உள்ளூர் வதந்திகளின்படி, மியூசிக் அகாடமி வளாகத்திலிருந்து குறிப்பிட்ட கலைஞர்களிடம் மட்டும் டிசம்பர் இசைவிழாவுக்குத் தேதி பெற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறதாம். இது அதிகாரபூர்வமான ஏற்பாடு அல்ல என்று கூறியே, இத் தேதிகள் பெறப்பட்டுள்ளனவாம். இசைவிழா நடத்த நீதிமன்றம் அனுமதி கொடுத்துவிட்டது. அகாடமி தரப்பு தான் கிணற்றில் விழுந்த கல்லாக இறுக்கம் காக்கிறது. உயர்ந்த குறிக்கோள்களுடன் கூடிய ஒரு நல்ல நிறுவனம், இதுபோல் ஏன் கலகலத்துப் போய் நீதிமன்ற வழக்கு, விசாரணை, நெருக்கடிகளுக்கு உள்ளாக வேண்டும்?... ஏதோ ஒரு கட்டத்தில் நிறுவனத்தைக் காட்டிலும், அதை இயக்கும் அல்லது நிர்வகிக்கும் மனிதர்கள் முக்கியஸ்தர்களாகிவிடுகிறார்கள் அல்லது ஆக்கப்படுகிறார்கள். அதன் விளைவுதான் இத்தகைய விபத்துகள் என்று தோன்றுகிறது. இது குறித்து கருத்துக் கூறுவோர் அங்காடிக்குள் நுழையலாம்.

**ச**மீப காலமாக சுமி வயதுக்கு மீறிய விஷயங்களில் மட்டுமே கவனம் செலுத்துவதாகக் குற்றம் சாட்டியிருக்கிறது கல்கி ஆசிரியர் குழு.

திருந்தாவிட்டால் கல்தாதான் என்கிற



★ ஜான் மாக்ஸ்வெல் கோட்ஸி

எச்சரிக்கையாக இதனை எடுத்துக் கொள்கிறேன். கொஞ்சம் நெடிய சுவாசம் தேவைப்படுவதால், இனி பல்பொருள் அங்காடி மாதமிருமுறையே கடைவிரிக்கும் - நிச்சயம் இளமையாக!

**- சுமி**

*★ கிருஷ்ண ராஜ்கோபாலுக்கான அடிக்குறிப்பு : நீங்கள் உபயோகித்துள்ள 'வைட்டமின் - எம்' என்ற பிரயோகம் சிரஞ்சீவித்துவம் வாய்ந்தது என்றாலும், எனது அசட்டு விரதம் காரணமாக அங்காடிக்குள் அதை அனுமதிக்க இயலாது போயிற்று. நிறைய வைட்டமின் - எம் சேரவும் வாழ்த்துக்கள்!*



# தூதரான 'வா'!





* கங்குலி



* அல்தியா கிப்சன்

**உ**லக அரங்கில் 6.70 மீட்டர்களைத் தாண்டி இந்தியாவுக்கு வெண்கலப் பதக்கம் வாங்கித் தந்தவர் அஞ்சு ஜார்ஜ் என்பது நாமறிந்ததுதான். ஆனால் வேறொரு செய்தியும் இப்போது கசிந்திருக்கிறது. நீளம் தாண்டுதலில் ஒவ்வொரு நடகள வீராங்கனைக்கும் ஒன்றுக்கு மேற்பட்ட வாய்ப்புகள் அளிக்கப்பட்டு, அதில் அவர் மிக அதிக அளவுக்குத் தாண்டிய தூரம்தான் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படும். அப்படிப்பட்ட ஒரு முயற்சியில் பாரிஸில் 6.90 மீட்டர் தாண்டினாராம் அஞ்சு. ஆனால் அது கணக்கில் எடுத்துக் கொள்ளப்படமாட்டாது என்று கூறிவிட்டார்கள். காரணம், குதிக்கத் தொடங்கும் போது அவரது பாதம் எல்லைக் கோட்டை மிதித்துவிட்டது என்பதுதான். ஆனால் 'அது சந்தேகத்திற்குரிய முடிவு. இது பற்றி அதிகாரிகளிடம் அஞ்சு விளக்கம் கேட்டிருக்கலாம்' என்று இப்போது வருத்தப்படுகிறார் ஜார்ஜ்.

**பி**ரபல நீச்சல் வீரர் இயான் தோர்பே அந்தப் பதவியை வகித்தார். பிறகு ஸர்ஃபிங் சாம்பியன் லேன் பீச்லி அந்தப் பொறுப்பை ஏற்றார். இப்போது கிரிக்கெட் பிரபலம் ஸ்டீவ் வாவுக்கு அந்த இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. என்றாலும் இந்தப் பொறுப்பு விளையாட்டுத் தொடர்பானது அல்ல. ஆஸ்திரேலிய அரசு இவர்களைச் 'சுற்றுலா நல்லெண்ணத் தூதர்'களாக நியமித்துள்ளது. அதுவும் ஸ்டீவ் வா இந்தியாவுக்கான ஸ்போர்ட் நல்லெண்ணத் தூதராக நியமிக்கப்பட்டிருக்கிறார். 'இந்தியாவிலிருந்து வெளிநாடு செல்ல விரும்பும் இந்தியர்களின் எண்ணிக்கை பெருகி வருகிறது. அவர்களை ஈர்ப்பதற்காகத்தான் இந்த நியமனம்' என்றிருக்கிறது ஆஸ்திரேலிய அரசு.

**சி**ல வருடங்களாகவே படுத்த படுக்கையாக இருந்த அல்தியா கிப்சன் தமது எழுபத்தியாறாவது வயதில் சமீபத்தில் இறந்தார். யு. எஸ். ஓப்பன் சாம்பியன் ஷிப்பை வென்ற முதல் கறுப்பர் இனப் பெண்மணி என்ற இவரது சரித்திரப் பெருமை, ஒரு நாளும் இறந்துவிடாது. இன்றைய செரினா, வீனஸ் வில்லியம்களுக்கு இவரே வழிகாட்டி.

**ந**ம் நாட்டுக் குத்துச்சண்டை சாம்பியனின் பெயரும் முகமது அலிதான். ஆனால் உலகப் புகழ் அலி ஹெவிவெய்ட் சாம்பியன் என்றால் நம்மவர் ஃப்ளைவெயிட் பிரிவில் சாம்பியன். அதாவது ஐம்பது கிலோவை விடக் குறைவான எடை கொண்டவர்கள் அடங்கிய பிரிவு. காமன்வெல்த் போட்டிகளில் முதலிடம் பிடித்த இவரது இலக்கு 2004ல் ஏதென்ஸில் நடக்கவிருக்கும் ஒலிம்பிக்ஸ். இன்று வரை மகனின் போட்டிகளைப் பார்த்ததில்லையாம் இவரது அம்மா. 'மகன் அடிபடுவதை எப்படிப் பார்ப்பது?' என்று துடிக்கிறார்.

**பெ**ங்களூரிலுள்ள ரவுண்ட் டேபிள் பள்ளிக்குச் சமீபத்தில் சென்றிருந்தார்கள் சௌரவ் கங்குலியும் கிர்மானியும். இரண்டு வி.ஐ.பிக்கள் வருவார்கள் என்று மட்டுமே அறிவிக்கப்பட்டிருந்ததாம். கங்குலியைக் கண்டதும் பிறவிப் பயன் பெற்றதாகக் கருதி மாணவர்கள் மகிழ்ச்சி பெற, கங்குலி அவர்களுக்கு அளித்த அட்வைஸ் இதுதான்: விளையாட்டெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். படிப்பில் முழு கவனத்தையும் செலுத்துங்கள்.

- குல்லூ

# 91 வருட வரலாறு!

**1956**ல் நடந்த தி.மு.க மாநாட்டின் போது, தேர்தலில் போட்டியிடுவதா, வேண்டாமா என்பதைத் தீர்மானிக்க, தொண்டர்களிடம் வாக்கெடுப்பு நடத்த முடிவு செய்யப்பட்டது. தேர்தலில் போட்டியிடலாம் என்று சொன்ன தொண்டர்களின் எண்ணிக்கை எவ்வளவு தெரியுமா? 56948! "போட்டியிடத் தேவையில்லை; சமூக சீர்திருத்த இயக்கமாகவே பணியைத் தொடங்குவோம்!" என்று சொன்னவர்கள் 4203. இது போன்ற அரிய தகவல்களைக் கொண்டிருக்கிறது அண்ணா அறிவாலயத்தில் அமைந்துள்ள திராவிட இயக்க வரலாறு காட்சியகம். சுமார் தொள்ளாயிரம் சதுர அடியில், தொண்ணூற்றோரு வருட திராவிட இயக்க வரலாற்றைப் புகைப்படங்களாகவும், ஓவியங்களாகவும், பத்திரிகைச் செய்திகளாகவும் அழகாகச் சொல்லியிருக்கிறார்கள். செலவு சுமார் ஒன்றரைக் கோடி. இருநூற்றி நாற்பத்தியிரண்டு ஆட்கள், சுமார் முப்பது நாட்கள் இரவு பகலாக வேலை செய்து கலைநயத்தோடு இந்தக் குளிர் சாதனக் காட்சியரங்கை உருவாக்கியிருக்கிறார்கள்.



• பரிசுப் பொருட்கள்...



• வைரக் கிரீடம்

1950ல் நடைபெற்ற தி.மு.க நெல்லை மாவட்ட மாநாட்டை, தனது இருபத்தியாறாவது வயதிலேயே தலைமை தாங்கி நடத்தியவர் கலைஞர் என்பதைத் தெரிந்து கொள்கிறோம்.

தலைமறைவாக சிவனடியார் வேஷத்தில் இருக்கும் கம்யூனிஸ்ட் தலைவர் ஜீவானந்தத்தை, கலைவாணர் என்.எஸ்.கே, கலைஞரிடம் அறிமுகப்படுத்தும் காட்சி, அழகிய ஓவியமாகத் திட்டப்பட்டிருக்கிறது. திராவிட இயக்கங்களின் சார்பாக வெளிவந்த இருநூற்றி எழுபத்திரண்டு பத்திரிகைகளின் முகப்புகள் அழகாக லேமினேட் செய்யப்பட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. கலைஞருக்குக் கொடுக்கப்பட்ட ஆயிரக்கணக்கான பரிசுப் பொருட்கள், மிக அழகாக அடுக்கப்பட்டு காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கின்றன. கலைஞர் பவள விழாவின்போது, மூப்பனார் போட்ட எழுபத்தைந்து பவுன் காசு மாலை, குமரி மாவட்ட திமுக கொடுத்த வைரக் கிரீடம், தங்கக் கலைஞர் சிலை என்று லட்சக்கணக்கான மதிப்புள்ள பரிசுப் பொருட்களும், கண்ணாடி ஷோ-கேஸ்களில் கண்ணைக் கவருமாறு வைக்கப்பட்டிருக்கின்றன.



''கலைஞரின் ஆலோசனைப்படிதான் அமைத்திருக்கிறோம். நிறையப் படங்களில் உள்ள பிரமுகர்களை அடையாளம் சொன்னவர் அவர்தான். காலை நான்கு, ஐந்து மணிக்கெல்லாம் கூட, நடக்கும் வேலைகளைக் கண்காணிக்க அவர் வந்து விடுவார். ஒருமுறை வேலையாட்களின் சுறுசுறுப்பைக் கண்டு ஐந்நூறு ரூபாய் அன்பளிப்பு கொடுத்தார். அதை வேண்டாம் என்று மறுத்த அவர்கள், 'உங்கள் புத்தகம் ஒன்றில் கையெழுத்துப் போட்டுக் கொடுங்கள்' என்று கேட்டவுடன், நாங்கள் கொஞ்சம் அசந்துவிட்டோம்'' என்கிறார் துணைப் பொதுச்செயலாளர் ஸ்டாலின்.

- ஸ்ரீநி

படங்கள்: மீடியா ராமு



# ஜொல்லு மல்லு

—கதிர்

மாமி, மாமி, கொலு வெச்ச சுண்டல்.

கரெக்டா சுண்டல் வாங்க வந்திட்டியே.

ம்... கொலு அன்னைக்குக்கூட இவ்வளவு டைட்டா ஒரு ஜீன்ஸ், டி ஷர்ட்? இதைக் கழட்டுவியா... இல்ல உடம்புல இருந்து உறிச்சி எடுப்பியா...?

சுண்டல் வாங்க வந்த உனக்கு கிண்டல் எதுக்கு?



















**Peek-a-Block™ Range.** பிரியுங்கள். குழந்தையை ஒரு புது உலகிற்கு அறிமுகப்படுத்துங்கள். நகரும் பிராணிகள் தட்டாமாலை சுற்றும், ஜொலிக்கும் மற்றும் மின்னும் பல பொம்மைகள் வழவழப்பான உணர்வு விதவிதமான ஒலிகள் ஒவ்வொரு ப்ளாக்கும் உணர்ச்சிகளையும் குழந்தையின் ஆர்வத்தையும் தூண்டும். எங்கள் நீண்ட சீரணியில் இது ஒரு சிறிய வரிசை, இந்த சீரணிதான் எங்களை கடந்த 70 ஆண்டுகளாக சிசு மற்றும் ப்ரீஸ்கூல் பொம்மைகளில் உலகின் முன்னணி பெயராக ஆக்கியுள்ளது.

**உங்கள் குழந்தைக்கு ஒரு சிறப்பான ஆரம்பத்தை தாருங்கள்.**

புதிய 2003 Fisher-Price கேட்லாக் பெற எழுதவும் : Fisher-Price, c/o Mattel Toys (I) Pvt. Ltd., P. O. Box 16356, Lower Parel, Mumbai-400 013. எல்லா சில்லறை விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும்.

**Fisher-Price®**

சிசு மற்றும் ப்ரீஸ்கூல் பொம்மைகள்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka